# கல்கி பொருளடக்கம்


| | | |
|---|---|---|
| மலர் 13<br>இதழ் 29 | 1954 பிப்ரவரி 14 | விஜய௵<br>மாசி 3 |




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

## அவர் வேண்டுகோள்!




அகில இந்தியத் தலைவர்கள் தேர்தல் பிரசாரத்துக்காகத் திருவாங்கூர் - கொச்சி ராஜ்யத்துக்கு விஜயம் செய்திருக்கிறார்கள்.


என் கண்மணி...
ஒரு நாடோடியின்
மகத்தான
தியாகத்தைச்
சித்தரிக்கும் கதை..
இப்பொழுது
சென்னை
வெலிங்டன்
பிரபாத்
சரஸ்வதி
மூன்று தியேட்டர்களிலும்
மற்றும்
தென்னாடெங்கும்
நடைபெறுகிறது...
ஜெமினி
சித்திரம்...

கல்கி

மலர் 13 } தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் { இதழ் 29

# நால்வரின் கையில் நானிலத்தின் விதி!

ஏழு கடல்களால் சூழப்பட்டு, சுமார் ஆறு கோடி சதுர மைல் பரப்புள்ள இந்தப் பரந்த உலகத்தின் விதி இன்று நாலு மனிதர்களின் கையில் இருக்கிறது!

அவர்கள் ஒன்று பட்டால், உலகம் முழுவதும் யுத்த பீதி ஒழிந்து அமைதியும் ஆனந்தமும் ஏற்படும்படி செய்யலாம்.

அவர்கள் நிரந்தரமாக முரண்பட்டால் அணுகுண்டு மகா யுத்தத்தை ஆரம்பித்து அகில உலகமும் அழியும்படி செய்யலாம்.

அவர்கள் எந்தப் பாதையில் செல்ல விரும்புகிறார்கள் என்பது இப்போது நடைபெற்று வரும் பர்லின் மகாநாட்டின் மூலம் ஓரளவு தெளிவாகும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

சென்ற மகாயுத்தம் முடிந்த உடனேயே, வெற்றி பெற்றுள்ள வல்லரசுகள் உலக சமாதானத்துக்கான அஸ்திவாரத்தை அமைத்திருக்க முடியும்.

ஆனால், அதற்கு மாறாக அவைகள் மற்றொரு யுத்தத்துக்கான விதையை விதைத்தன.

அவைகளால் பிளக்கப்பட்ட ஒவ்வொரு நாடும், இன்று மற்றொரு மகாயுத்தத்தைத் தூண்டக் கூடிய நிலைக்களமாக அமைந்திருக்கிறது.

கொரியாவை, வட கொரியா, தென் கொரியா என்று பிளந்தது அங்கு கோரமான உள்நாட்டு யுத்தத்தை உண்டு பண்ணியது.

அந்த நாட்டில் தற்காலிகமாகச் சமாதானம் ஏற்பட்டுள்ளதெனினும், அது எவ்வளவு காலம் நீடிக்கும் என்பது நிச்சயமில்லாமல் இருக்கிறது.

இரண்டாவது உலக யுத்தத்தின் இறுதியில் ஜெர்மனியையும் அவ்வாறே மேற்கு ஜெர்மனி என்றும் கிழக்கு ஜெர்மனி என்றும் பிரித்தனர்.

பர்லினைத் தலை நகராகக் கொண்ட கிழக்கு ஜெர்மனியை ருஷ்யத் துருப்புகள் ஆக்கிரமித்துக் கொண்டன.

பான் நகரைத் தலைமை ஸ்தானமாகக் கொண்ட மேற்கு ஜெர்மனியை அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ் மூன்று நாடுகளும் பிரித்துக் கொண்டு தங்கள் ஆதிக்கத்தைச் செலுத்த முற்பட்டன.

இவ்வாறு வல்லரசுகள் மற்ற நாடுகளைப் பிளந்ததன் மூலம், தங்களுக்குள்ளேயே பிளவைச் சிருஷ்டித்துக் கொண்டு விட்டன எனலாம்.

இந்தப் பிளவும் வேற்றுமையும் தான் இன்று உலக அமைதியைக் குட்டிச் சுவராக்கும் காளான்களாக இருந்து வருகின்றன.

எனவே பிளக்கப்பட்ட ஜெர்மனியை மறுபடியும் ஐக்கியப் படுத்த வேண்டிய அவசியத்தை வல்லரசுகள் உணர்ந்து கொண்டுள்ளன.

அந்தக் காரியத்தை நிறைவேற்றும் நோக்கத்துடனேயே இப்போது பர்லினில் ருஷ்யா, அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ் தேசங்களின் பிரதிநிதிகளும் வெளிநாட்டு மந்திரிகளுமான ஸ்ரீ மாலடாவ், ஸ்ரீ டல்லஸ், ஸ்ரீ ஈடன், ஸ்ரீ பிடால்ட் இவர்கள் மகாநாடு கூடி விவாதித்து வருகிறார்கள்.

ஜெர்மனி மறுபடியும் ஐக்கியம் அடைய வேண்டும் என்ற விஷயத்தில் வல்லரசுகளுக்குள் அபிப்பிராய பேதம் இல்லை.

ஆனால், அந்த நல்ல காரியத்தை எப்படி நிறைவேற்றுவது என்பது பற்றியே இப்போது வேற்றுமை ஏற்பட்டிருக்கிறது.

ஜெர்மனி முழுதும் முதலில் யாதொரு கட்டுப்பாடும் தடையுமின்றித் தேர்தல் நடைபெற வேண்டும்; தேர்தலுக்குப் பின் அகில ஜெர்மன் சர்க்கார் அமைக்கப்பட வேண்டும் என்று அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ் இந்த மூன்று வல்லரசுகளும் கூறி வருகின்றன.

கிழக்கு ஜெர்மனியும் மேற்கு ஜெர்மனியும் சேர்ந்து முதலில் தற்காலிகமாக அகில ஜெர்மன் சர்க்காரை அமைக்க வேண்டும்; பிறகுதான் தேர்தல் நடைபெற வேண்டும் என்று ருஷ்யா யோசனை கூறுகிறது.

# விடுதலை கிடைத்தது!




கான் அப்துல் கபார்கானின் நடமாட்டத்திற்குள்ள 'ஓரளவு தடைகள்' படிப்படியாக அகற்றப்படும் என்று பாகிஸ்தான் பிரதமர் முகம்மது அலி கூறியிருக்கிறார்!

---

இரு சாராரும் தங்கள் தங்கள் கூற்றுக்குக் காரணங்களை எடுத்துச் சொல்லி வருகிறார்கள்.

இதைத் தவிர அணுசக்தி, ஆயுத பரிகரணம், இந்தோ-சீன யுத்தம், கொரியா மகாநாடு முதலிய உலக முக்கியத்துவம் வாய்ந்த பிரச்னைகளை ஒட்டியும் அவர்கள் விவாதித்து ஒரு முடிவுக்கு வர முயன்று வருகிறார்கள்.

ஜனவரி மாதம் 25-ந் தேதி பர்லினில் ஆரம்பமான வல்லரசுகள் மகாநாடு இதை நாம் எழுதும் வரையில் (பிப்ரவரி மாதம் 10-ந்தேதி) யாதொரு முடிவுமின்றி இழுத்துக் கொண்டு வருகிறது.

ஜெர்மனியின் ஐக்கியம் பற்றி அமெரிக்க கோஷ்டி கூறும் யோசனைகளை ருஷ்யா ஏற்க மறுக்கிறது; ருஷ்யா கூறும் ஒவ்வொரு திட்டத்தையும் அமெரிக்கா முதலிய வல்லரசுகள் நிராகரித்து வருகின்றன.

ஏற்கெனவே பகிரங்கமாகக் கூடிப் பேசிய வல்லரசுப் பிரதிநிதிகள் இப்போது இரகசியமாகப் பேசத் தொடங்கியிருக்கிறார்கள்.

இந்த நாலு வல்லரசுப் பிரதிநிதிகளும் யாதொரு இறுதியான முடிவும் செய்ய முடியாமல் இருப்பதற்குக் காரணம், அவர்களிடையே இரண்டு சதிகாரர்கள் புகுந்து கொண்டு விஷமம் செய்து வருவதுதான்.

அவர்களில் ஒருவர் ஸ்ரீமான் பயம்; மற்றவர் ஸ்ரீமான் சந்தேகம்.

ருஷ்யப் பிரதிநிதி ஸ்ரீ மாலடாவ் கூறுகிறபடி தேர்தலுக்கு முன் முதற் காரியமாக அகில ஜெர்மன் சர்க்காரை அமைத்தால், அதில் ருஷ்யாவின் ஆட்கள் புகுந்து கொண்டு ஜெர்மனி முழுவதும் தங்களுடைய ஆதிக்கம் ஏற்படும்படி செய்துவிடுவார்களோ என்று அமெரிக்க கோஷ்டி வல்லரசுகள் சந்தேகமும் பயமும் கொண்டுள்ளன.

முதலில் தேர்தலை நடத்த இசைந்து விட்டால், மற்ற வல்லரசுகள் தங்களுடைய பிரசாரத் திறமையால் ஜெர்மனி முழுவதும் ருஷ்யாவுக்கு எதிர்ப்பு ஏற்படும்படி செய்து விடும் என்று ருஷ்யா சந்தேகப்படுகிறது.

சென்ற மகா யுத்தத்தில் ஜெர்மனி படு வீழ்ச்சி அடைவதற்கு அமெரிக்காவும் பிரிட்டனும் தங்கள் சக்தி முழுவதையும் உபயோகித்தன.

அதே அமெரிக்காவும் பிரிட்டனும் இன்று மறுபடியும் ஜெர்மனியை ஆயுத வல்லமை பொருந்தியதாகச் செய்ய முனைந்திருக்கின்றன. ருஷ்யாவின் சக்தியும் செல்வாக்கும் ஐரோப்பா முழுவதும் வியாபித்து விடாமல் தடுப்பதற்குத்தான்!

ஜெர்மனி ராணுவ பலம் பெறுவதன் விளைவாக மறுபடியும் பழைய கதையாகி விட்டால் என்ன செய்வது என்ற பயமும் சந்தேகமும் ருஷ்யாவை ஆட்கொண்டிருக்கின்றன.

இவ்வாறாக உலகத்திலேயே மகா வல்லமை பொருந்திய இரண்டு வல்லரசுகளின் கையில் ஜெர்மன் மக்களின் எதிர்காலமும், உலக மக்களின் விதியும் ஊசலாடிக் கொண்டிருக்கின்றன.

அவைகளிடையே ஏற்பட்டுள்ள பீதியும் சந்தேகமும் மறைந்து மனமாற்றம் ஏற்படுவது ஜெர்மனியின் அதிர்ஷ்டத்தை, உலகத்தின் நல்ல காலத்தைப் பொறுத்திருக்கிறது போலும்!

# சரித்திரப் படிப்பினையை மறக்க வேண்டாம்

சரித்திரப் படிப்பினையைப் போன்ற சிறந்த படிப்பினை வேறு எதுவும் இல்லை. அது உலக நாடுகளின், மானிட வர்க்கத்தின் எதிர்காலத்தைக் காட்டும் உண்மையான கண்ணாடி என்று உலகப் பேரறிஞர்கள் கூறியுள்ளனர்.

சரித்திரப் படிப்பினையை அலட்சியம் செய்யும் எந்த நாடும் துன்பத்துக்கு உள்ளாக நேரும். போர் வெறி, சாம்ராஜ்ய ஆசை, கூடா நட்பு, மாற்றானுக்கு இடம் கொடுத்தல் போன்றவையால் பல நாடுகளும் பட்ட பாடுகளைச் சொல்லி முடியாது. அப்படியிருந்தும் மதம், மாற்சரியம், துவேஷம் காரணமாகச் சரித்திரப் படிப்பினையை மறந்து காரியங்களைச் செய்வோர் பல நாடுகளிலும் இருப்பது விந்தை அல்லவா!

அமெரிக்காவுக்கும் பாகிஸ்தானுக்கும் நடந்து வரும் ராணுவ பேரப் பேச்சை இது வரையில் பல நாடுகள் கண்டித்திருக்கின்றன. ஆனால், அவ்விஷயத்தைப் பற்றி இந்தியா கண்டிப்பதை மாத்திரமே பாகிஸ்தான் பத்திரிகைகளும் தலைவர்களும் அடிக்கடி குறிப்பிடுகின்றனர். அவ்வாறு கண்டிப்பதிலிருந்து இந்தியாவுக்குப் பாகிஸ்தான் மீது நல்லெண்ணம் இல்லை என்பது தெரிகிறது என்றும் அவர்கள் வியாக்கியானம் செய்கின்றனர். அந்தக் கூற்று வெறும் அபத்தம் என்பதற்கு, இப்போது அமெரிக்கா—பாக் ராணுவ பேரப் பேச்சை எகிப்து ஜனாதிபதி ஜெனரல் நாஜீப் கண்டித்திருப்பது உற்ற சான்று ஆகும்.

அமெரிக்காவுடன் பாகிஸ்தான் இராணுவ உடன்படிக்கை செய்து கொள்ளுமாயின், அதன் விளைவாக அரபு நாடுகளுக்கும் ஆசிய நாடுகளுக்கும் பிளவு ஏற்பட்டு விடும்; அரபு நாடுகள் ஆசிய நாடுகளின் ஆதரவையும் நட்பையும் இழந்து விடுமாயின், பின்னர் அவை மேற்கத்திய வல்லரசுகளின் கைப் பொம்மையாக இருக்கும்படியான துர்ப்பாக்கிய நிலைமை ஏற்பட்டு விடும் என்று ஜெனரல் நாஜீப் எச்சரித்துள்ளார்.

ஆசியா நாடுகளுடன் அதிக உறவு வைத்துக் கொள்ளவும் ஒத்துழைக்கவும் வேண்டும் என்று சென்ற வாரம் நடந்த அரபு நாடுகள் லீக்கும் தீர்மானித்திருக்கிறது.

எகிப்து ஜனாதிபதிக்கோ, அரபு நாடுகளுக்கோ பாகிஸ்தான் மீது எவ்விதக் கெட்ட எண்ணமும் இருப்பதற்கில்லை. எனவே, இந்தியாவைப் போல் அந்த நாடுகளும் அமெரிக்கா—பாக் இராணுவ பேரத்தை ஆட்சேபித்திருப்பதிலிருந்து, மேற்படி காரியம் ஆசியா, அரபு நாடுகளுக்கு நன்மை பயக்கக் கூடியது அல்ல, துன்பத்தையே கொடுக்கக் கூடியது என்பது நன்கு தெரிகிறது.

அமெரிக்க - பாகிஸ்தான் இராணுவ ஒப்பந்த பேரத்தைப் பற்றி ஜவாஹர்லால்ஜி குறிப்பிடும் போதெல்லாம் சரித்திரப் படிப்பினையைச் சுட்டிக் காட்டத் தவறுவதில்லை. மேற்படி இராணுவ பேரம் இறுதியில் எவ்வளவு விபரீதமாக வந்து முடியும் என்பதையும் நேருஜி அடிக்கடி தெளிவாகக் கூறி வருகிறார்.

உலகிலே மிகவும் சிறப்பு வாய்ந்த நாடுகளில் எகிப்தும் ஒன்று. பல நூற்றாண்டுகளாகச் சுதந்திரம் இழந்து அன்னியர் ஆதிக்கத்தினால் அல்லல் பட்டு வந்த நாடுகளின் கோஷ்டியில் எகிப்தையும் சேர்த்துக் கொள்ள வேண்டும். இன்று எகிப்து, முடியரசைத் தகர்த்து விட்டுக் குடியரசாகி யிருக்கிறது. ஆனால் இன்னும் கூட அந்த நாடு அன்னியர் ஆதிக்கத்திலிருந்து முற்றிலும் விடுதலை அடைந்தபாடில்லை. எகிப்தைச் சேர்ந்த சூயஸ் கால்வாய்ப் பகுதி இன்னும் அன்னியரின் ஆதிக்கத்தில்தான் இருந்து வருகிறது.

இந் நிலைமையில் சரித்திரப் படிப்பினையை மறந்து எகிப்து எவ்வாறு அமெரிக்க — பாக் இராணுவ ஒப்பந்த பேரத்தை ஆதரிக்க முடியும்! அது போலவே சரித்திர காலத்திலிருந்து அன்னியரின் ஆட்சிக் கொடுமைக்கு இலக்காகி அவஸ்தைப் பட்ட மற்ற அரபு நாடுகளும் அந்த ஒப்பந்த பேரத்தைக் கண்டு கலக்கம் அடைவது இயல்பே.

இவ்வாறாக, பெரும்பாலான ஆசியா நாடுகளும் அரபு நாடுகளும் எதிர்க்கும் ஒரு காரியத்தைப் பாகிஸ்தான் செய்ய முற்பட்டிருப்பதை நியாய புத்தி படைத்த எவரும் கண்டிக்காமல் இருக்க முடியாது. அவ்விஷயமாக இந்தியாவின் கண்டனத்தைப் பாகிஸ்தான் ஆட்சேபிப்பதோ, தங்களுடைய நியாயமற்ற காரியத்துக்கு விளக்கம் கூறி இந்தியாவைச் சமாதானப்படுத்தப் பாகிஸ்தான் தலைவர்கள் முற்படுவதோ சிறிதும் முறையற்ற செய்கையாகும்.

# சென்னைத் திட்டத்துக்கு அமோக ஆதரவு

'ஒரு வேளைப் பள்ளிக்கூடப் படிப்பு, மற்றொரு வேளை தொழில் பயிற்சி' என்ற ராஜாஜி சர்க்காரின் ஆரம்பக் கல்வித் திட்டத்துக்கு மேன் மேலும் ஆதரவு கிடைத்து வருவதைக் குறித்து, கல்வித் துறையில், குழந்தைக் குலத்தின் க்ஷேமத்தில் அக்கறை கொண்ட யாவரும் மகிழ்ச்சி அடைவார்கள் என்பதில் சந்தேகம் இல்லை.

பேராசிரியர் ஆர். வி. பருலேகர் தலைமையில் நியமிக்கப்பட்ட விசாரணைக் கமிட்டியார் சென்னை சர்க்கார் கல்வித் திட்டத்தை அலசி ஆராய்ந்து தங்கள் சிபாரிசுகள் அடங்கிய அறிக்கையை ஏற்கெனவே வெளியிட்டது ஞாபக மிருக்கலாம். அந்தத் திட்டத்தின் அடிப்படையான அம்சங்களை அக் கமிட்டியார் அப்படியே ஒப்புக் கொண்டிருந்தார்கள். அவற்றைச் செயலில் கொண்டு வருவதற்கான பல அரிய யோசனைகளையும் அவர்கள் கூறி யிருந்தார்கள்.

சில தினங்களுக்கு முன் புது டில்லியில் கூடிய மத்திய கல்வி ஆலோசனை போர்டாரும் சென்னை சர்க்காரின் கல்வித் திட்டத்தை வெகுவாகப் பாராட்டி யிருக்கிறார்கள். மேற்படி முயற்சியை மற்ற மாகாணங்களும் வரவேற்க வேண்டும் என்று கூறி யிருக்கிறார்கள்.

சென்னை சர்க்காரின் திட்டத்தின் பயனாக பெரும்பாலான குழந்தைகளுக்குப் படிப்பு வசதி கிடைக்கும்; அவர்கள் சமுதாய வாழ்க்கையுடன் நெருங்கிய தொடர்பு கொள்வதற்கும் அத் திட்டம் உதவியாக இருக்கும்; எனவே, மற்ற ராஜ்ய சர்க்கார்களும் அதே போன்ற பரிசோதனை

களைச் செய்து பார்க்கலாம் என்று மேற்படி கல்வி போர்டார் சிபாரிசு செய்திருக்கிறார்கள்.

குழந்தைகளின் பள்ளிக்கூட நேரத்தைக் குறைப்பதால் குடி முழுகிப் போய் விடும் என்று சிலர் கூக்குரலிடுகிறார்கள் அல்லவா! அத்தகையோர் அவ்விஷயமாக மத்திய கல்வி ஆலோசனை போர்டாரின் கருத்தைக் கவனிக்க வேண்டும்.

அதாவது குழந்தைகள் பள்ளிக்கூடங்களில் படிக்கும் நேரத்தை ஐந்திலிருந்து மூன்று மணியாகக் குறைப்பதால், அவர்களுடைய படிப்புக்கு எவ்வித குந்தகமும் நேராது என்று கல்வி போர்டார் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

• • •

இந்தியாவிலே தொழில் துறையில் அனுபவமற்ற குமாஸ்தாக்களை உற்பத்தி செய்யும் கல்வி முறையை மாற்றி அமைக்க வேண்டும் என்று பல ஆண்டுகளாகப் பலரும் வாயளவில் கூறிவந்தனர். மாற்றி அமைப்பதற்குற்ற உருவான முயற்சியில் யாரும் அக்கறை கொள்ளவில்லை.

போதிய பள்ளிக்கூடங்கள் இல்லை; பள்ளிக்கூடங்கள் இருந்தாலும் போதிய உபாத்தியாயர்கள் இல்லை; போதிய உபாத்தியாயர்கள் இருந்தாலும் அவர்களுக்குச் சம்பளம் கொடுக்கப் பணம் இல்லை. இவ்வாறாக, இந்த இல்லைப் பாட்டின் பல்லவியும் அநுபல்லவியும் சரணமும்தான் அடிக்கடி காதைத் துளைத்து வந்தன.

இந்த நிலைமையில் இந்தியா சுதந்திரம் பெற்றது. சுதந்திர இந்தியாவின் அரசியல் சாஸனமும் உருவாயிற்று. பத்து வருஷ காலத்தில் இந்தியாவில் படிக்கும் வயது உள்ள சகலரையும் எழுதப் படிக்கத் தெரிந்தவர்களாக்கிவிட வேண்டியது அத்தியாவசியம் என்று மேற்படி சாஸனத்தில் குறிப்பிடப் பட்டிருப்பது யாவருமறிந்த விஷயம்.

ஆனால் சாஸனம் நிறைவேறி நாலு வருஷங்களாகியும், கல்வித் துறை அன்றிருந்த நிலைமையிலேயே இருந்து வருகிறது. இப்படியே நீடிக்க விட்டால், அரசியல் சாஸனத்தின் மேற்படி கட்டளை எத்தனை பத்து வருஷங்களானாலும் நிறைவேறாது என்பதை உணர்ந்தே, சென்னையில் ராஜாஜி சர்க்கார் சிறுவர்களுக்கு 'ஒரு வேளைப் பள்ளிக்கூடப் படிப்பு, மற்றொரு வேளை தொழில் பயிற்சி' என்ற திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வர முற்பட்டார்கள்.

தற்போதைய நிலைமையில், கல்வி சம்பந்தமாக அரசியல் சாஸனத்தின் ஆக்ஞையை நிறைவேற்றுவதற்குற்ற ஒரே வழி மேற்படி திட்டம்தான் என்பதை நேர்மையும் நியாய புத்தியும் பகுத்தறிவும் உள்ள யாரும் மறுக்க முடியாது.

இன்றைய நிலைமையில், அதிகச் செலவின்றி, கால விரயமின்றி, சிக்கலின்றி இரண்டு மடங்குக் குழந்தைகள் உடனடியாகப் படித்துப் பயன் பெறுவதற்குற்ற ஒரே வழி அதுதான் என்பதை எவரும் ஆட்சேபிக்க மாட்டார்கள்.

'குமாஸ்தா படிப்பையே நம்பிக் கொண்டு வேலை கிடைக்காமல் இளைஞர்கள் தற்கொலை செய்து கொள்ளும் விபரீதத்தைத் தடுக்கச் சென்னை சர்க்காரின் கல்வித் திட்டம் முதல் படியாக அமைந்திருக்கிறது என்பதை ஒப்புக் கொள்ளாதவர்கள் இருக்க முடியாது.

பாரபட்சமற்ற கல்வி நிபுணர்கள் அடங்கிய பருலேகர் கமிட்டியும், மத்திய கல்வி ஆலோசனை போர்டும் சென்னை சர்க்கார் கல்வித் திட்டத்தை ஆதரித்து வெகுவாகப் பாராட்டியிருப்பதைக் காட்டிலும், அதன் சிறப்பைக் காட்டுவதற்கு வேறு சான்று தேவையில்லை.

## தமிழ் எழுத்தாளர் மகாநாடு

தமிழ் நாட்டின் தலை நகரான சென்னையில் இரண்டாவது தமிழ் எழுத்தாளர் மகாநாடு பிப்ரவரி 6, 7 உகளில் மிகச் சிறப்பாக நடந்தேறியது.

முதல் நாள் செயின்ட்மேரீஸ் மண்டபத்திலும் மறு நாள் மகாஜன சபை மண்டபத்திலும் மகா நாடு நடந்தது.

தமிழ்நாட்டின் பல பாகங்களி லிருந்தும், இலங்கையிலிருந்தும்கூட ஏராளமான சகோதர, சகோதரிகள் மகா நாட்டில் வந்து குழுமி யிருந்தனர்.

முதன் மந்திரி ராஜாஜி அவர்கள் மகா நாட்டைத் துவக்கி வைத்துச் சிறப்பித்தார்கள். மகா நாட்டுக்கு "கல்கி" ஆசிரியர் தலைமை வகித்தார். ஸ்ரீ எஸ். பாஷ்யம் வரவேற்புத் தலைவராக இருந்து பணியாற்றினார்.

பேராசிரியர் ரா. பி. சேதுப் பிள்ளை, வெங்களத்தூர் ஸ்ரீ சாமிநாத சர்மா ஆகிய இரு பெரும் நூலாசிரியர்களுக்கும் விருதுகள் கூறி, மலர்மாலை சூட்டி, வெள்ளிப் பாராட்டுக் கேடயம் வழங்கினார்கள்.

சென்ற வருஷம் கவியரசர் பாரதிக்கு வியக்கத்தக்க முறையில் சேவை செய்து, "பாரதி தமிழ்" என்ற நூலை வெளியிட்ட ஸ்ரீ பெரியசாமி தூரனுக்கும், "பாரதி கண்காட்சி" நடத்திய ஸ்ரீ ரா. அ. பத்மநாபன் அவர்களுக்கும் தமிழ் எழுத்தாளர் சங்கத்தார் தங்கப் பதக்கம் வழங்கிக் கௌரவித்தனர்.

"பாரதி" என்ற தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் பத்திரிகையைச் சுதேசமித்திரன் ஆசிரியர் ஸ்ரீ ஸி. ஆர். சீனிவாசன் அவர்கள் ஆரம்பித்து வைத்து நல் ஆசி வழங்கினார்.

வால்மீகி ராமாயணம் சுந்தர காண்டத்தின் தமிழ் மொழி பெயர்ப்பு நூலை ஸ்ரீ டி. எஸ். ராகவன் தமிழ் எழுத்தாளர் சங்கத்துக்குச் சமர்ப்பித்தார். அமெரிக்கச் செய்தி ஸ்தாபனத்தின் சார்பாக ஸ்ரீ பி. கே. சிவப்பிரகாசம் சுமார் நூறு புத்தகங்களைச் சங்கத்துக்கு வழங்கினார்.

பேராசிரியர் ஸ்ரீ அ. சீனிவாசராகவன் தலைமையில் ஸ்ரீ சிதம்பர சுப்பிரமணியம் "சிறு கதை"யைப் பற்றியும் ஸ்ரீ அகிலன் "நாவலை"ப் பற்றியும் டாக்டர் ஸ்ரீ கே. ரா. சீனிவாசன் "தமிழில் விஞ்ஞானம்" என்பதைப் பற்றியும் ஆராய்ச்சி விரிவுரை நிகழ்த்தினார்கள்.

மகா நாட்டில் கல்வி மந்திரி ஸ்ரீ சுப்ரமணியம், சுதேசமித்திரன் ஆசிரியர் ஸ்ரீ ராஜ அரியரத்தினம், மணிக்கொடி ஸ்ரீ சீனிவாசன், ஸ்ரீ சின்ன அண்ணாமலை, ஸ்ரீ நாரண துரைக் கண்ணன், ஸ்ரீ எஸ். ஏ. பி. அண்ணாமலை, ஸ்ரீ ஏ. ஜி. வெங்கடாச்சாரி, ஸ்ரீ கி. வா. ஜகன்னாதன், ஜனாப் அப்துல் வஹாப், ஸ்ரீமதி குகப்ரியை ஆகியவர்கள் அவ்வப்போது உரை நிகழ்த்தினார்கள்.

முதல் நாள் ஸ்ரீ டி. கே. எஸ். சகோதரர்கள், "ஔவையார்", "தமிழ்ச் செல்வம்" ஆகிய நாடகங்களிலிருந்து சில காட்சிகளையும் "சிவாஜி" "கப்பலோட்டிய தமிழன்" ஆகிய பாரதியின் கவிதைச் சித்திரத்தையும் நடித்துக் காண்பித்தனர். மறு நாள் விஜயா புரடக்ஷன் நிர்வாகி ஸ்ரீ பி. நாகி ரெட்டி "சந்திர ஹாரம்" என்ற தமிழ்ப் படத்தைத் தமிழ் எழுத்தாளருக்குப் பிரத்தியேகமாகக் காட்டி, சிற்றுண்டி விருந்தும் அளித்தார்.

மகாநாட்டின் வெற்றிக்குப் பெரிதும் பாடுபட்ட ஸ்ரீ பாஷ்யம், ஸ்ரீ ராமச்சந்திரன், ஸ்ரீ வேம்பு, ஸ்ரீ ஆக்கூர் அனந்தாச்சாரி, ஸ்ரீ ப. கோதண்டராமன், புத்தனேரி ஸ்ரீ ரா. சுப்ரமணியம் முதலியவர்களுக்கெல்லாம் தமிழ் எழுத்தாளர்கள் நன்றி செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறார்கள்.

மேற்படி மகாநாட்டின் முதல் நாள் காட்சிகள் சிலவற்றை எதிர்ப் பக்கத்தில் காணலாம்.

# கலையும் நல்லுறவும்

மற்ற நாடுகளுடன் நல்லுறவையும் நட்பையும் நிலை நாட்டுவதற்கு வெவ்வேறு வழிகளை, பல்வேறு நாடுகள் கடைப்பிடிக்கின்றன. வர்த்தகத்தைச் சாதனமாகக் கொண்டு இந்த நட்பு உலகத்தில் நாடுகளிடையே ஏற்படுகிறது. சில நாடுகள் யுத்த தளவாடங்களின் உதவியால் நட்பு ஏற்படுவதுடன் தங்கள் பலமும் ஓங்கும் என்று நம்புகின்றன. காந்திஜீயின் மரபில் வந்திருக்கும் நமது பிரதம மந்திரியின் வெளிநாட்டுக் கொள்கை, சமாதானத்தையும் அஹிம்சையையுமே அடிப்படையாகக் கொண்டுள்ளது. ஆகவே, இதர நாடுகளுடன் நமது நட்பும் நல்லுறவும், பலாத்காரத்தை அடிப்படையாகக் கொள்ளாமல் கலாசாரத்தையும், நல்லுணர்ச்சியையுமே அடிப்படையாகக் கொண்டுள்ளவை. ஆகையால், பரஸ்பர கலாசார உறவினால் நமது ஆத்ம பலம் பெருகி, அதனால் நமது அந்தஸ்தும் உலகில் உயர்வதே மேல் என்று நாம் நம்புகிறோம். இதையே தான் ராஜகுமாரி அமிருத் கௌர், இந்தியாவுக்கு இப்போது வந்திருக்கும் ஸோவியத் கலாசார கோஷ்டியை வரவேற்கையில் கூறினார்.

இந்தியாவுக்கு இப்போது வந்திருக்கும் ஸோவியத் கலாசாரக் கோஷ்டியை இந்த முறையில்தான் நாம் வரவேற்கிறோம். இந்தக் கோஷ்டியினர் பம்பாய், டெல்லி, கல்கத்தா இந் நகரங்களுக்கு விஜயம் செய்துவிட்டு பிப்ரவரி 13ந் தேதி சென்னைக்கு வந்து, ஆறுநாள் தங்குகிறார்கள்.

இந்தக் கோஷ்டியில், நடனம் சங்கீதம் ஆகிய அருங் கலைகளில் பிரசித்தி பெற்ற மூப்பது ரஷ்ய கலைவாணர்கள் வருகிறார்கள். இவர்களது நடனங்களையும் சங்கீதத்தையும் பார்க்கவும் கேட்கவும் சென்னை வாசிகளுக்கு இது ஓர் அரிய சந்தர்ப்பம். சென்னையில் மூன்று நாட்கள் அவர்கள் கலை விருந்து நடக்கிறது. 15ந் தேதி திருவல்லிக்கேணி கலாமண்டபத்திலும், 17, 18 தேதிகளில் அண்ணாமலை மன்றத்திலும் ரஷ்ய நடனங்களும் சங்கீத நிகழ்ச்சிகளும் நடைபெறும்.

பாலே (Ballet) என்பது ரஷ்யக் கலைக்கே பெருமையளித்திருக்கும் ஓர் அற்புதமான நடனம். இது ஓரளவுக்கு நமது பரத நாட்டியம் போலவே, ஒரு கருத்தையோ சம்பவத்தையோ, நடனத்தின் மூலம் சித்தரிப்பது. இதில் சில வருஷங்களுக்கு முன் பாவ்லோவா என்ற ரஷ்ய நடன மாது உலகப் பிரசித்தி பெற்றிருந்தார். அவருக்குப் பின்னரும் இப்போது பல நடனமாதுகள் பிரசித்தி யடைந்துள்ளனர். அவர்களுள் மிகவும் புகழ் பெற்றிருக்கும் மாயா பிளிஸெட்ஸ்காயா என்ற பெண்மணியும் இந்தக் கோஷ்டியுடன் வருகிறார். இவரது "அன்னப் பட்சியின் அந்திம காலம்" என்பதைச் சித்தரிக்கும் நடனம் மிகவும் பிரமிக்கத் தகுந்த வகையில், உருக்கமும் உணர்ச்சியும் கொண்டதாக இருக்கிறதாம்.

நமது கலைவாணர்களைப் போல் ரஷ்யக் கலைவாணர்களும் மிகவும் கெட்டிக்காரர்கள். இந்தக் கோஷ்டியில் வந்திருக்கும் மூகர்ரம் டுர்கன்பெய்வா என்ற மாது ரஷ்ய நாட்டு நடனங்களைத் திறமையுடன் ஆடுவதுடன், இங்கு வந்தவுடன், ஒரு இந்திய நடனத்தையும் கற்றுக்கொண்டு ஆடுகிறது அதிசயம்தான்.

நாட்டுப் பாடல்களில் பிரசித்தி பெற்ற ரஷீத் பெய்புடோவ் என்பவர் படே ஆசாமியாம். அவர் பாடும் ரஷ்ய நாட்டுப் பாடல்கள், நமது நாட்டுப் பாடல்கள் போல் தொனிப்பதுமல்லாமல், சில ஹிந்தி பாட்டுக்களைக்கூட அவர் பாட ஆரம்பித்து விட்டார். அது மட்டுமில்லை. ஒரு பாட்டில் தமிழ் போல்கூடத் தொனிப்பதாக ஒரு பம்பாய்ப் பத்திரிகை எழுதியிருக்கிறது. இன்னும் இந்தக் கோஷ்டியில் வயலின், பியானோ, பியூபென் நம் நாட்டுத் தாளவாத்தியம் போன்றது. இவற்றில் தேர்ச்சி பெற்ற நிபுணர்களும் வருகிறார்கள்.

ரஷ்யக் கலைஞர்களும் நமது நாட்டுக் கலைகளைக் கண்டு ரஸிப்பதற்காக நமது பரத நாட்டியம், சங்கீதம் இவையடங்கிய நிகழ்ச்சிகள் ஏற்பாடாகி இருக்கின்றன. வரும் ஞாயிறு 14-ந் தேதி ஸ்ரீமதி ருக்மிணி தேவி கலாக்ஷேத்திரத்தில் ஒரு கலை விருந்து ஸோவியத் கோஷ்டி முன்னிலையில் அளிக்கிறார்கள். 19-ந் தேதியன்று அண்ணாமலை மன்றத்தில் நமது பிரபல வாத்திய வித்வான்கள் கச்சேரிகள் நிகழ்த்துகிறார்கள். தென்னிந்திய சினிமா நாடக மேடை நக்ஷத்திரங்கள் அடங்கிய தென்னிந்தியக் கலைவாணர் சங்கத்தினர் ஸோவியத்கோஷ்டிக்கு ஒரு கதம்ப விருந்து 16-ந் தேதி இரவு 9-மணிக்கு அளிக்கிறார்கள்.

சென்னை வாசிகள் ஸோவியத் கலாசார கோஷ்டியைத் தக்க முறையில் வரவேற்று, கௌரவித்து, அவர்கள் கலையையும் கண்டு ரஸிப்பார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

இந்த நிகழ்ச்சிகளுக்கு டிக்கட்டுகள் மூலம் வரும் வசூல் எல்லாம் நமது பிரதம மந்திரியின் தேசிய நிவாரண நிதிக்குச் சேரும்.



in the classroom
வில்ஸன்
பேனா
கீழ்க்கண்ட மாடல்
களில் கிடைக்கும்.
வாகோபில்
ஏரோபில்
ஸ்டட் பில்லர்
ஸெல்ப் பில்லர்
ட்ராப்பர் பில்லர்
Wilson
REGD.
VacOfil Pen
பள்ளி வகுப்புகளில் வில்ஸன் வாகோபில் பேனா மிக இன்றியமையாததாக இருக்கும். வகுப்பு வேலைக்கும், வீட்டு வேலைக்கும் ஏற்ற வெகு சுகமான மசி ஊற்றுடன் வழவழப்பாக எழுதுவதால் எல்லா மாணக்கர்களிடமும் மிகப் பிரக்யாதி பெற்று யிருக்கிறது. பல வருடங்களுக்கு திருப்திகரமாக சேவை யளிக்கிறது.
வில்ஸன் ஜூனியர் வாகோபில் (பிளாஸ்டிக்) அலாய் தோய்ந்த நிப் ரூ. 3/12/-
வில்ஸன் மேஜர் வாகோபில் (செலுலாய்ட்) இரிடியம் தோய்ந்த நிப் ரூ. 5/12/-
வில்ஸன் டிலக்ஸ் வாகோபில் (செலுலாய்ட்) 14 காரட் தங்க நிப்புடன் ரூ. 8/12/-
வில்ஸன் அட்மிரல் வாகோபில் (செலுலாய்ட்) 14 காரட் பெரிய தங்க நிப்புடன் ரூ. 12/8/-
Sole Distributors for India
KIRON & CO. LTD.
73-75, CHHIPI CHAWL, NEAR ZAVERI BAZAR, BOMBAY 2
BRANCHES IN CALCUTTA & MADRAS




அத்தியாயம் 74

## "நானே முடிசூடுவேன்!"

**வ**ந்தியத்தேவன் கடைசியாகக் கூறினான்: "இளவரசே! ஒரே ஒரு மனிதர் மனசு வைத்தால் உண்மையில் என்ன நடந்தது என்பதைச் சொல்லி என்னைக் குற்றமற்றவன் ஆக்கலாம். அந்த ஒருவர் பெரிய பழுவேட்டரையர்தான். கடம்பூர் மாளிகையில் யாழ்க் களஞ்சியத்தில் ஒளிந்திருந்த என்னைத் திடீரென்று கழுத்தைப் பிடித்து இறுக்கிக் கீழே தள்ளி மூர்ச்சை அடைந்து விழச் செய்தவர் அந்த வீரப் பெருமகனாராகவே இருக்க வேண்டும் என்று ஊகிக்கிறேன். வேறு யாரும் அங்கு அச்சமயம் வந்திருக்க முடியாது. நந்தினிதேவி பேரில் சந்தேகங் கொண்ட அந்தக் கிழவர்தான் அவ்வாறு காளாமுக சைவராக உருக்கொண்டு மறைவிடத்திலிருந்து அங்கு என்ன நடக்கிறது என்று பார்ப்பதற்காக வந்திருக்க வேண்டும். காளாமுகச் சைவக் கூட்டத்தைச் சேர்ந்த இடும்பன்காரி அவருக்கு இரகசிய வழியில் வருவதற்கு உதவி செய்திருப்பான். ஆனால் அந்த மாபெரும் வீரருக்கு என்னை முதல் முதல் பார்த்தபோதே என்மீது வெறுப்பு உண்டாகி விட்டது. அந்த வெறுப்பு பிறகு நாளுக்கு நாள் அதிகமாகியே வந்தது. அவர் என் உயிரைக் காப்பாற்றுவதற்காக முன் வந்து அங்கு உண்மையில் நடந்ததைச் சொல்லப் போவதில்லை. நான் இந்தப் பயங்கரமான பழி பூண்டு இறந்தால் அவருக்கு ஒருவேளை சந்தோஷமாகவே இருக்கும். ஆகையால், இளவரசே! எனக்குத் தப்பிச் செல்வதற்கு அநுமதி கொடுங்கள்! முடிந்தால் நான் ஈழநாடு சென்று அங்கே பாண்டியகுலத்து மணிமுடியையும் இரத்தின ஹாரத்தையும் தேடிக் கண்டு பிடிப்பேன். அல்லது இங்கேயே உங்கள் கை வாளால் என்னைக் கொன்று விடுங்கள்! என்னிடம் அளவிலாத அன்பு வைத்திருந்த தங்கள் தமையனாரைக் கொன்ற பழியைச் சுமந்து நாற்சந்தியில் கழுவில் ஏற்றப்படும் கதிக்கு என்னை ஆளாக்காதீர்கள்! அதைக் காட்டிலும் தங்கள் கை வாளினால் இறப்பது எனக்கு எவ்வளவோ ஆறுதலை அளிக்கும்! அல்லது இந்தக் கொடும்பாளூர்க் கோமகளின் கையினால் நஞ்சுண்டு இறந்தாலும் பாதகமில்லை. இவரும் தங்கள் திருத் தமக்கையுமே இந்த அநாதையின் பேரில் கருணை கொண்டு யமலோகத்தின் வாசற்படி வரைக்கும் சென்றிருந்தவனைத் திரும்பவும் இவ்வுலகத்துக்குக் கொண்டு வந்து சேர்த்திருக்கிறார்கள். இதற்காக இவர்களுக்கு நான் நன்றி செலுத்தப் போவதில்லை!"

இவ்வாறு வந்தியத்தேவன் கூறியபோது வானதி இளவரசரை நோக்கி, "கேளுங்கள், ஐயா! நீங்களே கேளுங்கள்! இந்தச் சுத்த வீரருக்குப் போர்க்களத்தில் எதிரிகளுக்கு முன்னால் நின்று போரிட்டு வீர சொர்க்கம் அடையும்

விருப்பம் இல்லையாம்! பெண்களின் கையினால் விஷம் அருந்திச் சாவதற்குத் தவங் கிடக்கிறாராம்!" என்றான்.

"இளவரசே! இவரும் தங்கள் திருத் தமக்கையும் என் மீது சொல்லும் நிந்தை மொழியினாலேயே என்னைக் கொன்று விடுவார்கள் போலிருக்கிறது. அதைவிட இவர்கள் கையினால் நஞ்சு அருந்தி இறப்பது விசேஷம் அல்லவா?" என்றான் வாணர்குல வீரன் வந்தியத் தேவன்.

அருள்மொழிவர்மர் இந்தப் பேச்சுக்களை யெல்லாம் பாதி கவனத்துடனேதான் கேட்டுக் கொண்டிருந்தார். அவருடைய மனதிற்குள் வேறு எதைப் பற்றியோ தீவிரமாகச் சிந்தித்துக் கொண்டிருந்ததாகத் தோன்றியது.

சட்டென்று ஒரு குதி குதித்து எழுந்து நின்று, "ஆகா! நான் முடிவு செய்து விட்டேன். நானே சோழ நாட்டின் சக்கரவர்த்தியாக முடி சூட்டிக் கொள்வேன். நாடு நகர மெல்லாம் மக்கள் 'அருள்மொழி வர்மனே திரு முடி சூட வேண்டும்!' என்று கோஷம் செய்கிறார்கள். போர் வீரர்களின் விருப்பமும் அதுவே! அவர்கள் எல்லாருடைய விருப்பத்தையும் நிறை வேற்றுவேன். எதற்காகத் தெரியுமா? உன்னைக் குற்றம் அற்றவன் என்று விடுதலை செய்வதற்காகத்தான். அதனால் எனக்கு ஏதேனும் அபகீர்த்தி வருவதாக இருந்தால் வரட்டும்! அது என்னைப் பாதியாது! என் பேரில் விரோதப் பான்மை கொண்ட சிற்றரசர்கள் சிலர் ஒரு வேளை அந்த அபகீர்த்தியைப் பரப்புவதற்கு முயலலாம். ஆனால் மக்கள் அதை நம்பமாட்டார்கள். சிற்றரசர்கள் என் பேரில் குற்றம் சுமத்தத் துணிந்தால், அது அவர்கள் பேரிலேயே திரும்பிப் போய்ச் சேரும்! கடம்பூர் மாளிகைக்குச் சிற்றரசர்கள் விருந்துக்கு அழைத்து அவரைக் கொன்று விட்டார்கள் என்று என்னால் திருப்பிச் சொல்ல முடியும். அத்தகைய நம்பிக்கைத் துரோகத்துக்காகவும் இராஜ குலத் துரோகத்துக்காகவும் அவர்கள் எல்லாரையும் தண்டிக்கவும் என்னால் முடியும். எது எப்படியானாலும் நானே முடி சூட்டிக் கொள்ளப் போகிறேன். என் தந்தை தமக்கை இவர்களின் விருப்பத்துக்கு விரோதமாக நடந்தாலும் நடப்பேன். ஆனால் உனக்கு எந்த விதத் தீங்கும் நேருவதை என்னால் பார்த்துக் கொண்டு பொறுத்திருக்க முடியாது!" என்றார்.

வானதி ஒரே குதூகலத்துடன், "தங்களுடைய இந்த வார்த்தைகளைக் கேட்பதற்கு இளைய பிராட்டி இங்கே இல்லாமற் போனாரே! அவர் முன்னிலையிலும் ஒரு தடவை இந்த வார்த்தைகளைச் சொல்லுங்கள்!" என்றாள்.

"ஒரு தடவை என்ன? பல தடவை சொல்லுகிறேன்! காரியத்திலும் இதைச் செய்து காட்டுகிறேன்!" என்றார் பொன்னியின் செல்வர்.

வந்தியத்தேவன் தன் கண்களில் துளித்த கண்ணீரைத் துடைத்துக் கொண்டு, "ஐயா! ஏழையும் அநாதையுமான என் காரணமாகத் தாங்கள் தங்களுடைய மன உறுதியை மாற்றிக் கொண்டு முடி சூடுவதற்கு முன் வந்தால், அது சோழ நாடு செய்த பாக்கியமாகும். உண்மையைச் சொல்வதாக இருந்தால், மதுராந்தகத் தேவரை நான் அறிந்த வரையில் அவர் முடி சூடச் சிறிதும் தகுதியில்லாதவர். பெண்களைப் போல் மூடு பல்லக்கிலே பிரயாணம் செய்து இராஜ்யத்துக்காகச் சதி முயற்சிகளில் ஈடுபடுகிறவர் ஒரு சாம்ராஜ்யத்தை ஆளத் தகுதியுடையவரா? விஜயாலய சோழரும், பராந்தக சோழரும் அலங்கரித்த சோழ சிங்காதனத்தில் இத்தகைய கோழைத் தனமே உருக் கொண்டவர் ஏறுவது நியாயமா? இதை இந்நாட்டு மக்கள் விரும்பாததில் வியப்பு ஒன்றுமில்லை!" என்று குரல் தழதழக்கக் கூறினான்.

"இதை உணர்ந்துதான் மதுராந்தகத் தேவரே மாயமாய் மறைந்து விட்டார் போலிருக்கிறது!" என்றாள் வானதி.

"ஆம், ஆம்! அவரைத் தேடிக் கண்டு பிடிக்கும் பிரயத்தனத்தை இனி விட்டு விடப் போகிறேன். நானே முடி சூட்டிக் கொள்ளப் போகிறேன்!" என்றார் அருள்மொழி வர்மர்.

இதைக் கேட்டுக் கொண்டே அச்சமயம் அவ்வறையினுள் பிரவேசித்த குந்தவை, "தம்பி! அந்த ஆசையை அடியோடு விட்டு விடு! உனக்குச் சிங்காதனமும் இல்லை; மணிமகுடமும் இல்லை. என் அருமைத் தோழி வானதி தஞ்சைச் சிங்காதனத்தில் ஏறுவதில்லை என்று சபதம் செய்திருப்பதை மறந்து விட்டாயா? அவள் இல்லாமல் வேறொரு பெண்ணை உன் அருகில் வைத்துக் கொண்டு நீ முடிசூட்டிக் கொள்வதை நான் ஒரு நாளும் என் கண்களால் பார்த்துக்கொண்டிருக்க முடியாது!" என்றாள்.

"அக்கா! அந்தச் சமயத்திலே மட்டும் தாங்கள் தங்களுடைய கண்களை மூடிக் கொண்டால் போகிறது. நான் வேறு மாறாகும் தங்கள் கண்களை அச்சமயம் பொத்தி உதவுகிறேன்!" என்றாள் வானதி.

பொன்னியின் செல்வர் குந்தவையைப் பார்த்து, "சகோதரி! தங்கள் தோழியின் சபதத்துக்காகச் சோழ ராஜ்யம் அரசன் இல்லாமலே நடக்க முடியுமா? நம் தந்தையோ இராஜ்ய பாரத்தை இறக்கி வைத்து விட்டுக் காஞ்சிக்குப் போக வேண்டுமென்று பிடிவாதம் பிடிக்கிறார். மதுராந்தகத் தேவரோ மாயமாக மறைந்து விட்டார். வேறு வழிதான் என்ன? எப்படியும் நான் முடி சூட்டிக் கொள்ளாமல் தீராது போலிருக்கிறதே? இராஜ்ய உரிமை பற்றி நாடெங்கும் ஒரே கொந்தளிப்பாக இருப்பது தங்களுக்குத் தெரியாதது அல்லவே? இந்தக் கொந்தளிப்பை எத்தனை காலம் விட்டு வைக்க முடியும்?" என்றார்.

"தம்பி! ஒரு சந்தோஷ சமாசாரம். அதைத் தெரிவிப்பதற்குத்தான் நான் விரைந்து ஓடி வந்தேன். மறைந்திருந்த மதுராந்தகத் தேவர் வெளிப்பட்டு விட்டார். சோழ குலத்து முன்னோர்கள் செய்த தவம் வீண் போகவில்லை! இராஜ்யம் என்ன ஆகுமோ என்று நீ கவலைப்பட வேண்டியதில்லை. அவர் வேண்டாம் என்று சொன்னாலும் நாம் பிடிவாதம் பிடித்து அவருக்கு மகுடாபிஷேகம் செய்து வைக்க வேண்டும்!" என்றார் இளையபிராட்டி.

**அ**வருடைய உற்சாகம் மற்ற மூவருக்கும் சிறிது வியப்பை அளித்தது. சில நாட்களாகவே குந்தவைப் பிராட்டி மதுராந்தகருக்கு முடிசூட்டுவதற்குச் சாதகமா யிருந்தது உண்மைதான். ஆனால் அதில் அவர் இவ்வளவு உற்சாகம் உடையவர் என்று இதுவரையில் காட்டிக் கொள்ளவில்லை.

பொன்னியின் செல்வர் அது சம்பந்தமான தம் வியப்பை அடக்கிக்கொண்டு, "தேவி! அவர் எங்கே மறைந்திருந்தார்? எதற்காக? எப்படி வெளிப்பட்டார்?" என்று கேட்டார்.

"நமக்கு அருகிலேயே அவர் இருந்து வந்தும் நம்மாலேதான் கண்டு கொள்ள முடியாமற் போயிற்று. தம்பி! செம்பியன்மாதேவியின் திருவயிற்றில் உதித்தவர்தான் சோழ சிங்காதனத்தில் ஏறத் தகுந்தவர். உன் சித்தப்பாவுக்குத்தான் இந்த ராஜ்யம் நியாயமாக உரியது. நீ மகுடம் புனையலாம் என்ற எண்ணத்தை அடியோடு விட்டு விடு! ஓர் அதிசயத்தைக் கேள், தம்பி! நாலுநாளைக்கு முன்னால் நம் சித்தப்பாவுக்கு ஒரு பெரிய கண்டம் வந்தது. கொலைகாரன் ஒருவன் அவர் மீது குத்தீட்டியை வீசி எறியக் குறி பார்த்தான். அதை அவன் எறிந்திருந்தால் மதுராந்தகத் தேவரின் உயிர் போயிருக்கும். சோழ குலத்தில் இன்னொரு அகால மரணம் ஏற்பட்டிருக்கும். அப்படி நேராமல் தடுத்த வீராதி வீரர் யார் தெரியுமா? தம் உயிரைக் கொடுக்கத் துணிந்து நம் சித்தப்பாவைக் காப்பாற்றியவர் யார் தெரியுமா?" என்று கூறிக் கொண்டே இளைய பிராட்டி தமது விசாலமான கண்களை வந்தியத்தேவன் பேரில் திருப்பினார். அந்தக் கண்களில் ததும்பிய அன்பும் ஆர்வமும் நன்றியும் நன்மதிப்பும் ஆதரவும் அநுதாபமும் வந்தியத்தேவனது நெஞ்சின் அடிவாரம் வரையில் சென்று அவனைத் திக்கு முக்காடச் செய்தன.

**பொ**ன்னியின் செல்வரோ வியப்புக் கடலில் ஆழ்ந்தவராக "இது என்ன, அக்கா! எனக்குப் புரிய வில்லையே? என் தோழனும் இது பற்றி எனக்குச் சொல்ல வில்லையே?" என்றார்.

"அவர் சொல்லி யிருக்க மாட்டார். ஏனெனில் அவர் செய்த காரியத்தின் பெருமையை அவரே உணர்ந்திருக்க மாட்டார். சோழ குலம் அவருக்கு எவ்வளவு கடமைப் பட்டிருக்கிறது என்று அவருக்கே தெரியாது!"

"அக்கா! புதிர் போடுவதுபோல் பேசுகிறீர்களே! எல்லாம் ஒரே மர்மமா யிருக்கிறதே? எங்களை வீண் திகைப்புக்கு உள்ளாக்காமல் விளக்கமாகச் சொன்னால்நல்லது! இந்த வாணர் குல வீரன் மதுராந்தகரை எப்படி, எங்கே, எந்தவித அபாயத்தி லிருந்து காப்பாற்றினார்? மதுராந்தகத் தேவர் இப்போது எங்கே?" என்று இளவரசர் கேட்டார்.

"பொன்னியின் செல்வ! இதோ இன்னும் சில விநாடிப் பொழுதில் அவரே இங்கு வந்துவிடுவார்! நீ இங்கே வந்திருக்கிறாய் என்று தெரிந்து இவ்விடம் அழைத்து வரச் சொல்லி யிருக்கிறேன். அவர் வாய் மொழியாகவே கேட்டுத் தெரிந்து கொள்! அல்லது எல்லாவற்றையும் கண்ணால் பார்த்த பூங்குழலியிடம் கேட்டுத் தெரிந்து கொள்!......இதோ அவர்கள் வருகிறார்கள் போலிருக்கிறது!"

ஆம்; அச்சமயம் அறைக்கு வெளியில் காலடிச் சத்தம் கேட்டது. சற்று நேரத்

துக்கெல்லாம் நாலு பேர் உள்ளே வந்தார்கள். முதன் மந்திரி அநிருத்தர், ஆழ்வார்க்கடியான், பூங்குழலி, சேந்தன் அமுதன் ஆகியவர்கள் வந்தார்கள்.

சேந்தன் அமுதன் மட்டும் வழக்கத்துக்கு மாறாக விசித்திரமாக உடை அணிந்திருந்தான். தலையில் இளவரசுக் கிரீடம் அணிந்து பட்டுப் பீதாம்பரமும் அரச குலத்துக்குரிய ஆபரணங்களும் புனைந்திருந்தான்.

அறைக்குள் வந்த கோஷ்டியினரை உள்ளே இருந்தவர்கள் சிறிது வியப்புடன் பார்த்தார்கள்.

"சகோதரி! மதுராந்தகர் வருவார் என்றல்லவோ சொன்னீர்கள்? அவரைக் காணோமே?" என்றார் அருள்மொழி.

"தம்பி! இதோ உன் முன்னால் இளவரசுக் கிரீடம் அணிந்து நிற்கிறாரே, இவர்தான் செம்பியன்மாதேவியின் திருவயிற்றில் உதித்த, சிவஞான கண்டராதித்தரின் புதல்வர். இவர்தான் நமக்கெல்லாம் சித்தப்பன் முறைபூண்ட சிவபக்திச் செல்வர். இத்தனை காலமும் சேந்தன் அமுதன் என்ற பெயருடன் அக்ஞாத வாசம் செய்து வந்தார். சோழர் குலம் செய்த பாக்கியத்தினால் இன்றைக்கு வெளிப்பட்டு வந்தார். இவரைத்தான் நாலு நாளைக்கு முன்னால் கொடியோன் ஒருவன் ஈட்டியினால் குத்திக் கொல்ல முயன்றான். அதைத் தடுத்து இந்த வாணர் குல வீரர் சோழ குலத்துக்கு இணையில்லாத உதவி புரிந்தார். நமது முதன் மந்திரியின் சீடரான இந்த வீர வைஷ்ணவர் இவர் சைவர் என்பதையும் பொருட் படுத்தாமல் இவரைக் கோட்டைக்குள் கொண்டு வந்து சேர்த்தார்..."

இச்சமயத்தில் திருமலை குறுக்கிட்டு, 'தேவி! இச் சைவருக்கு நான் எந்தவித உதவியும் செய்யவும் இல்லை; செய்ய விரும்பவும் இல்லை. வல்லத்து இளவரசரைப் பல்லக்கில் கொண்டு வருவது சாத்தியமாகும் பொருட்டு இவருக்கு மாறு வேடம் புனைந்து யானையில் ஏற்றி வந்தேன்'' என்றான்.

குந்தவை "ஆம், ஆம்! திருமலை நம்பி இரு வகையில் பேருதவி புரிந்திருக்கிறார். மதுராந்தகத் தேவருக்கு இளவரசுக் கிரீடம் அணிந்து யானை மீது ஏற்றிக் கொண்டு வந்தபோது உண்மையிலேயே இந்த நாட்டின் சிங்காதனத்துக் குரியவரை அழைத்து வருகிறோம் என்று தெரிந்திராது. அல்லது தெரிந்துதான் செய்தாரோ, அதை நான் அறியேன்! எப்படியேனும் இருக்கட்டும்! தம்பி! இத்தனை காலமும் மதுராந்தகத் தேவர் என்று நாம் எல்லாரும் எண்ணியிருந்தவர் உண்மையில் மதுராந்தகத் தேவர் அல்ல. இவர்தான் சோழ குலத்தின் தவப் பயனாக மூத்த எம்பிராட்டியின் வயிற்றில் உதித்தவர். நாம் அறிய முடியாத இறைவன் திரு விளையாடல் இவரை இத்தனை காலமும் குடிசையில் வாழ்ந்திருக்கச் செய்தது. ஆயினும் சோழர் தொல் குடியில் பிறந்ததனால் வந்த குணாதிசயங்கள் இவரிடம் குடி கொண்டிருந்ததை நாம் எல்லோரும் ஒவ்வொரு சமயம் பார்த்து வியந்திருக்கிறோம். முன்னொரு சமயம் இவர் இந்த வாணர்குலத்து வீரரைத் தப்ப வைப்பதற்காகச் செய்த முயற்சியை நாம் அறியோமா? தம்பி! உன்னை இவரும் பூங்குழலியும் கோடிக் கரையிலிருந்து நாகைப் பட்டினம் வரையில் கொண்டு போய்ச் சேர்த்ததைத்தான் மறக்க முடியுமா? இவர் தான் உண்மையில் நம் சித்தப்பா என்பதை இன்று செம்பியன் மாதேவியின் வாய்மொழியாகவும் அறிந்தோம்; இவரும் ஒப்புக் கொண்டார். தம்பி! இந்தப் புண்ணிய தினத்தில் இவரை நம் அரண்மனைக்கு வரவேற்கிறேன். இல்லை, இல்லை; இவருடைய சொந்த அரண்மனைக்கு வரவேற்கிறேன். இத்தனை காலமும் நம்மை விட்டுப் பிரிந்து வாழ்ந்தவரை இன்று நம் குடும்பத்தோடு ஒன்று சேர்ந்து விடும்படி அழைக்கிறேன். இத்தனை நாளும் பிரிந்திருந்தவர் நம்மோடு வந்து சேர்ந்த வைபவத்தை எவ்வளவோ விமரிசையாகக் கொண்டாட வேண்டும். அதற்குத் தகுதியான காலம் இதுவன்று. இந்தச் செய்தியை எவ்வளவு தூரம் வெளியில் தெரியாமல் நமக்குள் வைத்துக் கொள்கிறோமோ, அவ்வளவுக்கு நல்லது. ஆகையால் நமக்குள்ளேயே இந்த வைபவத்தை நடத்திக் கொள்ளலாம். சித்தப்பா! இப்படி வாருங்கள்! நெடு நாளையப் பிரிவுக்குப் பின்னர் இன்று சோழர் குலத்தில் வந்து சேர்ந்ததற்காக எங்கள் மகிழ்ச்சியை வேறு விதத்தில் தெரிவித்துக் கொள்ள முடியவில்லை. என் அருமைச் சகோதரர்கள் வெளியூர்களுக்குப் போகும் போதும் சரி, திரும்பி வரும்போதும் சரி, அவர்கள் நெற்றியில் நான் திருநீறு பூசிக் குங்குமத் திலகம் இடுவது வழக்கம். அதுபோலவே இன்று திரும்பி வந்து சேர்ந்த தங்கள் நெற்றியில் திருநீறும் குங்குமமும் இடுகிறேன்!"

இவ்விதம் கூறி விட்டு இளைய பிராட்டி குந்தவை தேவி சேந்தன் அமுதன் என்று இத்தனை காலமும் பெயர் வழங்கிய மதுராந்தகன் நெற்றியில் திருநீறும் குங்குமமும் இட்டார்.

அப்போது முதன் மந்திரி அநிருத்தர் "சோழர் குலத் தோன்றல் இளங்கோ மதுராந்தகத் தேவர் நீடூழி வாழ்க!" என்று ஆசி கூறினார். "வாழ்க! வாழ்க!" என்று ஆழ்வார்க்கடியான் நம்பி எதிரொலி செய்தான்.

குந்தவை முதலில் பேச ஆரம்பித்த போது அருள்மொழி வர்மர் உள்ளத்தில் வியப்புத்தான் அதிகமாக இருந்தது. அதில் சிறிது சந்தேகமும் கலந்திருந்தது. இதெல்லாம் தம் திருத் தமக்கையாரின் விளையாட்டோ, ஏதேனும் ஒரு முக்கிய காரணம் பற்றி இவ்விதம் பேசுகிறாரோ என்று கூட எண்ணினார். போகப்போக, அவருடைய ஐயம் தீர்ந்து விட்டது. குந்தவை தேவியின் வார்த்தைகள் இதய அந்தரங்கத்திலிருந்து வந்த அன்புணர்ச்சி ததும்பிய வார்த்தைகள் என்பதை அறிந்தார். அவர் பெரிதும் போற்றிய தமக்கையின் உள்ளத்தில் பொங்கிய உணர்ச்சி வெள்ளம் அவரையும் ஆட்கொண்டு விட்டது. குந்தவை தேவி திலகமிட்டதும் அருள்மொழித் தேவர் சேந்தன் அமுதன் அருகில் சென்று, "சித்தப்பா! முன்னமே தங்களிடம் நான் அன்பு கொண்டிருந்தேன். தாங்கள் என் சகோதரரா யிருக்கக் கூடாதா என்று எண்ணியது முண்டு. நமக்குள் இருக்கும் இரத்தத் தொடர்புதான் அத்தகைய உணர்ச்சியை எனக்கு அளித்தது போலும்!" என்று கூறிச் சேந்தன் அமுதனை ஆலிங்கனம் செய்து கொண்டு கண்ணீர் பெருக்கினார்.

வந்தியத்தேவன், "ஆகா! நான் முன்னமே கொஞ்சம் சந்தேகித்தேன். சேந்தன் அமுதன் என்கிற சிவபக்தருக்குள்ளே பரம்பரையான வீர இராஜ குலம் எங்கேயோ ஒளிந்து கொண்டிருக்கத்தான் வேண்டும் என்று எண்ணினேன். இல்லாவிட்டால், ஊரும்பேரும் இல்லாதவனாக வந்த எனக்கு அடைக்கலம் தந்து ஆதரித்து ஊரை விட்டு ஓடவும் உதவி செய்திருப்பாரா? பேரரசர் மகனே! முன்னொரு தடவை எனக்குச் செய்த உதவியை எனக்கு மறுபடியும் செய்து அருள் புரியுங்கள்! தங்களுடைய மகுடாபிஷேக வைபவத்தைப் பார்க்கக் கொடுத்து வைக்கவில்லையே என்று வருத்தமாய்த் தானிருக்கிறது. என்ன செய்யலாம்! ஒரு விஷயத்தில் எனக்கு மிக்க மகிழ்ச்சி. சேந்தன் அமுதருக்குச் சோழ சாம்ராஜ்யம் சொந்தமாவதிலே கூட எனக்கு அவ்வளவு திருப்தி இல்லை. எனக்குக் கடல் கடக்க உதவி செய்த பூங்குழலி அம்மை மகாராணி ஆகப்போவதிலே தான் எனக்குப் பூரிப்பு. சமுத்திர குமாரியின் ஆசைக் கனவு இவ்வளவு விரைவில் நிறைவேறப் போகிறது என்று அவரே எதிர்பார்த்திருக்க மாட்டார்!" என்றான்.

குந்தவை குறுக்கிட்டு, "ஐயா! தாங்கள் இன்னும் சிலநாள் இவ்வளவு அதிகமாகப் பேசாமலிருந்தால் நல்லது. அப்போது உடம்பு குணப்பட்டுத் தப்பி ஓடுவதா யிருந்தாலும் விரைவாக ஓட முடியும்!" என்றாள்.

பின்னர், "தம்பி! அருள்மொழி! இத்தனை காலமும் நமது அருமைப் பாட்டியார் தமது திருமகனுக்கு மகுடம் சூட்டுவதை ஏன் ஆட்சேபித்தார் என்பதை இப்போது நாம் அறிந்து கொண்டோம். நமக்குக் கூடப் பழைய மதுராந்தகர் முடிசூடுவதில் அவ்வளவு திருப்தியில்லாமலிருந்தது. வீர சோழ குலத்தில் பிறந்தவர்களிடம் இருக்க வேண்டிய குணாதிசயங்கள் அவரிடம் இல்லை. நமது பாட்டியார் எவ்வளவோ முயன்று பார்த்தும் சிவபக்தி அவருடைய உள்ளத்தில் ஒட்டவில்லை. வீரம் என்பது அவரிடம் மருந்துக்குக் கூட இல்லை. அப்படி யிருந்தும் ஒருவாறு நாம் அவருக்கே முடிசூட்டுவதற்கு மனத்தைச் சரிப்படுத்திக் கொண்டோம். இந்தப் புதிய மதுராந்தகருக்குப் பட்டம் கட்டுவதில் நமக்கெல்லாம் திருப்தி என்பது மட்டுமில்லை; குதூகலமும் பூரிப்பும் அடைகிறோம். உன்னையும் வல்லத்து இளவரசரையும் நடுக்கடலில் முழுகாமல் கரையேற்றிக் காப்பாற்றிய பூங்குழலி சிங்காதனம் ஏறுவதைப் பார்க்கவும் எனக்கு ஆசையாக இருக்கிறது. அதற்கு வேண்டிய ஏற்பாடுகளை நம் முதன் மந்திரி உடனே செய்ய வேண்டும்!" என்றாள்.

"தேவி! பெரிய பழுவேட்டரையர் மனசு வைத்துக் கடம்பூர் மாளிகையில் என்ன நடந்தது என்பதைச் சொல்ல வேண்டும். பழைய மதுராந்தகத் தேவர் என்ன ஆனார் என்பது தெரிய வேண்டும். இந்த இரண்டு காரியமும் ஆவதற்கு முன்னால் மகுடாபிஷேகத்துக்கு நாள் வைப்பது எப்படி?" என்றார் அநிருத்தர்.

"பெரிய பழுவேட்டரையரிடம் நான் கேட்டுக் கொள்ளுகிறேன். பழைய மதுராந்தகரைக் கண்டு பிடிப்பது உங்கள் பொறுப்பு!" என்றாள் குந்தவை.

அப்போது சேந்தன் அமுதன் என்று நாம் இது வரையில் அழைத்து வந்த இளவரசர் மதுராந்தகத் தேவர் பொன்னியின் செல்வரைப் பார்த்துக் கூறினார் :—

"இளவரசே! தாங்கள் என்னைச் சித்தப்பா முறைவைத்து மரியாதையாக அழைத்தீர்கள். இவர்களும் என்னை 'இளவரசர்' என்று அழைக்கிறார்கள். ஆனால் தங்களை நான் 'மகனே' என்று அழைப்பது சாத்தியமில்லை. இருபத்திரண்டு ஆண்டு எளிய குடிசையில் காலங் கழித்தவன் திடீரென்று இன்றைக்கு என்னைப் பேரரசர் குலத்தில் பிறந்த இளங்கோவாகக் கருதிக் கொள்ளவும் முடியவில்லை. உங்கள் எல்லாருக்கும் ஒரு விண்ணப்பம் செய்து கொள்கிறேன். வந்தியத்தேவர் தப்பி ஓடக் காரணமாக இருந்ததற்காக என்னைச் சில நாள் பாதாளச் சிறையில் அடைத்திருந்தார்கள். அப்போது பக்கத்து அறையிலிருந்தவன் மூலம் இன்று வெளியான செய்தியை நான் அறிந்தேன். ஊமைத் தாயின் பிள்ளை அரண்மனையில் அரச குமாரனாக வளர்கிறான் என்றும், இராஜ குலத்துக் குழந்தை ஊமைத் தாயின் வீட்டில் வளர்ந்து வருகிறான் என்றும் அவன் கூறினான். அப்போதே எனக்கு உண்மை தெரிந்து விட்டது. உலகம் போற்றும் செம்பியன்மாதேவி என்னிடம் காட்டிய அன்பின் காரணத்தை ஊகித்து அறிந்துகொண்டேன். அவர் என்றாவது ஒரு நாள் என்னை 'மகனே!' என்று அழைக்க வேண்டும் என்று ஆசைப்பட்டேன். அந்த ஆசை இன்று நிறைவேறி விட்டது. இதற்கு மேல் நான் ஒன்றும் விரும்பவில்லை...!"

முதன் மந்திரி குறுக்கிட்டு, "இளங்கோவே! தாங்கள் விரும்புகிறீர்களா, இல்லையா என்பது கேள்வி அல்லவே? எது நியாயம், எது முறைமை என்று தானே யோசிக்க வேண்டும்?" என்றார்.

"ஆகா! நன்றாக யோசியுங்கள். என்னைப் பற்றிய வரையில், யோசனை அவசியமே இல்லை. ஏற்கெனவே தீர்க்கமாக யோசித்து முடிவு செய்துவிட்டேன். பூங்குழலி பல முறை என்னிடம் 'அரச குமாரனை மணந்து அரியாசனம் ஏறப் போகிறேன்' என்று கூறினாள். அதனாலேயே என் அந்தரங்கக் காதலை நிராகரிப்பதாகவும் சொன்னாள். அப்போதெல்லாம் 'பெண்ணே! உண்மையில் நான் அரசகுமாரன்தான்! நான் விரும்பினால் இந்தச் சோழ ராஜ்யம் என்னுடையதாகும்!' என்று கூற என் உள்ளமும் நாவும் துடிதுடித்தன. அந்த ஆர்வத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டேன். நாடாளும் ஆசை என் உள்ளத்தில் என்றும் புகலாகாதென்று இறைவனை வேண்டிக் கொண்டேன். அந்த வைராக்கியத்தை நிறைவேற்றும் பொருட்டுப் பூங்குழலியைத் தியாகம் செய்யவும் உறுதி கொண்டிருந்தேன். நல்ல வேளையாக, இந்தச் சமுத்திர குமாரி தனக்குத் தகுதி யில்லாத ஆசையை விட்டு விட்டு, இந்த ஏழைச் சிவாலயத் தொண்டனை மணந்து கொள்ள மனமுவந்தாள்."

பூங்குழலி இங்கே குறுக்கிட்டு, "ஐயா! எனக்குத் 'தகுதியில்லாத ஆசை' என்று

எப்படிக் கூறினீர்கள்? மூன்று உலகும் ஆளும் சக்கரவர்த்தினி யாவதற்கும் நான் தகுதி உடையவளே. அப்படியிருந்தும், தங்களை மணந்து பூமாலை கட்டிப் பிழைப்பதற்கும் ஓடம் தள்ளி வாழ்நாளைக் கழிப்பதற்கும் இசைந்தேன்!'' என்றாள்.

''அப்படிச் சொல், பூங்குழலி! உன் தகுதியை நிலைநாட்ட இதுவே போதுமே! தகுதியும் தகுதியின்மையும் எப்படி ஏற்படுகின்றன? 'பிறப்பு ஒக்கும் எல்லா உயிர்க்கும்' என்று தெய்வப் புலவரின் தமிழ் மறை கூறுகிறதே! ஆகையால் உன்னுடைய பழைய மனோரதத்தை நீ இப்போது கை விட்டு விட வேண்டாம். உன்னைக் கைப்பிடிக்கப் போகும் இந்தப் பேரரசன் மகனுக்கும் எங்களுடன் சேர்ந்து சொல்லு! சித்தப்பா! தாங்கள் தங்கள் பிறப்பின் உண்மையை அறிந்த பிறகும் இந்த ராஜ்யம் வேண்டாம் என்று வைராக்கியம் கொண்டிருந்தது நியாயந்தான். அது தங்கள் பிறவிக் குணத்தின் பெருந்தன்மையைக் காட்டுகிறது. இப்போது நாங்கள் எல்லாரும் சொல்லுகிறோம். சக்கரவர்த்தி சொல்லுகிறார்; முதன் மந்திரி சொல்லுகிறார்; நானும் என் சகோதரனும் சொல்லுகிறோம்; என் தோழி வானதி சொல்லுவதுடன் அவளுடைய பெரிய தகப்பனாருடைய மனத்தையும் மாற்றி விடுவதற்கு ஒப்புக் கொள்கிறாள். இப்போது ஏன் தாங்கள் மறுக்க வேண்டும்?'' என்றாள் இளைய பிராட்டி குந்தவை தேவி.

''தேவி! நீங்கள் எல்லாரும் சொல்லுகிறீர்கள். ஆனால் இந்த ராஜ்யத்தின் குடி மக்கள் என்ன சொல்லுகிறார்கள்? அது உங்களுக்கு ஒரு வேளை தெரிந்திராது. நாட்டு மக்களோடு பழகியுள்ள எனக்கு நன்றாகத் தெரியும். இந்தத் தஞ்சையிலும் பழையாறையிலும் குடந்தையிலும் கோடிக் கரையிலும் நாகைப் பட்டினத்திலும் ஜனங்களின் விருப்பம் என்ன என்று எனக்கு நன்றாய்த் தெரியும். பாண்டிய நாட்டிலும் பல்லவ நாட்டிலும் கொங்கு நாட்டிலும் ஈழ நாட்டிலும் உள்ள மக்களின் விருப்பத்தையும் நான் கேள்வியினால் அறிந்திருக்கிறேன். 'அருள்மொழி வர்மரே திருமுடி சூட வேண்டும்' என்பதுதான் ஏகோபித்த மக்களின் வாக்கு. இவ்வளவு பெரிய பிரளய வெள்ளத்தை எதிர்த்து என்னால் நீந்த முடியுமா? நான் ஆசைப் பட்டாலும் இந்தப் பெரிய சோழ சாம்ராஜ்யத்தை என்னால் ஆள முடியுமா? கடவுளே! நீங்கள் எல்லாரும் 'பழைய மதுராந்தகர்' என்று சொல்கிறவர் மீது ஜனங்கள் எவ்வளவு வெறுப்புக் கொண்டிருந்தார்கள் என்பதை நான் அறிவேன். அந்த வெறுப்புக்கெல்லாம் என்னை உரிமையாளனாக்கி விடப் பார்க்கிறீர்களா? வேண்டாம்! வேண்டாம்! அவ்வளவு பெரிய தீங்கை எனக்குச் செய்ய வேண்டாம். நான் உங்களில் யாருக்கும் எந்தவிதத் தீங்கும் செய்யவில்லையே?''

மற்றவர்களில் யாரும் இதற்கு மறுமொழி சொல்வதற்குள் பொன்னியின் செல்வர் கம்பீரமாகத் தலை நிமிர்ந்து நின்று, ''இந்தப் பேச்சு இத்துடன் நிற்கட்டும்! நீங்கள் இந்த அறைக்குள் வரும் சமயத்தில் நான் 'சோழ ராஜ்யத்துக்கு நானே முடிசூட்டிக் கொள்ளப் போகிறேன்' என்று வந்தியத் தேவரிடம் சொல்லிக் கொண்டிருந்தேன். அதை நிறைவேற்றியே தீருவேன். முதிய எம் பிராட்டியின் திருவயிற்றில் உதித்த இந்த உத்தமத் தோழரின் கருத்தையும் அறிந்து கொண்டேன். இராஜ்ய உரிமை பற்றி இனிப் பேச்சு எதுவும் வேண்டாம்!'' என்றார்.

(தொடரும்)

## சீட்டு நிதிகள்

சென்னையில் நடக்கும் சீட்டு நிதிகளைப் பற்றிப் பீஹார் நேயர் ஒருவர் எழுதிய கடிதம் பிப்ரவரி 7உ. ''கல்கி'' இதழில் வெளியாகியிருந்தது. அதைப் பற்றி வாசக நேயர்களும், சீட்டுக் கம்பெனி நடத்துபவர்களும் நேரிலும் கடிதம் மூலமாகவும் பல கேள்விகள் கேட்கின்றனர். கடிதம் எழுதிய நேயர் எல்லா சீட்டுக் கம்பெனிகளைப் பற்றியும் எழுதவில்லை. ஏதோ தான் ஏமாந்து போன ஒரு கம்பெனியை மனத்தில் வைத்துக் கொண்டு எழுதியிருக்கிறார். பொறுப்புடனும் நல்ல முறையில் நடந்து வரும் சீட்டுக் கம்பெனிகளுக்கும் அவர் எழுதிய கடிதத்துக்கும் சம்பந்தம் இருப்பதாகத் தெரியவில்லை. உதாரணமாக, சென்னையிலுள்ள ''பாலுசேரி சிட் பண்டு'', ''கள்ளிக்கோட்டை சிட் பண்டு'' போன்ற பல கம்பெனிகள் பொறுப்புடன் நடந்து வருவதாகத் தெரிகிறது. ஆகையால், நல்ல முறையில் நடந்து வரும் சீட்டுக் கம்பெனிகளும், பொறுப்புள்ள கம்பெனிகளில் சீட்டு கட்டி வரும் வாசக நேயர்களும் பீஹார் நேயரின் கடிதத்தால் பீதி அடைய வேண்டியதில்லை.

# ஆராய்ந்தறிந்தோர் உபயோகிக்கும் சோப்

பொறுக்கி எடுக்கப்பட்ட புஷ்டியளிக்கும் தாவர எண்ணைகளையும் இதர மூலங்களையும் சேர்த்து புகழ்வாய்ந்த சிறந்த முறையில் பிரத்தியேகமாக நிறம்பட தயாரிக்கப் பட்டது. இந்த **மிகப் பெரிய** டாய்லட் சோப்பின் அழகு தரும் நுரை அகலாத இனிய வாசனையை அளிக்கிறது.




## ஞாபகமிருக்கட்டும்

இவ்வழகு சோப், விஞ்ஞான விதிப்படி பரிசுத்த முள்ளதென்றும், நற்பலனை அளிக்க வல்லதென்றும் ருசுவாக்கப் பட்டது. *பார்ப்பதற்கு பளிங்கைப்போல் தோன்றும் சில சோப்புகள் தவறுதலாக பரிசுத்த முள்ளவை என்று கருதப் படுகின்றன. ஆனால் அத்தகைய தெளிவும் பளபளப்பும் பரிசுத்தம் அல்லது ரகத்தின் சின்னங்களல்ல.

**இதர கோத்ரெஜ்**
**உயர்ந்த ரக சரக்குகள்**

ஹேர் டானிக்—ஓ ட கொலோன்—ஷேவிங் ஸ்டிக்—சலவை சோப் (தூள்கள்) — சோப்பெடல்ஸ் (ப்ளேக்குகள்).

**வேறு நீனுக வாசனையை விரும்புகிறவர்கட்கு**

**கோத்ரெஜ் நு. 2**

*யு. எஸ். பீரோ ஆப் ஸ்டாண்டர்ட்ஸின் சுற்றறிக்கை: "சோப்பு விதிகளும் அவைகளின் பரிசோதனை முறைகளும்."

**கோத்ரெஜ் சோப்ஸ், லிட்.**

அங்கத்தினர்:

**I இந்தியன் S சோப் அண்டு T டாய்லட்ரீஸ் M மேகர்ஸ் A அஸோஸியேஷன்**

உங்கள் கட்டிட
வேலைகளுக்கான
திட்டங்களை ஏ சி சி நீல-
கிரி பிராண்ட் சிமெண்டு
உபயோகித்து இப்போதே
தொடங்குங்கள்



வீடுகள்



பண்ணைகள்



ஆஸ்பத்திரிகள்



பாலங்கள்

பத்திரம், சிக்கனம், வலிமை கொண்ட கட்டிட வேலைகளுக்கு பிரிடிஷ் மூலாதார அளவையை மிஞ்சும் ஏ. சி. சி. ( A. C. C. ) நீலகிரி மார்க் சிமெண்டை தேர்ந்தெடுங்கள். வேண்டிய தேவைகளை கிட்டத்திலுள்ள சிமெண்டு மார்க்கெட்டிங் (இந்தியா) கிடங்குகளிலோ, வியாபாரிகளிடமோ, அல்லது எங்களிடம் கீழ்கண்ட விலாசங்களில் பெறலாம்.

தி சிமெண்டு மார்க்கெட்டிங் கம். ஆப் இந்தியா லிட் 9, மௌண்ட் ரோடு, மதராஸ். 4/12 ரேஸ் கோர்ஸ் ரோடு, கோயமுத்தூர், ஷ*கர் கம்பெனி பில்டிங், பெங்களூர்.

நீலகிரி
பிராண்டு

கான்கிரீட் உபயோகித்து கட்டுவது சம்பந்தமான எல்லா பிரச்னைகளுக்கும் தி கான்கிரீட் அஸோஸியேஷன் ஆப் இந்தியா 9, மௌண்ட் ரோடு, மதரூஸ், அல்லது ஷ*கர் கம்பெனி பில்டிங், பெங்களூர் என்ற விலாசத்திற்கு எழுதி தொழில் நுட்ப ஆலோசனைகளை இலவசமாகப் பெறுங்கள்.

ஏ சி சி

சேல்ஸ் மானேஜர்ஸ்:

**தி சிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆப் இந்தியா லிட்.**

# சமாதான வீரர்களின் யாத்திரை

எல். வி. எஸ். மணியன்

ஸ்ரீராமன் சேதுவுக்கு அணை கட்டிக் கொண்டிருந்தார். வானரங்கள் பெரிய பெரிய பாறைகளைக் கொண்டு வந்து சேதுவில் போட்டுக் கொண்டிருந்தன. அந்தச் சமயம் ஒரு சிறிய அணில் தன் முன்னங்கால் ஒன்றில் சிறிய மண் கட்டியைச் சுமந்து கொண்டு சேது அணையில் போடச் சென்றது. அந்த அற்ப ஜந்துவின் உபகாரச் சிந்தையைக் கண்டு உள்ளங் குளிர்ந்த ரகுராமன், அதன் முதுகில் மூன்று விரல்களால் தடவிக் கொடுத்தார். இந்த வரலாறு ராமாயணம் படித்த எல்லோருக்கும் தெரிந்ததே.

பாரத தேசத்தின் ஒப்பற்ற திலகம் ஸ்ரீ ஜவாஹர்லாலின் தலைமையில் மாபெரும் போர், சமாதானப் போர் நடந்து கொண்டிருக்கிறது. இரண்டு மகா யுத்தங்களில் வெற்றி கண்ட இந்திய வீரர்கள் கொரியாவில் இப்போரில் ஈடுபடச் சென்றனர். அங்கே பேஸ் அக்கௌண்ட்ஸ் ஆபீஸ் (Base Accounts Office) நிறுவப்படப் போகின்றது என்ற செய்தி வந்தது. ஆகஸ்ட் மாதம் எட்டாம் தேதி கொரியாவுக்குச் செல்ல வேண்டியவர்களில் நானும் தேர்ந்தெடுக்கப்பட்ட சமாசாரம் தெரிந்தது. சரி, நம் சக்திக்கு உட்பட்ட வரையில் இப்பணியில் பங்கெடுத்துக் கொள்ளுவோம் என்று எண்ணியவனாய்க் கொரியா போகச் சம்மதித்தேன். எங்கள் வழியில் எவ்வளவோ அதிசயங்களைக் கண்டோம். கஷ்டங்களையும் அனுபவித்தோம். புயலில் அகப்பட்டுக் கொண்டு தவித்தோம். ஆழ் கடலிலேயே எங்களுக்குச் சமாதி ஏற்படலாம் என்று தோன்றியது. முடிந்த வரையில் அந்த அனுபவங்களை யெல்லாம் எழுத்துருவாக்க முற்பட்டிருக்கிறேன்.

பூனா நகரத்தைத் தெரியாதவர்கள் இருக்க மாட்டார்கள். இந்திய தேச சரித்திரத்தைப் படித்த யாரும் பூனா என்றால் வீரன் சிவாஜியைப் பற்றி எண்ணாமல் இருக்க முடியாது. கடந்த இருபத்தைந்து, முப்பது வருஷங்களாக, இன்னொரு காரணம் பற்றி இந்நகரம் அதிகப் பிரசித்த மடைந்துவிட்டது. அந்தக் காரணம் ராணுவ அக்கௌண்ட்ஸ் ஆபீஸ் பூனாவில் இருப்பதுதான். (''பூனா அனாதைகளை''ப் பற்றிச் சுமார் மூன்று வருடங்களுக்கு முன் ''கல்கி''யில் படித்திருக்கிறீர்களே!)

''என் பிள்ளை பூனாவில் வேலையாக இருக்கிறான்'' என்று எந்தப் பாட்டியிடம் சொன்னாலும் ''அப்படியா! மிலிடரியில் தானே வேலையாயிருக்கான்!'' என்று திருப்பிக் கேட்காத பாட்டியே தென்னிந்தியாவில் இருக்க மாட்டாள்.

இந்த இலாக்கா சிப்பந்திகளுக்கு, குமரி முனையிலிருந்து காஷ்மீரம் வரையிலும், ஷில்லாங்கிலிருந்து கராச்சி வரையிலும் சுற்றுப் பிரயாணம் செய்யச் சந்தர்ப்பம் கிடைப்பதன்றி, கடந்த இரண்டு மகா யுத்தங்களில், எகிப்து, இத்தாலி, இராக், பாரசீகம், பர்மா, மலாயா முதலிய வெளி நாடுகளுக்கும் போகச் சந்தர்ப்பம் கிடைத்தது. இந்திய சைனியம் செல்லும் இடங்களுக்கெல்லாம், சைனியத்தின் கணக்கு வழக்குகளைக் கவனித்துக் கொள்ள எங்கள் இலாக்கா சிப்பந்திகள் செல்ல வேண்டியிருப்பதால், மற்ற இலாக்கா சிப்பந்திகளுக்குக் கிடைக்காத அரிய சந்தர்ப்பம் எங்களுக்குக் கிடைக்கிறது.

எட்டுச் சிப்பந்திகள், ஒரு ஆபீஸர், சுருக்கெழுத்தாளர், சமையல்காரர், வேலைக்காரர் ஆகப் பன்னிரண்டு பேர்கள் கொண்ட கோஷ்டி எங்கள் ஆபீஸிலிருந்து கொரியாவுக்குச் சென்றது. இந்தக் கோஷ்டியில் மூன்று பேர் மகாராஷ்டிரர்கள், மற்றவர்கள் தென்னிந்தியர்கள்.

•• •• ••

கொரியாவுக்கு எல்லோரும் சென்னையிலிருந்துதான் கப்பல் ஏறினார்கள். ஆகவே நாங்களும் சென்னைக்கு வந்தோம். பூனாவிலிருந்து மட்டுமல்ல, புதுடில்லி, மீரட், டேராடூன், செகந்தராபாத், பம்பாய் முதலிய இடங்களிலிருந்தும், அதிகாரிகளும், சிப்பந்திகளும் கப்பல் ஏற வந்திருந்தனர். ராணுவ கணித இலாக்காவிலிருந்து மொத்தம் அறுபத்து ஏழு பேர்கள் நம் தேசத்தின் பல பாகங்களிலிருந்தும் குழுமியிருந்தனர்.

கணக்கைக் கவனித்துக் கொள்ளுவதைத் தவிர எங்கள் இலாக்காவுக்கும் சைனியத்துக்கும் எந்த விதமான சம்பந்தமும் கிடையாது. சைனியத்தைப்போல நாங்கள் உடைதரிப்பதும் கிடையாது. சைனியத்திலிருக்கும் கட்டுப்பாடுகளும் இல்லை.

ஆனால் துருப்புகளோடு யுத்த களத்துக்குச் செல்லும்போது மாத்திரம் நாங்கள் துருப்புகளைப் போலவே உடையணிய வேண்டும். ராணுவ சட்டத்துக்கும் கட்டுப்பாடுகளுக்கும் உட்பட



ஜனநடமாட்டமற்ற சிங்கப்பூர் ரயில்வே ஸ்டேஷன் பிளாட்பாரம்



சிங்கப்பூரில் உள்ள ஒரு அழகான நீச்சல் குளம்

வேண்டும். ஆகவே சென்னையில், பதினேழு, பதினெட்டு இரண்டு தேதிகளிலும், ராணுவ அங்கிகள் எங்களுக்கு வழங்கப்பட்டன. ஆடையின் நிறம் கரும் பச்சை. எங்களிடமிருந்த கம்பளி உடைகளைத் தவிர, கொரியாவில் குளிர் அதிகமானதால், எங்கள் எல்லோருக்கும் கம்பளி ஆடைகளும் கொடுத்தார்கள்.

அதற்கு முந்திய நாள் மாலை நானும் இன்னும் மூவரும் எஸ். எஸ். தில்வாராவில் எங்களுக்குக் கொடுக்கப்படவிருந்த இட வசதியைப் பார்த்து விட்டு வந்தோம்.

மறுநாள் கணித இலாக்காவைச் சேர்ந்தவர்கள் "தில்வாரா"வில் போக வேண்டாம் என்று திடீரென்று உத்தரவு வந்ததால், நாங்கள் அன்று செல்ல முடியவில்லை.

இதற்கிடையில் நிதி ஆலோசகர் ஸ்ரீ ஜி. வி. கடோச் தில்லிக்கு ஆலோசனைக்காக அவசரமாகக் கூப்பிடப்பட்டார். விமானத்தில் சென்ற அவர் ஐந்தாவது நாள் திரும்பி வந்ததும், "நாம் கொரியா செல்வது திண்ணம். 'ஹெலினிக் பிரின்ஸ்' என்ற கிரேக்க கப்பலில் செல்வோம் என்று தோன்றுகிறது. அது இலங்கையில் இருக்கிறது. என்றைக்கு அது வரும் என்று தெரியாது. அதுவரையில் நாம் இங்குதான் இருக்க வேண்டும்" என்று சொல்லிவிட்டார்.

எனவே, நாங்கள் நிச்சயமின்றிப் பல நாட்கள் வரையில் சென்னையிலேயே இருக்க நேர்ந்தது. ஆனால் கொரியா சென்ற பிறகுதான் அவ்வளவு நாள் சென்னையில் நாங்கள் தடை செய்யப்பட்டது எவ்வளவு நல்லது என்று தெரிந்தது.

• • •

கடைசியாக, 'ஜலகோபால்' கப்பலில் செப்டம்பர் மாதம் 5-ந் தேதி நாங்கள் சென்னைத் துறைமுகத்திலிருந்து கொரியாவுக்குக் குதூகலத்துடன் பிரயாணமானோம்.

அன்று மாலை இரண்டரை மணி சுமாருக்கு ஸ்ரீ ராஜாஜி அவர்கள் கப்பலுக்கு வந்தார் எங்களை வழி அனுப்ப. கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வந்தது போலிருந்தது எங்களுக்கு. நாங்களாகச் சென்று அவருடைய ஆசியைப் பெற முடியாது போனாலும், அவராக வந்து ஆசி தந்து வழி யனுப்பியது மனத்துக்குச் சந்தோஷமாக இருந்தது. ஜலகோபால் மூன்று மணிக்குச் சென்னைத் துறைமுகத்திலிருந்து புறப்பட்டது. "பாரத மாதா கீ ஜே" என்ற ஜெயகோஷம் துறை எங்கும் எதிரொலித்தது. எப்போது திரும்பிப் பார்ப்போமோ என்று நாங்கள் யாவரும் தாய் நாட்டினிடம் பிரியா விடை பெற்றுக் கொண்டோம்.

இரவு பன்னிரண்டு மணிக்கு இருபத்தி நான்கு நிமிஷங்கள் முன்னே தள்ளி வைக்க வேண்டும் என்று ஏழாந் தேதி மாலை நாலேகால் மணிக்கு, கப்பல் அதிகாரிகளில் ஒருவர் ஒலிபரப்பி மூலம் தெரிவித்தார். கப்பல் கிழக்கு நோக்கிச் சென்று கொண்டிருந்ததால் இம்மாதிரி மணியில் வித்தியாசம் ஏற்படுகிறது. கிழக்கே செல்லச் செல்ல மணியை முன்னே தள்ளி வைத்துக் கொள்ள வேண்டியது அவசியம்.

ஏனெனில், சூரியன் கிழக்கே உதிக்கிறது. ஆகையால் கிழக்கத்திய நாடுகளில் சூரிய உதயம் முதலில் ஆகும். பிறகே மேற்கத்திய நாடுகளில் உதிக்கும். சூரியன் கிளம்பும் நேரத்தில் இம்மாதிரி வித்தியாசம் ஏற்படுவதால் தான் மணியிலும் வித்தியாசம் உண்டாகிறது. கொரியாவில் ஆறு மணிக்கு உதிக்கும் அதே சூரியன், இந்தியாவில் உதிக்கும் சமயத்தில், கொரியாவிலே சுமார் ஒன்பது மணியாகிறது. இந்தியாவில் சூரியோதயத்துக்குத் தக்கபடி நம் கடிகாரம்

மணி ஆறு என்று காட்டினால், கொரியா சூரியோதயப்படி ஒன்பது என்று முன்னால் காட்ட வேண்டும். இதற்காகத்தான் கிழக்கு நோக்கிப் போகும்போது மணியை முன்னேயும், மேற்கு நோக்கிச் செல்லும்போது பின்னேயும் தள்ளி வைக்க வேண்டும். இவ்விதமே நாங்கள் கப்பலில் செல்லச் செல்லக் கடியாரத்தில் சில நிமிஷங்கள் தள்ளி வைத்துக் கொள்ள வேண்டியதாயிற்று.



சிங்கப்பூர் மாரியம்மன் கோயில் விமானங்கள்

கப்பல் சிங்கப்பூரை நெருங்க நெருங்கப் பல குட்டித் தீவுகள், நிலப் பரப்புகள் தென்பட ஆரம்பித்தன. தூரதிருஷ்டிக் கருவி மூலம் அவைகளைப் பார்த்துக் கொண்டு வந்தோம். மலாகாத் தீவுகள் வழியில் சென்றன. மீன் பிடிக்கும் சிறிய படகுகள் அடிக்கடி காணப்பட்டன. பல திசைகளிலிருந்து சிங்கப்பூருக்குச் செல்லும், அல்லது சிங்கப்பூரிலிருந்து திரும்பி வரும் கப்பல்கள் வருவதும், போவதுமாக இருந்தன.

அருகாமையில் பல தீவுகளிலிருந்ததால் கூட்டம் கூட்டமாகப் புள்ளினங்கள் காணப்பட்டன. எங்கள் கப்பலிலேயே நிரந்தரமாக வாசம் செய்து வந்த குயில் போன்ற இரண்டு கறுப்புப் பட்சிகள், தங்கள் இனத்தாரைக் கண்டதும், வழக்கத்துக்கு மாறாக அதிகமாக வட்டமிட்டன. எனினும் கடைசியில் அவை மற்றப் பறவைகளோடு கரைக்குச் செல்லாமல் மறுபடியும் எங்கள் கப்பலிலிருந்த தங்கள் வாசஸ்தலத்துக்கே திரும்பி வந்து விட்டன.

** ** **

செப்டம்பர் 12-ந் தேதி அதிகாலையில் ஜலகோபால் சிங்கப்பூரை அடைந்தது. சிங்கப்பூர் துறைமுகம் மிகப் பெரியது. உலகத்திலேயே பெரியதான துறைமுகங்களில் ஒன்று.

மலேயாவில் உள்ள இந்தியர்கள் பிரதிநிதி ஸ்ரீ எம். கோபால மேனன் எங்களைச் சந்திக்கவந்தார். சிறிது நேரம் எங்களோடு பேசிக் கொண்டிருந்ததில் வந்திருக்கும் ஜூனியர் ஆபீஸர்களில், பல ஜாதிக்காரர்கள், பல பாஷை பேசுகிறவர்கள் இருப்பதை அறிந்தார். "ஒரு சிறு இந்தியா கொரியாவுக்குப் போகிறது என்று சொல்லுங்கள்! நீங்கள் மகத்தான ஒரு காரியத்தைச் செய்யச் செல்கிறீர்கள் என்பதை ஞாபகப் படுத்துகிறேன். கடமையை உணர்ந்து நடந்து கொள்வீர்களென்று எண்ணுகிறேன்" என்று சுருக்கமாக உற்சாக மூட்டும் வார்த்தைகள் சொல்லி விடைபெற்றுச் சென்றார்.

நாங்கள் சிங்கப்பூரில் இரண்டொரு நாள் தங்கி, சிங்கப்பூர் நகரைச் சுற்றிப் பார்த்தோம். பிறகு அங்கிருந்த கப்பலில் புறப்பட்ட போதும் இந்தியப் பிரதிநிதி ஸ்ரீ எம். கோபால மேனன், தமது மனைவியார் சகிதம் எங்களை வழியனுப்ப வந்தார். "இந்திய வீரர்கள் இதற்கு முன் எத்தனையோ யுத்தங்களில் வெற்றி மாலை சூடியிருக்கின்றனர். அந்த யுத்தங்களைக் காட்டிலும் மிகவும் மகத்தானதும், கடினமானதுமான சமாதானப் போரில் பங்கெடுத்துக் கொள்ள நீங்கள் போகிறீர்கள். உலகிலுள்ள மற்ற தேசங்களெல்லாம் இந்தப் போரை நடத்த உங்களைத் தேர்ந்தெடுத்திருக்கின்றன. மகாத்மா காந்தி அவர்கள் காட்டிய வழியைப் பின்பற்றி இப்போரில் வீரப் போர் புரிந்து வெற்றி மாலை சூடி, இந்திய சரித்திரத்தில் பொன் நாள் ஒன்றை எழுதுவீர்கள் என்று நம்புகிறேன். ஜெய்ஹிந்த்" என்றுகூறி வழியனுப்பினர்.

இராணுவ பாண்டு வாத்திய கோஷ்டி 'ஜன கண மன' கீதம் வாசித்தது. "பாரத மாதா கீ ஜே" என்ற கோஷத்துடன் இந்தியப் பிரமுகர்களும் பொது மக்களும் வழி யனுப்பினர்.

கப்பலின் ஆட்டம் 17-ந் தேதி அதிகரித்தது. பக்க வாட்டத்தில் இதுவரை ஆடி வந்த கப்ப




கம்பராமாயணத்தில் காலப் போக்கில் கலந்துவிட்ட செருகு கவிகளை நீக்கி திரு சொ. முருகப்பா அவர்கள் "இராமகாதை" என்ற பெயரில் ராமாயணத்தின் ஒரு பகுதியான பால காண்டத்தை விளக்க உரைகளுடன் வெளியிட்டிருக்கிறார்கள். இராமகாதை வெளியீட்டு விழா காரைக்குடி கம்பன் கழக ஆதரவில் ஜனவரி 17ல் சிறப்பாக நடந்தேறியது.

விழாவுக்குத் தலைமை தாங்கிய திரு ச. வையாபுரிப் பிள்ளை அவர்களையும், விழாவில் பங்கு பற்றிப் பெருமையளித்த வள்ளல் அழகப்பச் செட்டியார், கம்பன் கழக செயலாளர் திரு சா. கணேசன், குன்றக்குடி அடிகளார் முதலிய அறிஞர்களையும் திரு சொ. முருகப்பா அவர்களையும் மேலே படத்தில் காணலாம்.

லானது முன்னுக்கும் பின்னுக்குமாக ஆட ஆரம்பித்தது. இப்படி ஆடியதால் கப்பல் வேகமாக முன் செல்ல முடியவில்லை. கப்பலின் வேகம் குறைந்தது. இதுவரை மணிக்குப் பதினான்கு மைல் வேகத்தில் சென்ற கப்பல் இப்பொழுது ஒன்பது மைல் தான் செல்ல முடிந்தது.

குளிர் அதிகமாயிற்று. எங்கும் பனி கவிந்து கொண்டிருந்தது. சூரியனுடைய கிரணங்கள் தீட்சண்யமாக இல்லை. ஆகவே கம்பளிச் சட்டைகளைப் போட்டுக் கொண்டு பொழுதுபோக்கு அறையிலேயே உட்கார்ந்திருந்தோம். கிராதியைப் பிடித்துக் கொண்டு கொஞ்ச நேரம் வேடிக்கை பார்த்துக் கொண்டிருப்போமென்றால் அலைகள் உயரமாக எழுந்து சீறின. கடலின் கொந்தளிப்பைக் காணப் பயங்கரமாக இருந்தது. ஓரிடத்தில் தென்னைமர உயரத்துக்கு அலை எழுந்தது. அதன் பக்கத்திலேயே கிடுகிடு பாதாளம்! உயர எழும்பிய அலைகளைப் பார்த்தால் சமுத்திர அரக்கன் தன் எண்ணற்ற கரங்களோடு கப்பலையே விழுங்க வருவதுபோல இருந்தது! எங்கள் கப்பலிலிருந்த சுமார் ஆயிரத்து நூறு பேர்களுடன் எங்கு கப்பலே மூழ்கி விடுமோ என்று எங்களில் சிலர் கதிகலங்கிக் கொண்டிருந்தனர்.

18-ந் தேதியும் கப்பல் அதிகமாக ஆடியது. அன்று மாலை சுமார் ஆறு மணி இருக்கும். நான் பொழுது போக்கு அறையில் சோபாவில் படுத்துக் கொண்டிருந்தேன். சலூன் தளத்திலிருந்து "கடலில் விழுந்து விட்டார்கள்" என்று கூக்குரல் கேட்டது. நான் திடுக்கிட்டு எழுந்து ஓடினேன்.

நான் கண்ட கோரக் காட்சியை எப்படி எழுதுவது! மூன்று வீரர்கள்! ஆம்! வீரர்கள் தாம்! சமாதானப் போரில் பங்கெடுத்துக் கொள்ளச் சென்று கொண்டிருந்த பாரத தேவியின் மூன்று புத்திரர்கள் நடுக் கடலில் உயிருக்கு மன்றாடிக் கொண் டிருந்தனர். கடல் அரக்கனோடு கட்டிப் புரண்டு கொண்டிருந்தனர். சற்றும் எதிர்பாராத சமயத்தில், திடீரென்று பின்புறமிருந்து ஒரு பிரம்மாண்டமான அலை வந்து அவர்களை முதுகுப் புறம் தாக்கிக் கடலில் தூக்கி எறிந்து விட்டது என்பது தெரிந்தது.

கடலில் விழுந்ததும் அவர்களில் ஒருவர் 'உயிர் சட்டையை எடுத்துப் போடு' என்று சமிக்ஞை செய்தார். பக்கத்திலிருந்தவர் ஓடிப் போய் உயிர் சட்டையைக் கடலில் வீசி எறிந்தார். உயிர் சட்டை ஒரு பக்கம் விழுந்தது. அலைகள் வீரர்களை வேறொரு பக்கம் அடித்துக் கொண்டு போய்க் கொண்டிருந்தது.

கப்பல் உடனே நிறுத்தப்பட்டது. "லைப் பெல்டை"க் கடலில் வீசி எறிந்தார்கள் கப்பல் சிப்பந்திகள். உடனே "லைப் போட்" ஒன்றையும் கடலில் இறக்கினார்கள். இந்தப் படகைச் செலுத்திக் கொண்டு படகோட்டிகள் யாரும் செல்லவில்லை. படகு மட்டும் அவிழ்த்து விடப்பட்டது. படகில் துடுப்புகள் இருந்தன. தெய்வாதீனமாய்க் கடலில் விழுந்தவர்கள் படகை அணுகினால், அதில் தொத்தி ஏறிக் கொண்டு, கப்பலையோ, அல்லது எங்காவது கரையையோ அடையவே படகு இறக்கி விடப்பட்டது.

கப்பலும் அவர்கள் விழுந்த இடத்தில் அவர்களைத் தேடிச் சுற்றிச் சுற்றி வந்தது. சுமார் இரண்டு மணி நேரம் இப்படிச் சுற்றி வந்து அவர்களைக் கப்பல் தேடியது. மூன்று பேர்கள்

விழுந்து விட்ட செய்தி "சிக்னல்" மூலம் அருகிலிருந்த துறைமுகங்களுக் கெல்லாம் மிக்க பரபரப்புடன் தெரிவிக்கப்பட்டது.

இவற்றைத் தவிர விழுந்தவர்களைக் காப்பாற்ற வேறொன்றும் செய்ய இயலவில்லை. புயலடித்துக் கொண் டிருக்கும்போது, கடல் தன் சக்தியை யெல்லாம் திரட்டிக்கொண்டு எதிர்க்கும்போது யார்தான் என்ன செய்ய முடியும்! இயற்கை யின் முன்னால் மனிதனின் பலஹீனம் வெட்ட வெளிச்ச மாயிற்று.

நாலாபுறமும் இருள் சூழ ஆரம்பித்தது. இருள் அதிகரிக்க அதிகரிக்க ஒன்றுமே தெரியவில்லை. கப்பல் பயங்கரமாக ஆடிக் கொண்டிருந்தது. விழுந்தவர்களைக் காப்பாற்ற முடியவில்லை. கல்யாண் சிங் ரவுத், குந்தன் சிங், ஸாதே சிங் சௌஹான் என்ற மூவரையும் கடல் அபகரித்துக் கொண்டு விட்டது.

கர்னல் கிரவாலும், காப்டன் அனந்தும், கடலில் விழுந்து விட்டவர்களுக்குத் தங்கள் அனுதாபத்தைத் தெரிவித்தார்கள். 19-ம் தேதி சரியாக பகல் பதினொரு மணிக்குத் தாரை ஊதிற்று. நாங்கள் எல்லோரும் மேல்தளத்தில் வரிசையாக நின்று, எங்களை விட்டுப் பிரிந்த, கடலில் மூழ்கி மறைந்த மூன்று நண்பர்களின் ஆத்மா சாந்தி யடையப் பகவானைத் தியானித்துக் கொண்டு, இரண்டு நிமிஷங்கள் மௌனமாக இருந்தோம். இதுதான் எங்களால் செய்ய முடிந்தது.

*　　　　*　　　　*

சென்னையிலிருந்து சிங்கப்பூருக்கு ஒரு வாரமும், சிங்கப்பூரிலிருந்து ஹாங்காங்கிற்கு ஒரு வாரமும், ஹாங்காங்கிலிருந்து தென் கொரியாவிலுள்ள இன்சான் துறைமுகத்துக்கு வர ஒரு வாரமும் ஆக மூன்று வாரங்கள் ஆயின.

கப்பல் இன்சான் துறைமுகத்தை நெருங்குவதற்கு முன் பகல் இரண்டரை மணி சுமாருக்கு 'ஹெலிகாப்டர்' விமானம் ஜலகோபாலை வட்டமிட்டது. உடனே எல்லாப் பிரயாணிகளும் தளத்தில் குழுமி விட்டார்கள். கருடன் வட்டமிடுவது போல, அந்த விமானம் இரண்டு தடவை கப்பலை வட்டமிட்டது. பிறகு பின் பக்கத்தில் நடுத் தளத்தின் கோடியில் இருந்த சிறிய வெட்ட வெளிக்கு நேராக ஆகாயத்தில் ஆடாமல், அசையாமல் நின்றது. அதிலிருந்து ஒரு வளையம் கயிற்றில் தொங்கியது. அது, குதிரையின்மேல் ஏறுவதற்குச் சேணத்தில் கால் வைத்துக் கொள்ள இருக்கும் இரும்பு வளையம் போல இருந்தது. அதன் வழியாக, ஒரு அமெரிக்க சிப்பாய் குதிரையி லிருந்து இறங்குவது போல, நடுத் தளத்தில் குதித்துக் கடிதம் கொண்டு வந்தார். அவர் இறங்கும்போது திரிசங்கு சொர்க்க வாசி ஒருவர் கீழே இறங்கி வருவது போலிருந்தது!

எத்தனையோ விமானங்கள் பறப்பதை இது வரை பார்த்திருந்த எங்களுக்கு, அந்தரத்தில் ஒருவித பிடிப்பும் இல்லாமல் ஆடாமல் அசையாமல், இந்த 'ஹெலிகாப்டர்' விமானம் நின்றது மிகவும் அதிசயமாகவும் ஆச்சரியமாகவும் இருந்தது.

குறிப்பிட்ட தினமான 27ம் தேதி செப்டம்பர், மாலை மூன்றரை மணிக்கு ஜலகோபால் இன்சான் துறைமுகத்தை அடைந்தது. கலம் துறைமுகத்தை நெருங்கவில்லை. துறையிலிருந்து அரை மைல் தூரத்தில் கடலில் கப்பல் நின்று கொண்டிருந்தது. இரவெல்லாம் நாங்கள் கப்பலிலேயே தங்கி இருந்து பொழுதைக் கழித்தோம்.

அன்று இரவு கப்பலிலே நடந்த பந்தயத்தில் ஜெயித்தவர்களுக் கெல்லாம் பரிசுகள் வழங்கப் பட்டன. கப்பல் காப்டன் ஸ்ரீ அனந்த் பரிசு வழங்கினார். முதல் பரிசு பெற்றவர்களுக்கு ஜல கோபால் பெயர் பொறிக்கப்பட்ட வெள்ளிக் கோப்பைகளும், மற்றவர்களுக்கு வேறு பரிசுச் சின்னங்களும் கொடுக்கப்பட்டன. (தொடரும்)

## "அவர்கள் வேதனை"

ஜனவரி மாதம் பத்தாம் தேதி "கல்கி"யில் வெளியான "அவர்கள் வேதனை" என்னும் சிறு கதையைப் பற்றியும், அதைப் பற்றிய மிக வருத்தமான செய்தியும் வாசகர்கள் அறிந்ததே.

அந்தக் கதையில் வரும் பெயர்கள் எல்லாமே உண்மைப் பெயர்கள்தான்; சம்பவங்கள் மட்டும்தான் கற்பனை. முழுதும் என் கற்பனையின் வடிவம். அந்த வடிவத்திற்குக் கூடச் சில இடங்களில் ஜீவனூட்ட முனைந்திருக்கிறேன். இதை அன்புக் கண்களில் கண்டு படிப்போரே ஒன்றி அனுபவிப்பார்கள்.

"அவர்கள் வேதனை"யில் தோன்றும் கதாநாயகன் குப்புசாமியும், கதாநாயகி கலாவதியும், அன்பாக—அழகாக—அமைதியாக—வாழத் தெரிந்து வாழ்ந்து கொண்டிருக்கும், எனது பேரன்புக்குரிய தம்பதிகள். அவர்களைத்தான், எனது எழுத்தான இதயத்தின் குறும்புத்தனத்தால், கதையில் அவர்கள் வாழ்க்கையைச் சற்று மாற்றி யமைத்துப் பார்க்கலாமே என்று ஆசை எழுந்தது. அந்த ஆசையே "பழி."

ஆம், "பழி"தான் அந்தக் கதைக்கு நான் சூட்டிய பெயர். அதைக் "கல்கி" அலுவலகத்தில் "அவர்கள் வேதனை" என்று மாற்றி அமைத்து விட்டார்கள். இதுதான் அந்தக் கதையின் கதை.

நான் வேறு எந்தக் கதையையும் பார்த்தோ தழுவியோ எழுதியதல்ல என்று மட்டும் உறுதி கூறுகிறேன்.

என்னால் சொந்தமாகவே கதைகள், கவிதைகள் எழுத முடியும்; எழுதி யிருக்கிறேன். நான் இந்த வீதிக்குப் புதியவன்தான்; ஆனால் தமிழுக்கும் புதியவனல்ல.

என்னிடம் நேர்மை—உறுதி—நம்பிக்கை—சத்தியம் இருக்கிறது.

நம்பிக்கை ஒரு கதிர்; அதை மேகங்கள் சில சமயங்கள் மறைத்தாலும் எப்போதுமே மறைக்க முடிவதில்லை. ஆகையால் என்மீது பேரன்பு கொண்டுள்ள அன்பர்களுக்கு நன்றி.

இதைக் காணும் பத்திராதிபர்களுக்கு வேண்டுகோள். "பழி" என்னும் தலைப்பில் மூன்று ஆண்டுகளாகவே தங்கள் காரியாலயத்துக்கு நான் கதை அனுப்பி யிருக்கிறேனா என்று தயவு செய்து பார்த்து எழுதுங்கள். இந்தக் கதையை மூன்று ஆண்டு காலமாகவே பல பத்திரிகைகளுக்கு அனுப்பி யிருக்கிறேன். தயவு செய்து பார்த்து எழுதி உண்மையை விளக்குங்கள்.

ஜோலார்பேட்டை
30—1—54

சோலை—இருசன்

# திரு. வி. க. மணி மண்டபம்

## கால்கோள் விழா

தமிழ் மொழிக்கும் தமிழ் இலக்கியத்துக்கும் தமிழ் நாட்டுக்கும் அருந்தொண்டு ஆற்றியவரும் "ராயப்பேட்டை முனிவர்" என்று எல்லாரும் போற்றி வணங்கும் வண்ணம் வாழ்ந்தவருமான திரு வி. கல்யாணசுந்தரனார் ஞாபகார்த்த மணி மண்டபத்துக்கு பிப்ரவரிமீ 5ஃ மிகச் சிறப்பாகக் கால்கோள் விழா நடந்தேறியது.

ராயப்பேட்டை ஸ்ரீ பாலசுப்பிரமண்ய பக்த ஜன சபையை ஒட்டியுள்ள திறந்த வெளியில், இந்த விழாவுக்கென்றே அமைக்கப் பட்டிருந்த அலங்காரப் பந்தலில், மேள வாத்தியமும், வாழ்த்தொலிகளும், ஜெய கோஷங்களும் முழங்க முதன் மந்திரி ராஜாஜி அவர்கள் மணி மண்டபத்துக்கு அடிப்படைக் கல் நாட்டினார்கள். திரு பி. டி. ராஜன் எம். எல். ஏ., அவர்கள் கால்கோள் விழாவுக்குத் தலைமை வகித்துச் சிறப்பித்தார்கள்.

விழாவுக்கு ஏராளமான தமிழ் அன்பர்களும், பிரமுகர்களும், பத்திரிகையாளர்களும், எழுத்தாளர்களும் வந்து குழுமி யிருந்தனர்.

"முதன் முதலில் சென்னைப் பட்டணத்துக்கு வந்தபோது எனக்குக் கிடைத்த நண்பர்களில் திரு வி. க. ஒருவர்" என்று ராஜாஜி அவர்கள் தமக்கும் திரு. வி. க. வுக்கும் இருந்த நீண்டகால நட்பைப் பற்றிக் குறிப்பிட்டார். "மணிமண்டபம் ஏற்படும் இந்தக் குஹாலயத்தில் திரு வி. க. இருப்பார். இந்த இடத்தைப் பார்த்துப் பக்தி செலுத்தியிருக்கிறேன். இந்த இடத்தில் கட்டிடம் எழுவது மகிழ்ச்சியைக் கொடுக்கிறது. திரு. வி. க. வாழ்ந்து, அக்கம் பக்கத்தார் அவரை அறிந்திருந்த இடத்தில் நினைவுச் சின்னம் எழுப்புவது மிகப் பொருத்தமானது" என்றார். அடக்கமாகத் திட்டமிட்டு விரைவாகக் கட்டிடம் கட்டி முடிக்க உத்தேசித்திருக்கும் மணி மண்டபக் குழுவினரைப் பாராட்டினார். திரு. வி. க. மணி மண்டபத்துக்குத் தமிழ் மக்களைத் தாராளமாகப் பொருள் உதவி வழங்கக் கேட்டுக் கொண்டார்.

திரு பி. டி. ராஜன் சென்னையில் உள்ள தமிழ் மக்கள் ஒவ்வொருவரும் தங்களால் இயன்ற சிறிய தொகை கொடுத்து உதவினால் கட்டட வேலை விரைவில் பூர்த்தியாகி விடும் என்று வேண்டிக் கொண்டார்.

மணி மண்டப விழா செயலாளரான திரு எஸ். சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள் நன்கொடைகள் வழங்கிய எல்லாருக்கும் நன்றி தெரிவித்தார். முக்கியமாக "சுதேசமித்திரன்" ஆசிரியர் ஸ்ரீ சி. ஆர். சீனிவாசன், திருவாளர் வி. ஆ. பெ. விசுவநாதன் முதலியவர்களின் உதவியைக் குறிப்பிட்டார்.

கடைசியாக, "கல்கி" ஆசிரியர் வந்தனோபசாரம் கூற விழா இனிது முடிந்தது. கால்கோள் விழாவின் சில கோலாகலமான காட்சிகளை எதிர்ப் பக்கத்தில் உள்ள படத்தில் காணலாம்.

மணி மண்டப நிதிக்கு இதுவரை ரூ. 12,000 வரை சேர்ந்திருக்கிறது. தமிழ் மக்கள் இந்த உத்தமத் திருப்பணிக்குத் தங்களால் இயன்ற பொருள் உதவி செய்து, திரு. வி. க. மணி மண்டபம் விரைவில் வானோங்கி உயர்ந்து நிற்கும் படி செய்யக் கேட்டுக் கொள்கிறோம்.




அது மிகவும் பழைய வீடு. ஆனால் அந்த வீட்டைப் பார்த்தால், அது ஒரு காலத்தில் மிகவும் நன்றா யிருந்திருக்க வேண்டும் என்று தோன்றியது. மிகவும் அழகான மாடி வீடு. அவ்வளவு பெரிய வீட்டில் ஒரு கிழவர் தன்னந்தனி மனிதராக வசித்து வந்தார். அவருக்கு உறவினர் என்று சொல்லிக் கொள்ள யாரும் இல்லை. தினந்தோறும் ஒரு வேலைக்காரி அந்த வீட்டு வாசலைப் பெருக்கித் தண்ணீர் தெளித்துக் கோலம் போடுவாள்.

அந்தத் தெருவில் வசித்த குழந்தைகளுக்கெல்லாம் அந்தத் தாத்தாவின் வீட்டுக்குப் போவதென்றால் அலாதி உற்சாகம். எப்பொழுது பார்த்தாலும் குழந்தைகள் கூட்டம் கூட்டமாக அந்த வீட்டுக்கு வந்த வண்ணமாக இருக்கும். தாத்தா மிட்டாய் நிறைய வாங்கி வைத்திருப்பார். குழந்தைகளுக்கெல்லாம் சாக்கலேட்டும், மிட்டாய்களும், பிஸ்கோத்துகளும் கை நிறைய அள்ளிக் கொடுப்பார்.

சுந்தரம் அந்தப் பழைய வீட்டுக்கு எதிரில்தான் இருந்தான். அவன் வயசுப் பையன்களெல்லாம் தாத்தாவிடம் மிட்டாய்களும் பிஸ்கோத்துகளும் வாங்கித் தின்பதைப் பார்க்கும்போது சுந்தரத்துக்கும் நாக்கில் ஜலம் ஊறும். ஆனால் அவனுக்கு அங்கே போகக் கூச்சமாயிருந்தது.

அன்று அந்தத் தாத்தாவின் வீட்டுக்கு நிறையக் குழந்தைகள் வந்திருந்தனர். தாத்தாவும் மிகவும் ஆசையோடு மிட்டாயும் சாக்கலேட்டும் வாரி வாரி வழங்கினார். சுந்தரத்துக்கு அதைப் பார்த்துக் கொண்டு தன் வீட்டிலேயே இருக்க முடியவில்லை. மறு நிமிஷம் அவனும் அந்த வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தான். குழந்தைகளெல்லாம் குதூகலமாக மிட்டாய் வாங்கிக் கொண்டு போய்ச் சேர்ந்தனர். சுந்தரம் மாத்திரம் அந்தக் கூட்டத்தில் புகுந்து கைநீட்டாமல் தயங்கியபடி தூரவே நின்றான்.

குழந்தைகளெல்லாம் போனதும் தாத்தா சுந்தரத்தைப் பார்த்தார். உடனே அவனிடம் வந்து, "குழந்தை, வா. இந்தா உனக்கு மிட்டாய்!" என்று கூறி ஒரு சாக்கலேட் பெட்டியை அவனிடம் கொடுத்து, பிறகு "உன் பெயர் என்ன? நீ எங்கே யிருக்கிறாய்?" என்று கேட்டார்.

"என் பெயர் சுந்தரம். நான் எதிர் வீட்டில் இருக்கிறேன். தினம் இங்கே குழந்தைகளெல்லோரும் வந்து மிட்டாய் வாங்கிக் கொண்டு போவதை எங்கள் வீட்டு ஜன்னல் வழியாகப் பார்த்துக் கொண்டேயிருப்பேன். இன்று எனக்கு மிட்டாய் தின்ன வேண்டும் போலிருந்தது......!" என்றான் சுந்தரம்.

"சுந்தரம், இனிமேல் இது உன் வீடு. உனக்கு வேண்டிய புஸ்தகம், பென்சில், பேனா முதலியவைகள் எல்லாம் நான் தருகிறேன். மிட்டாயும் நிறையத் தருகிறேன்!" என்று மிகவும் அன்போடு கூறிய பெரியவர் அவனை உள்ளே அழைத்துச் சென்றார். அங்கே பீரோ நிறையப் புஸ்தகங்கள் இருந்தன. எல்லாம் குழந்தைப் புஸ்தகங்கள். அவைகளில் அற்புதமான

தைகளும் வர்ணம் போதிந்த சித்திரவிசித்திரங்களும் நிறைந்திருந்தன.

சுந்தரத்துக்கு அந்த வீட்டுக்குப் போய்ப் பெரியவருடன் விளையாடி விட்டுப் புஸ்தகங்கள் படித்துவிட்டு, மிட்டாய் வாங்கிக் கொண்டு வீட்டுக்கு வருவதில் அளவு கடந்த ஆவல் ஏற்பட்டு விட்டது. தினம் அங்கு போய் வர ஆரம்பித்தான். அவரும் அவனிடம் மிகப் பிரியமாயிருந்தார்.



* * *

இதெல்லாம் இப்பொழுது பழைய கதை; சுமார் பதினேழு வருஷங்கள் கடந்துவிட்டன. முன்பு சின்னப் பையனாயிருந்த சுந்தரம் இப்பொழுது இருபத்தைந்து வயது நிரம்பிய வாலிபனாகி விட்டான். அவனுக்கு விவாகமாகி ஒரு குழந்தையும் பிறந்துவிட்டது. ஆனால் இப்பொழுது அந்தப் பழைய வீடு இல்லை. அந்த இடத்தில் ஓர் அழகான புதிய வீடு எழுந்தது. பழைய வீட்டில் இருந்த பெரியவர் காலமாகி விட்டார். அவருக்கு உற்றார், உறவினர் என்று யாரும் இல்லாததால் அவருடைய வீடும், புஸ்தகங்களும், மற்றுமுள்ள மேஜை, நாற்காலிகளும் ஏலம் போடப்பட்டு விட்டன. அந்தப் பழைய வீட்டை ஒருவர் வாங்கி அதை இடித்து, புது மோஸ்தரில் அழகான வீடாகக் கட்டி விட்டார். வெளியூரில் உத்தியோகத்தில் இருந்த சுந்தரம், உத்தியோகத்தில் மாற்றலாகிப் பழைய ஊருக்கே வந்துவிட்டான். அப்பொழுது இந்தப் புதிய வீடு காலியாயிருந்தது. சுந்தரம் புதிய வீட்டில் குடும்பத்துடன் குடிபுகுந்தான்.

அந்த வீட்டுக்கு வந்ததிலிருந்து சுந்தரத்துக்குத் தன் குழந்தைப் பிராயத்து நினைவுகளெல்லாம் மனக்கண்ணில் விரிந்தன. உடனே சுந்தரம் ஏழு வயதுப் பையனாகி விட்டான். வீடு பழைய வீடாக மாறிற்று. அப்பொழுது அந்தப் பழைய வீட்டிலிருந்த பெரியவர் சிரித்துக் கொண்டே தோன்றினார். கூட்டம் கூட்டமாகச் சிறுவர்களும் சிறுமிகளும் வந்து பெரியவரிடம் மிட்டாய்களும் சாக்குலேட்டுகளும் வாங்கிக் கொண்டு உற்சாகமாகக் குதி போட்டுக் கொண்டு ஓடினர். சிறுவன் சுந்தரமும் அந்தச் சிறுவர் சிறுமியர்களுடன் மிட்டாய் வாங்கிக் கொண்டான்.

சட்டென்று சுந்தரத்தின் பழைய நினைவுகள் மறைந்தன. ''ஆகா! அந்தப் பெரியவர் குழந்தைகளிடம் எவ்வளவு அன்பாயிருந்தார்! கொஞ்சங் கூடச் சளைக்காமல் வாரி வாரி மிட்டாய்களை வழங்கினாரே. புத்தகங்களை ஏராளமாக வாங்கி வைத்துப் பையன்களுக்கெல்லாம் படிக்கக் கொடுத்தாரே! அத்தனை நல்ல மனிதருக்குக்கூட மரணம் ஏற்பட்டு விட்டதே! அவர் இறந்து விட்டார் என்பதை என்னால் நம்ப முடியவில்லையே. அடேயப்பா, குழந்தையாயிருந்தபோது நான் இந்த வீட்டில் எவ்

வளவு சந்தோஷத்தோடு இருந்தேன்! அதெல்லாம் கனவாகி விட்டதே! அந்த இன்ப நாட்களை மறுபடியும் காண முடியாதா? இப்பொழுதும் அவர் இங்கே இருப்பது போலவே இருக்கிறது. இப்பொழுது அந்தத் தாத்தா இருந்தால் என்னைப் பார்த்து எவ்வளவு சந்தோஷப்படுவார்!'' என்று மனத்தில் நினைத்தவன் வாயினாலும் இரைந்து சொல்லி விட்டான். சுந்தரத்தின் கண்களில் நீர் பெருகியது.

''சுந்தரம், நான் இறந்து விட்டதாக நினைத்து வருத்தப்படாதே! நான் செய்து வந்த செயலின் மூலம் நான் என்றும் இருப்பேன். எனக்கு மரணம் கிடையாது. நான் செய்து வந்த காரியத்தை நீ செய்ய ஆரம்பித்தால் நான் இந்த வீட்டுக்கு மறுபடியும் வந்து விடுவேன்!''

இந்தப் பேச்சைக் கேட்டதும் சுந்தரம் கண்களைத் துடைத்துக் கொண்டு, ஆச்சரியத்துடன் பார்த்தான். அந்தத் தாத்தா நின்று கொண்டிருந்தார்.

''தாத்தா!'' என்று அழைத்து அவரிடம் ஓடி அவரை வணங்கினான். தாத்தா அவனை அன்போடு ஆசீர்வதித்தார். ஆனால் மறு நிமிஷம் மறைந்து விட்டார்.

சுந்தரம் மறு நாளே சாக்கலேட்டு, மிட்டாய் எல்லாம் நிறைய வாங்கி வைத்துக் குழந்தைகளுக்கெல்லாம் வழங்க ஆரம்பித்தான்; படங்களும் கதைகளும் நிறைந்த பாப்பா மலர்ப் புத்தகங்களை நிறைய வாங்கி வைத்துக் குழந்தைகளுக்குப் படிக்கக் கொடுத்தான். சில நாட்களுக்குத் தாத்தாவின் நினைவினால் அவன் மனம் வருந்தினான். ஆனால் குழந்தைகள் அந்த வேதனையை விரைவில் மாற்றி விட்டனர். இத்தனை நாளாகக் களை யிழந்திருந்த அந்த வீடு, பழையபடி குழந்தைகளின் மகிழ்ச்சியால் பூரித்தது. சுந்தரத்தின் மனமும் ஆனந்தத்தால் பூரித்தது.

'ஆம். தாத்தா சொன்னது உண்மை. குழந்தைகளுக்கிடையில் அவர் என்றும் இருப்பார். அவருக்கு மரணமே கிடையாது' என்று சுந்தரம் நினைத்தான். அச்சமயம் தாத்தா அந்த வீட்டில், குழந்தைகளுக்கு மத்தியில் புன் சிரிப்போடு தோன்றினார். சுந்தரம் அவரைப் பார்த்துப் பரவசமடைந்தான்.

# உதவி புரியுங்கள்!

நான் ஒரு ரயில்வே ஸ்டேஷன் மாஸ்டர் குமாரன். எனக்கு இரண்டு சகோதரர்கள். மூத்த தாரத்து மக்கள். இருவரும் ரயிலில் பணி செய்தவர்கள். தற்சமயம் ஒருவர் மட்டும் வாழ்ந்து வருகிறார். எனக்கு ஒரு தங்கை உண்டு. அதையும் திருமணம் செய்து கொடுத்து விட்டோம். நான் நாலாவது படிவம் வரையில் படித்தேன். பின்னர் திருச்சியில் ஒரு கம்பெனியில் உதவி விற்பனையாளனாக இருந்தேன். பெங்களூரில் ஹிந்துஸ்தான் விமானத் தொழிற்சாலையில் வேலை செய்தேன். திண்டுக்கல் தாலுகா, வேடசந்தூர் புகையிலை வர்த்தகர்கள் சங்கத்தில் குமாஸ்தாவாக இருந்தேன். வேடசந்தூர் புகையிலை ஆராய்ச்சிப் பண்ணையில் கூலியாளாக வேலை செய்தேன். தகப்பனார் தேடி வைத்த வீடு, நிலம் எல்லாம் போதுமான வரவு இல்லாததால் வைத்தியம், கடன் இவைகளினால் காளாவட்டத்தில் போய்விட்டது. எனக்குக் கல்யாணம் ஆகி விட்டது. அவளும் தாயில்லாதவள். ஒரு ஆண் குழந்தை இருக்கிறது. மாமனார் ஒரு ஆசிரியர். அவரும் எனக்கு உதவி செய்யும் வகையில் உள்ளவர் அல்ல. ஜவுளிக் கடை, ஹோட்டல், மில் முதலிய பல இடங்களில் வேலை தேடியும் கிடைக்காமல் இருந்தது. இந்தச் சமயத்தில் என் மனைவிக்கு அதிகமான ஜுரம் வந்ததினால் மஞ்சக்குப்பம் சர்க்கார் ஆஸ்பத்திரிக்கு அழைத்துப் போனேன். அவர்கள் 'எக்ஸ்ரே' எடுத்துப் பார்த்ததில் க்ஷயம் ஆரம்பம் என்று தெரிவித்து, வீட்டுக்கு அனுப்பி விட்டார்கள். நான் எனது சகோதரரை அண்டிப் பின்னர் தஞ்சை சமீபம் உள்ள செங்கிப்பட்டி 'சானிடோரிய'த்தில் உடலைக் காண்பித்து வரச் சென்றேன். இதன் நடுவில் எனக்கும் லேசாக இருமல் இருந்து வந்ததால் என் உடலையும் பரிசோதிக்க வேண்டிக் காண்பித்தேன். அங்கு ஏழைகளுக்கு வைத்தியம் இனாம் என்று சொல்லக் கேட்டு இருக்கிறேன். அங்கு எனது நிலையை சூப்பரின்டென்டென்ட் அவர்களிடம் விளக்கமாகச் சொன்னதின்பேரில் 'எக்ஸ்ரே' எடுக்கப் புருஷன், மனைவி இருவருக்கும் ரூ. 20 ஆகும் என்றார். வசதி இல்லாததினால் ''ஸ்கிரீன்'' செய்து பார்த்து, எனக்கும் எனது மனைவிக்கும் க்ஷயம் என்றும் குறைந்தது மூன்று மாதமாகிலும் படுக்க நேரிடும் என்றும் ஒரு படுக்கைக்கு மாதம் ரூ. 60 கட்டவேண்டும் என்றும் பதிவு செய்துகொள்ள ரூ. 5 ஆகும் என்றும் பின்னர் மருந்துச் செலவு வேறு இருக்கிறது என்றும் சொன்னார்கள். இனமாக இடம் கிடைப்பது கடினம் என்றும் தெரியவந்தது. எனது சகோதரர் தன்னால் எவ்வளவு முடியுமோ அவ்வளவு உதவியும் செய்து விட்டார். இனி அவர் உதவியை நாட முடியாது. என் மனைவியிடம் இப்பொழுது தாலி ஒன்றுதான் இருக்கிறது.

எனது குழந்தை தற்சமயம் எனது மைத்துனியிடம் இருக்கிறான். உயிருடன் இருந்து கொண்டு வைத்தியமும் இல்லாமல், சாப்பாட்டுக்கும் இல்லாமல் கஷ்டப் படுகிறோம். இதைவிட உயிரை விட்டுவிடுவது மேல் அல்லவா? நானும் எனது மனைவியும் மரணத்துக்குப் பயப்படவில்லை.

செம்மேடு
18—1—54 டி. கே. ராஜகோபாலன்

[மேற்கண்ட கடிதம் எழுதியவர், பற்பல உத்தியோகங்களிலும் தொழில்களிலும் உள்ள தமது உறவினர் சுமார் முப்பது பேரின் ஜாபிதாவும் கடிதத்துடன் அனுப்பி யிருக்கிறார். கணவன், மனைவி இருவரும் க்ஷயரோக நோய்க்கு உள்ளாகியிருப்பது மிகப் பரிதாபமானது. க்ஷயரோக நோயாளிகளுக்குத் தொண்டு செய்வதற்காகவே ஏற்பட்டுள்ள ஸ்தாபனங்களைச் சேர்ந்தவர்கள் இந்தத் தம்பதிகளுக்கு உதவி செய்ய முன் வந்தால் மிக்க நலமா யிருக்கும். — ஆசிரியர்.]


தமிழகத்தின் தலைசிறந்த நாடகம்
மூன்று வருட முயற்சியால்
முத்தமிழ்த் திரைக் காவியமாக-
உருவாகியுள்ளது...
மனோகர் பிக்சர்சாரின்
மனோகரா
(தமிழ்)
டைரக்ஷன்
பிரசாத்
தயாரிப்பு
எம். சோமசுந்தரம்
கதை:
நாடகப்பேராசிரியர்
ராவ்பகதூர் சம்பந்த முதலியார்
ராதாகிருஷ்ணா பிலிம்ஸ் லிமிடெட் (ஆலப்புழை.)
(சேர்மன்: S. குமாரஸ்வாமி செட்டியார், ஜவுளி வியாபாரம், ஆலப்புழை, பாம்பே & கொல்லம்)
பிராஞ்ச: • கிரீன்வேஸ் ரோட் – சென்னை-28.
RKF
திரைக் கதை வசனம்: மு. கருணாநிதி... ஸ்டுடியோ: நெப்ட்யூன்

# சைவ சித்தாந்த விழா

சைவமும் தமிழும் தழைத்து வளர, சென்னை சைவ சித்தாந்த மகா சமாஜம் ஆற்றி வரும் தொண்டு இணையற்றது. சுமார் அரை நூற்றாண்டுகாலமாக மேற்படி சமாஜம் செய்து வரும் சேவை காரணமாக நம் தமிழகத்தில் மட்டு மன்றி, யாழ்ப்பாணம், பர்மா, மலேயா, தென் னுப்பிரிக்கா முதலிய கடல் கடந்த வெளி நாடு களிலும் கூட அதன் புகழ் பரவி நிற்கிறது.

சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் சார்பில் "சித்தாந்தம்" என்னும் மாத இதழ் ஒன்றும் தமிழ்ப் பேரறிஞர்களின் ஆராய்ச்சிக் கட்டுரை களுடன் நிறைவாக நடத்தப்பட்டு வருகிறது. அப் பத்திரிகை சமாஜ அங்கத்தினர்களுக்கு இலவசமாக வழங்கப் படுகிறது.

சைவ சித்தாந்த மகா சமாஜம் 1905-ம் ஆண்டு தொடங்கப்பட்டது. கொழும்பு ஸர் பொன்னம் பலம் இராமநாதன், நான்காம் மதுரைச் சங்கம் நிறுவிய பாண்டித்துரைத் தேவர், சிவஞான போதம், சிவஞான சித்தியார் முதலிய சைவ சித்தாந்த நூல்களை மேல் நாட்டாரும் உணரும் பொருட்டு ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து உதவிய திரு கே. எம். நல்லசாமிப் பிள்ளை, யாழ்ப் பாணம் கனகசபைப் பிள்ளை, திருப்பாதிரிப் புலியூர் ஞானியார் சுவாமிகள், மறை மலை யடிகள், பல்கலைப் புலவர் கா. சுப்பிரமணியப் பிள்ளை, மகாமகோபாத்தியாய பண்டித மணி மு. கதிரேசச் செட்டியார், திரு வி. கலியாண சுந் தரனார் முதலிய தமிழ்ப் பேரறிஞர்கள் சமாஜத் தோடு நெருங்கிய தொடர்புள்ளவர்களா யிருந்து சமாஜத்தின் வளர்ச்சிக்குப் பல வகையிலும் தொண்டாற்றி யுள்ளனர்.

சமாஜத்தின் தலைமை நிலையம் சென்னையே எனினும் இதுகாறும் பெரும்பாலும் அதன் ஆண்டு விழாக்கள் வெளியிடங்களிலேயே நடை பெற்று வந்திருக்கின்றன. இரண்டாவது தடவை யாகச் சமாஜத்தின் ஆண்டுவிழா சென்னை நகரத் திலேயே நடைபெறச் சந்தர்ப்பம் வாய்த்தது. சென்ற டிசம்பர் இறுதியில், திரு. வி. க. அவர்கள் தொடங்கித் தம் இளமை முதல் வளர்த்து வந்த ராயப்பேட்டை பால சுப்ரமணிய பக்தஜன சபை யின் "குகானந்த நிலைய"த் தில் அமைக்கப்பட்ட பெரும் பந்தலில் சமாஜத்தின் 48-ம் ஆண்டு விழா மிகவும் சிறப் பாகக் கொண்டாடப் பட்டது.

மேற்படி சைவ சித்தாந்த சமாஜத்தின் ஆதரவில் சைவர் மாநாடு, சைவ மங்கையர் மா நாடு, சைவ இளைஞர் மாநாடு என்னும் மூன்று மாநாடுகள் வழக்கம்போல் நடைபெற்றன.

மேற் கூறிய மகா நாடு களுக்கு, முறையே யாழ்ப் பாணம் வட்டுக் கோட்டை வழக்கறிஞர் உயர் திரு வே. நாகலிங்கம் பிள்ளை அவர் களும், திருமதி மரகதவல்லி சிவபூஷணம் அம்மையார் அவர்களும், சென்னை பச்சை யப்பன் கல்லூரித் தத்துவப் பேராசிரியர் திரு டாக்டர் வி. ஏ. தேவசேனபதியும் தலைமை தாங்கிச் சிறப்பித்தார்கள்.

சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் ஆண்டு விழாவுக்குத் தமிழ் கூறும் நல்லுலகத்திலிருந் தெல்லாம் சைவப் பெரு மக்களும் தமிழ் அன்பர் களும் பெருந்திரளாக விஜயம் செய்திருந்தனர்.

யாழ்ப்பாணத்திலிருந்து திரு காரான சிங்கர், அவர் மனைவியார் திருமதி ரத்தினம்மாள், திரு எஸ். ஆர். கனகநாயகம், திரு எஸ். கனகேசுவரன், திரு ஏ. எஸ். தில்லையம்பலம், அவர் மனைவியார் திருமதி தையல்நாயகி அம்மையார், டாக்டர் பிரம நாயகம் முதலிய தமிழ்ப் பேரன்பர்கள் விழாவுக்கு விஜயம் செய்திருந்தனர்.

மாநாட்டுத் தலைவர் உயர் திரு வே. நாகலிங்கம் பிள்ளை யவர்களை மீனம்பாக்கம் விமான நிலையத் துக்குச் சமாஜத்தைச் சேர்ந்த பல சைவப் பேரன்பர்கள் சென்று மாலை சூட்டி மரியாதை செலுத்தி வரவேற்று அழைத்து வந்தனர்.

முதல் நாள் விழா ராயப்பேட்டை சுந்தரேசு வரர் ஆலயத்தில் காலை ஏழரை மணிக்கு இறை வழிபாட்டுடன் துவங்கியது. தேவாரத் திரு முறைகளின் பண்ணிசை ஒலிக்க விழா அமர்க் களப்பட்டது. காலை எட்டு மணிக்கு மேல் சமா ஜத்தார் மாநாட்டுத் தலைவர் அவர்களைச் சைவப் பெரு மக்கள் பலரும் திரண்டு புடை சூழ்ந்து வர, தேவாரத் திருமுறைகளின் பண்ணிசை முழங்க வும் மேள வாத்திய நாதசுர முழக்கத்துடன் ஊர்வலமாக அழைத்துச் சென்று "குகானந்த நிலையம்" வந்து சேர்ந்தனர்.

மதுரை திருஞான சம்பந்த சுவாமிகள் ஆதீனம், ஸ்ரீல ஸ்ரீ சோமசுந்தர தேசிக பரமாசாரிய சுவா மிகள் அவர்கள் அச்சிட்டு அனுப்பிய ஆசியுரை மகா நாட்டில் படிக்கப்பட்டு விழாவுக்கு வந் திருந்த யாவருக்கும் வழங்கப்பட்டது.

பிறகு, சமாஜத் தலைவர் திரு ராவ்சாகிப் நல். முருகேச முதலியார் அவர்கள் அரியதொரு வர வேற்புரை நிகழ்த்தினார். பிறகு, சமாஜச் செய லாளர் திரு சிவகுமார் ஆண்டறிக்கை முதலியன வாசித்தார். மாநாட்டுத் தலைவர் மூவருக்கும் வரவேற்புப் பாடல்கள் படித்துக் கொடுக்கப் பட்டன. பின்னர் மாநாட்டுத் தலைவர்கள் மூவரும் தத்தம் தலைமை யுரைகளை முறையே நிகழ்த் தினர். தலைமை யுரைகளும் பிறவும் அச்சிட்டு யாவருக்கும் வழங்கப் பட்டன. மாநாட் டுக்கு நம் பாரதத்தின் உதவி ஜனாதிபதி டாக்டர் ராதா கிருஷ்ணன் அவர்களிட மிருந் தும் இன்னும் பல பிரமுகர்க ளிடமிருந்தும் வாழ்த்துச் செய் திகள் வந்து குவிந்தன.



மாநாட்டுத் தலைவர்
திரு வே. நாகலிங்கம் பிள்ளை

சைவர் மாநாட்டுத் தலைவர் திரு வே. நாகலிங்கம் பிள்ளை யவர்களின் தலைமை யுரையில் ஈழ நாட்டின் பழமை, ஈழத் துக்கும் தமிழகத்துக்கும் உள்ள தொடர்பு, சைவ சமயத்தின் சமரசப் பெருமை முதலிய விஷயங்களை யெல்லாம் கூறி அழகாக விளக்கப் பட்டது. பிற மதத்தவர் தத்தம் மதங் களில் அளவற்ற பற்றுடை யவரா யிருத்தலையும், அவற்



மாநாட்டுத் தலைவரை ஊர்வலமாக அழைத்து வருகின்றனர்.

றைப் பெருகச் செய்வதில் கண்ணும் கருத்துமா யிருப்பதையும் தலைவர் குறிப்பிட்டு, சைவ மதத் தவர்களும் அத்தகைய ஊக்கத்துடன் இருக்க வேண்டிய அவசியத்தை வற்புறுத்தினர். தலை மைப் பேருரையின் இறுதியில், சைவர்கள் இனிச் செய்ய வேண்டியவை பற்றியும் குறிப்பிடப் பட்டது. கிடைக்கக் கூடிய சிவாகமங்களைத் தேடி யெடுத்து அவற்றைத் தமிழ் மொழி பெயர்ப்போடு பதிப்பித்தல், சைவ சமய வர லாறு பற்றிய நூல்கள் வெளியிடுதல், சாதிக் கட்டுப்பாடு, தீண்டாமை முதலிய பொருந்தாக் கட்டுப்பாடுகளை நீக்கிச் சமூகச் சீர்திருத்தம் செய்தல், எச்சமயத்தவராயினும் சமயப் பூசலை மேற் கொள்ளாது அவர்களையும் மதித்து அள வளாவுதல், சமயக் கிரியை, பூசை, சடங்குகள் முதலியவற்றுக்குத் தேவையான நூல்களைத் தமி ழில் வெளியிடுதல்—முதலிய தீர்மானங்கள் ஏக மனதாக நிறைவேற்றப்பட்டன.

*　　　*　　　*

சைவ மங்கையர் மாநாட்டுக்குத் தலைமை வகித்த திருமதி மரகதவல்லி சிவபூஷணம் அம்மை யார், தம் தலைமை யுரையில், மக்கள் நல் வாழ்வுக் குச் சமயம் அவசியம் என்று வற்புறுத்திக் கூறி னார். பிறகு, சைவ சமயத்தின் தொன்மை, கோட்பாடு, சமரசப் பார்வை, முதலியவற்றை விவரித்தார். பெண்கள் முன்னேற்றம் அடைந்தா லன்றி நாடு எவ்வாற்றாலும் முன்னேறாதென்றும், இல்லறத்திலிருந்து எல்லாக் கடமைகளையும் செவ் வையாய்ச் செய்து வந்தால் வாழ்க்கையில் வெற்றி நிச்சயம் கிட்டும் என்றும், பெண்கள் மங்கையர்க் கரசியார், திலகவதியார், சாரதாமணி தேவியார் போன்ற பெண் மணிகளை முன் மாதிரியாகக் கொள்ள வேண்டும் என்றும் கூறினார்.

*　　　*　　　*

சைவ இளைஞர் மகாநாட்டுக்குத் தலைமை வகித்துச் சிறப்பித்த திரு வி. ஏ. தேவ சேனாபதி அவர்கள் இளைஞர்களுக்குச் சொன்ன நல்லுரைகள் மிகவும் பாராட்டத்தக்கதா யிருந்தன.

"இளைஞர்கள் தங்கள் இளமைப் பருவம் மாறு முன்பே நிலை பேறான இன்பந்தரவல்ல இறைவன் அருளைப் பெறும் வழியில் நிற்கவேண்டும். பொது வாக எல்லாச் சமயப் பெரியார்களும் கூறி யிருக்கும் உயர்ந்த கருத் துக்களைக் கவனித்துப் பார்க்க வேண்டும். நம் சமயப் பற்று பிற சமயங் களையும் தன்னகத்தே கொள்ளுமாறு விரிந்து இலக வேண்டும். சமய இலக்கியங்களைப் படித் தல் அவசியம். பிறர்வாழ, நாம் வாழ வேண்டும். அதற்கு உதாரணமாகப் பிறை சூடிய பெருமான் அகில உலகமும் உய்யும் பொருட்டு ஆலகால விஷத்தை உண்டு நஞ் சுண்ட கண்டனானதை மனத்துள் கொள்ள வேண்டும். இளைஞர்களே வருங் காலத்தில் நாட் டுக்கு வழி காட்டி நடத் திச் செல்லக் கூடிய வர்கள். நாட்டில் இன்பச் சூழ்நிலையை ஏற் படுத்த வேண்டிய கடமை இளைஞர்களைச் சேர்ந்தது" என்று கூறி இளைஞர் மாநாட் டுத் தலைவர் தம் தலைமை யுரையைச் சிறப் பாக முடித்தார். அத்துடன் முதல் நாள் விழா வின் காலை நிகழ்ச்சி முடிவடைந்தது.

பிற்பகல் நிகழ்ச்சி "சரவண பவனம்" என் னும் இல்லத்தில் நடைபெற்றது. அண்ணா மலைப் பல்கலைக் கழகத் தமிழ் விரிவுரையாளர் வித்துவான் திரு க. வெள்ளைவாரணனார் "திரு முறையும் சிவ நெறியும்" என்னும் பொருள் பற்றிப் பேசினார். சமாஜத்தின் முன்னாள் தலைவர் திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார் பி. ஏ., பி. எல்., சித்தாந்த சிகாமணி திரு. க. வச்சிர வேல் முதலியார் பி. ஏ., எல். டி. ஆகிய மூன்று சைவப் பெரியார்களும் சிறந்த சொற்பொழி வாற்றினார்கள். மேற்படி சொற்பொழிவுகள் ஆராய்ச்சி வளமுள்ள அருமையான சொற் பொழிவுகளாகத் திகழ்ந்தன.

சைவ சித்தாந்த மகா சமாஜ ஆண்டு விழாவில் கலந்து கொண்டு சொற்பொழிவு ஆற்றிய அறி ஞர்கள் யாவரும் கருத்துப் பொதிந்த நல்லுரை களை நிகழ்த்தினர். இடைவேளையில் வாலாஜா பாத் இந்துமத பாடசாலை மாணவர்கள் தமது உடற் பயிற்சிகள், யோகாசனங்கள், பேச்சுகள், நடிப்புகள், பாடல்கள் முதலியனவற்றால் அவை யினர் அனைவரையும் மகிழ்வூட்டினர்.

கடைசி நாள், சமாஜ உறுப்பினர் பொதுக் கூட்டம் நடைபெற்றது. மேரி ராணி கல்லூரி விரிவுரையாளர் திருமதி எம். இ. சரஸ்வதி அம்மையார் "அப்பரின் அருள்வாழ்வு" என்னும் பொருள் பற்றி அழகாகப் பேசினார். பிறகு, "கலைமகள்" ஆசிரியர் கி. வா. ஜகந்நாதன் அவர்கள் "கந்தரநுபூதி" என்னும் பொருள் பற்றிப் பெரிய சொற்பொழிவு நிகழ்த்தினார். சைவப் பெரியார் திரு ச. சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள் "ஒழுக்க நெறி அமைப்பு" குறித்துப் பேசியது மிகவும் சிறப்பா யிருந்தது. சமாஜச் செயலாளர் திரு சிவகுமார் அவர்கள் நகைச் சுவை ததும்பச் சிறந்த முறையில் யாவருக்கும் நன்றி கூறினார். தலைவர் முடிவுரைக்குப் பின் சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் 67-வது ஆண்டு விழா இறை வணக்கத்துடன் முடிவடைந்தது.

# அன்பின் அதிசயம்

அனஸ்



நடராஜன் அன்று காரியாலய வேலை காரணமாக வெளியூர் போயிருந்தான். விசாலம் காரியத்தை யெல்லாம் முடித்துக்கொண்டு, குழந்தையையும் தூங்கப் பண்ணி விட்டு ஊஞ்சலில் வந்து படுத்தாள். அவளுக்குத் தூக்கம் வரவில்லை. மனத்திலே என்ன என்னவோ சிந்தனைகள்_எல்லாம் அலைக்கழித்த வண்ண மிருந்தன.

இச்சமயம் "ஸார்—தபால்!" என்ற குரலும், தொடர்ந்து கம்பிக் கதவின் இடுக்கு வழியே ஒரு கடிதம் 'தொப்' பென்று கீழே விழுவதும் கேட்டன. ஆவலுடன் எழுந்து போய் விசாலம் கடிதத்தை எடுத்தாள்.

அது கடிதமல்ல; ஒரு கல்யாணப் பத்திரிகை. பிரித்துப் படித்தாள். அவ்வளவுதான். உடனே அவள்மனசில் பொறாமை கொழுந்துவிடத்தொடங்கியது. "ஹூம்......கோமளத்துக்குக் குருட்டு அதிர்ஷ்டம் அடித்திருக்கிறது. அவள் அல்லவா பாக்கியசாலி! ராகவன் அவளுக்குக் கிடைத்திருப்பதே போதாதா இதை நிரூபிக்க!......ம்... அருமையும் வருத்தமும் பட்டுப் பிரயோஜனம்! பிராப்தம் எப்படியோ அப்படித்தானே நடக்கும்!" என்று மனசுக்குள் முணுமுணுத்துக் கொண்டாள். பீறிட்டு எழும்பிய குறையைத் தன்னுள் தானாகவே ஒருவாறு அடக்கிச் சமாளித்துக் கொண்டாலும், அப்போதிருந்த மன நிலையில் அவளது உள்ளம் பூரணச் சமாதானம் அடைந்து விட வில்லை. குறைவு உணர்ச்சி எப்படியும் ஒரு படி மேலோங்கித்தான் நின்றது.

அந்தப் பத்திரிகையை அவள் எத்தனை தடவை படித்தாளோ தெரியாது. அனேகமாக அதில் அச்சிடப்பட் டிருந்தவை அப்படியே மனப்பாடம் கூட ஆகி யிருக்கும் அவளுக்கு.

கொஞ்சம் கொஞ்சமாக மனசிலிருந்த பொறாமை மங்கிக் கொண்டு வந்தது. அடுத்து நிராசை யுணர்ச்சி அதன் இடத்தை வகித்துக் கொள்ள ஆரம்பித்தது. "என் அழகுக்கும், கெட்டிக்காரத் தனத்துக்கும் இவரா வந்து வாய்க்க வேண்டும் எனக்கு! ஹூம்! எல்லாம் என் பூர்வ ஜன்ம பாபத்தின் பலன்" என்று ஆதங்கத்தோடு உள்ளுக்குள் புலம்பிக் கொண்டாள். இருந்தாற்போலிருந்து நாளை மாலை கணவர் இந்தக் கல்யாணத்துக்குப் போகத் தன்னையும் கட்டி இழுப்பாரே என்பது நினைவுக்கு வரவும் அவளுக்கு அழுகையே வந்துவிடும்போ லாகிவிட்டது. சிரமப்பட்டு வெகு பிரயாசையுடன் அழுகையை வெளியிடாமல் மனத்துள் ஊமை அழுகையாக அழுதாள்.

●

சிறு வயதிலிருந்தே விசாலத்துக்குத் தான் அழகி என்ற ஒரு அகம்பாவம் உண்டு. இதனாலேயே அவளைப் பலருக்குப் பிடிப்பதில்லை. பள்ளிக்கூடத்தில் படிக்கும்போது அவளுக்கு 'ராங்கிக்காரி' என்று சக மாணவிகள் பட்டம் கொடுத்திருந்தார்கள். வகுப்பில் அவள் ஒரு கட்சி; மற்ற எல்லாப் பெண்களும் ஒரு கட்சி. இப்படி யெல்லாம் அனுபவப்பட்டும் கூட அவள் தன் எண்ணத்தை ஒருநாளும் மாற்றிக் கொண்டதில்லை.

விசாலத்தின் தாயார், தன் உடன் பிறந்தவள் பிள்ளை ராகவன் தன் பெண்ணுக்காகவே வளர்ந்து வருகிறான் என்று கனவு கண்டு கொண்டிருந்தாள். தேவையான ஆகிருதியும் வசீகரிக்கத்தக்க அழகும் கொண்டிருந்த அவன்பேரில்தான் விசாலத்துக்கும் ஒரு கண். அம்மா அடிக்கடி இதைப்பற்றிச் சொல்லும்போதெல்லாம் விசாலத்தின் மனம் இன்பத்தால் நிறையும். தங்கள் எதிர்காலத் தாம்பத்திய வாழ்க்கை இப்படி யெல்லாம் இருக்கும், பார்ப்பவர்கள் எல்லோரும் ஒருவரைப் பார்த்தாற் போல 'மனமொத்த தம்பதிகள்' என்று தங்களைப் புகழ்வார்கள் என்றெல்லாம் அவள் கற்பனை செய்து பார்க்கவும் தவறவில்லை!

ஆனால் ராகவனோ இப்போதைக்குக் கல்யாணமே வேண்டாம் என்று தள்ளிப் போட்டுக் கொண்டே யிருந்தான். இதற்கு முக்கிய கார

ணம் வேறொன்றுமில்லை. விசாலத்தைத் தன் கழுத்தில் கட்டிவிட அவள் தாய் தன் தந்தையிடம் வரும்போதும் போகும்போதும் ஓதி விட்டுப் போவதை அவன் ஒவ்வொரு தடவையும் கவனித்து வந்தான். இதற்குத் தன் தந்தை எங்கேயாவது ஒப்புக்கொண்டு ஏற்பாடு செய்து விட்டால் இந்த அகம்பாவம் பிடித்தவளுடன் அல்லவா சிரஞ்சீவியாகக் கஷ்டப்பட நேர்ந்து விடும் என்று பயந்தே இப்படிச் சொல்லிவந்தான். அவனது இந்த எண்ணத்துக்கு அனுசரணையாக அவன் தாய்க்கும் விசாலம் தன் மருமகளாவது பிடிக்கவில்லை. இதனால் அவள் கணவனிடம் இல்லாததும் பொல்லாததும் சொல்லி நாளடைவில் அவர் மனத்தையே மாற்றி விட்டாள்.

விசாலத்தின் பெற்றோர் வரதட்சணை தராமல் கல்யாணம் நடத்தப் பார்ப்பதாகவும், விசாலம் அடங்கி ஒடுங்கிக் குடித்தனம் பண்ணமாட்டாள் என்றெல்லாம் மனைவி கூறவும் அவரால் அவற்றை எப்படி நம்பாமல் இருக்க முடியும்! அதோடு தன்னுடைய பிள்ளைக்கு இதில் துளிக்கூட இஷ்டமே யில்லை என்பது தெரியவும் அவர் ஜாதகம் பொருத்தமா யில்லை என்று கூறி இதற்கு ஒரு முடிவே கட்டி விட்டார்.

விசாலத்தின் தாயோ விதவை. அவளால் ஓடியாடி வரன் பார்க்க முடியுமா! தன் வீட்டுக்கு வழக்கமாக ஜாதகம் பார்க்கிற ஜோஸ்யரிடம் ஜாதகங்களை நன்கு பரிசீலித்துப் பார்க்கும்படி சொன்னாள். பார்த்த அவரும், "ஜாதகம் பொருத்தமிருக்கிறது. பரவாயில்லை" என்றார். இதைச் சொல்லி உடன் பிறந்தவனை இணங்க வைக்க எண்ணினாள் அவள். ஆனால் அவர் எது எப்படி இருந்தாலும் தம் குடும்ப ஜோஸியர் கூறுவதை அலட்சியம் செய்வதற்கில்லை என்று நறுக்குத் தெறித்தாற்போலக் கூறி விட்டார். எனினும் தம்மைத் தம் சகோதரி தவறாக நினைத்துவிடக் கூடாது என்பதற்காக அவரே சிரத்தை எடுத்துக் கொண்டு அலைந்து நடராஜனுக்கு நிச்சயம் பண்ணினார்.

விசாலம் வேறு வழியின்றி நடராஜனை ஏற்றுக் கொள்ளும்படி ஆயிற்று. தன் குடும்பம் இருக்கிற நிலையில் இதற்கு மேல் அவள் எதிர்பார்ப்பதற்கில்லை. அவன் மாநிறமாயும், அதிக அழகில்லாமலும் இருந்தானே தவிர, மற்றபடி அந்தச் சம்பந்தத்தில் ஒரு குறையும் இல்லை.

ஆரம்பத்தில் விசாலம் கணவனிடம் மிகவும் உதாசீனம் காட்டினாள். அவன் பிரியத்தோடு கோயிலுக்குப் போவோம், சினிமாவுக்குப் போவோம் என்று கூப்பிட்டால் போவதேயில்லை. இதை அவன் நாணம் என்று நினைத்து மனத்துக்குச் சமாதானம் கூறிக் கொண்டான். சில சமயம் அவன் வற்புறுத்தலின் பேரில் அவள் வந்தாலும் சிரத்தையோடு சிங்காரித்துக் கொண்டு கிளம்புவதில்லை. ஏனெனில் பார்ப்பவர்கள் தன்னையும் தன் கணவனையும் ஒப்பிட்டுப் பார்த்துப் பரிகசித்தால் என்ன பண்ணுவது என்கிற பைத்தியக்கார எண்ணம் அவளுக்கு. அதனால் அவன் அருகே நெருங்கியே நடக்கமாட்டாள், வெளியே போகும் போது! அவனிடம் பேச்சுக் கொடுப்பதுமில்லை. அப்படியே அவன் பேசினாலும் 'ம்' போடுவாளே தவிர, தவிர்க்க முடியாததா யிருந்தாலன்றிப் பதில் சொல்லமாட்டாள். எதிரே நாகரிக ஜோடி எதிர்ப்பட்டு விட்டாலோ அவள் கால்கள் அவளையு மறியாமல் அவனை விட்டு ஒதுங்கி நடைபோடும். சினிமாக் கொட்டகையில் அசதிமறதியாகக் கூட அவள் இடித்து உராய்ந்து கொண்டு உட்கார்ந்ததில்லை. இதற்கெல்லாம் காரணம் என்னவாயிருக்கும் என்று நாளடைவில் யோசிக்க ஆரம்பித்தான் நடராஜன். ஒன்றும் பிடிபடுவதாகக் காணோம்.

இம்மாதிரி இருந்த விசாலம் நாளடைவில் கொஞ்சம் மாறினாள். எனினும் முழுவதும் மாறி விட்டதாய்ச் சொல்ல முடியாது. நடு நடுவே குறைவு உணர்ச்சி என்ற புயல் அவள் மனக் கடலைக் கொந்தளிக்கச் செய்து வேதனை அளித்துக்கொண்டுதா னிருந்தது. அப்போதெல்லாம் நடராஜனின் வாஞ்சையும், வாத்ஸல்யமும், அன்பும் மட்டும் இல்லாமல் போனால் அவள் மனம் சுக்கு நூறாக உடைந்தே போயிருக்கும்.

காலக்கிரமத்தில் அவர்களுக்கு ஒரு குழந்தை பிறந்தது. அது முதல் நடராஜன் அவளை முன்னைவிட இன்னும் உயிராக நேசிக்க ஆரம்பித்தான். விசாலமும் முன்னைவிடத் திருப்தியாகவே இருந்தாள். ஆனாலும் ஒரு சில சமயங்களில் குழந்தையின் தேஜஸ் ததும்பும் முகம் ராகவனை நினைவூட்டி நடந்து போனவற்றை நினைக்க வைக்கும். அப்போ தெல்லாம் அவள் என்னவோ போல இருப்பாள். இதன் காரணம் புரியாததால் நடராஜன் சற்று நேரம் விழிப்பான்.

ஊரிலிருந்து வந்த நடராஜன் விசாலத்தைப் பார்த்ததும், அவளுக்கு உடம்புதான் சரியாயில்லையோ என்று டாக்டரை அழைத்துக் கொண்டு வந்து காட்டினான். பரிசோதித்த அவர் உடம்புக்கு ஒன்றுமில்லை என்றார். அப்படி இருக்க அவள் ஏன் என்னவோ போலிருக்கிறாள் என்பதுதான் அவனுக்கு விளங்கவில்லை.

அவன் கவலைப்படுவதையோ, அக்கறையோடு டாக்டரை அழைத்து வந்து காட்டியதையோ விசாலம் லட்சியமே செய்யவில்லை. அவள் மனநிலை அந்த ரீதியில் இருந்தது. கொஞ்ச நேரம் ஆனதும் அந்தக் கல்யாணப் பத்திரிகையை எடுத்துக் கொடுத்தாள். பத்திரிகையைப் படித்ததும் நடராஜனுக்கு மகிழ்ச்சி தாங்கவில்லை. "பார்த்தாயா, விசாலம்! இந்தக் கலியாணத்துக்கு இரண்டு வீட்டுக்காகவும் நாம் போக வேண்டும். மாப்பிள்ளை உன் மாமா பிள்ளை. பெண் என்





குமாஸ்தா (மானேஜரைப் பார்த்து):- ஸார், இப்பொழுது வியாபாரமே ரொம்ப மந்தமாகி வருகிறது. பார்த்தீர்களா?

மானேஜர் :- ஆமாம். அதற்காக என்ன செய்ய வேண்டும் என்கிறீர்?

குமாஸ்தா :- ...இல்லே, இப்பொழுது உங்களுக்கு அவகாசம் நிறைய இருக்கிறதே...என் சம்பள விஷயமாகக் கொஞ்சம் யோசித்து... உயர்த்த வேண்டும்.

---

சித்தியின் பெண். அதனால் அலுவலகத்துக்கு இரண்டு நாள் விடுமுறை எழுதிப் போட வேண்டியதுதான்!" என்றான்.

"அப்படியானால் இரண்டு கல்யாணப் பத்திரிகைகள் வர வேண்டுமே! ஒன்றுதானே வந்திருக்கிறது! இரண்டு வீட்டாரும் அனுப்ப வேண்டாமா!" என்றாள் விசாலம். அவள் பேச்சிலே உணர்ச்சியே இல்லை.

"சரிதான்! கல்யாணப் பத்திரிகையை அத்தனைக் கவனமாக நீ வாசித்திருக்கிறாய்! இரண்டு வீட்டாருமே சேர்ந்துதானே ஒரே பத்திரிகையாகப் போட்டிருக்கிறார்கள்! கவனிக்காதது உன் தவறுதானே!" என்றான் அவன் உற்சாகத்தோடு.

அவள் சிரமப்பட்டுச் சிரிப்பை வரவழைத்துக் கொண்டு "நான் சரியாகத்தான் கவனிக்கவில்லை" என்று புளுகினாள். உண்மையில் அவள் அதைக் கவனிக்காமலில்லை. ஆயினும், ஏதாவது பேசியாக வேண்டுமே!

அன்று முழுக்க நடராஜனே வீட்டுக் காரியமெல்லாம் செய்தான். எங்கே அவள் படுத்துக் கொண்டு விட்டால் கலியாணத்துக்குப் போவது நின்று விடுமோ என்று பயம் அவனுக்கு. அவன் கண்டானா அவள் உடம்பில் வியாதியா அல்லது உள்ளத்தில் வியாதியா என்று!

மறு நாள் கலியாணத்துக்குப் புறப்பட்டார்கள். எவ்வளவோ சொல்லியும் விசாலம் நன்றாக அலங்கரித்துக் கொள்ளாமல் சாதாரணமாகவே கிளம்பினாள். ரயிலில் போகும்போது, "இது என்ன விசாலம்! உனக்கு என்ன அப்படி வயதாகி விட்டது! நன்றாக அலங்கரித்துக் கொண்டு வந்தால் என்ன!" என்றான் நடராஜன் அழமாட்டாக் குறையோடு. "எல்லாம் இதுபோதும்!" என்றாள் விசாலம், ஜன்னலுக்கு வெளியே எல்லையின்றித் தெரிந்த மப்பும் மந்தாரமுமா யிருந்த வானத்தைப் பார்த்தபடி. அவள் பேச்சிலே நிராசையும் அகங்காரமும் ஒருங்கே தொனித்தன.

இதற்கு மேல் அவன் பேசத்தான் என்ன இருக்கிறது! கையிலிருந்த தமிழ் நாவலைப் படிப்பதில் அவன் மூழ்கினான்!

ரயில் செங்கற்பட்டு வந்து நின்றது. அவர்கள் உட்கார்ந்திருந்த பெட்டிக்குள் சில பிரயாணிகள் ஏறினார்கள். அவர்களுக்கு எதிரில் ஒரு இளம் ஜோடி வந்து உட்கார்ந்தது. பிளாட்பாரத்தில் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த விசாலம் திரும்பிப் பெட்டிக்குள் பார்வையை ஓட்டிவிட்டாள். எதிரே யிருந்த அந்தப் பெண்ணையே அவள் கண்கள் கூர்ந்து பார்த்தன. தன்னையே உயர்வாக நினைக்கும் அவள் மனம் கூட அந்தப் பெண்ணை அழகி என்று ஒப்புக் கொண்டது. அவள் கணவனையும் பார்த்தாள். அருவருப்புக் கொள்ளச் செய்யும் தோற்றம் கொண்டிருந்தான். அவன் மனைவியின் நிறம், அழகு இவற்றோடு அவன் நிறம் அழகு இவற்றை ஒப்பிட்டுப் பார்த்தாள். இரண்டும் முறையே வட துருவமாகவும் தென் துருவமாகவும் அவளுக்குப் பட்டன.

ரயில் புறப்பட்டது.

அந்தப் பெண் அவள் கணவனிடம் காட்டிய அன்பும் அவன் அவளிடம் வைத்திருந்த பிரியமும் அவள் மனக்கதவைத் திறந்தன. அந்த மின்சார விசிறியை அவள் பக்கம் அவன் திருப்பி வைப்பதும், உடனே அவள் எடுத்து அதை அவனுக்கு நேராக நகர்த்தி வைப்பதும், அவள் கண்களிலே கரித் தூள் விழுந்து விடப் போகிறதோ என்று அவன் ஜன்னல் கதவைச் சாத்துவதும், பனிக்காக அவன் தலையில் அவள் கம்பளித் துண்டைச் சுற்றிக் கட்டுவதும் அவளுக்கு உண்மையான தாம்பத்தியத்தின் சிறப்பை விளக்கிக் காட்டின. அவள் நெஞ்சின் சுமை அந்தக் கணமே இறங்கி அவள் கண்கள் திறந்து கொண்டன. எல்லையற்ற பிரேமையோடு தன் கணவனைப் பார்த்தாள். தூங்கிக் கொண்டிருந்த குழந்தையைத் தட்டிக் கொடுத்துக் கொண்டே அவன் படிப்பதில் ஈடுபட்டிருந்தான். என்ன தோன்றியதோ என்னவோ அவளுக்கு! சிரமப்பட்டு எச்சிலை 'மடக்'கென்று விழுங்கி விட்டு, "இதோ பாருங்கள்! இந்தப் போதும் போதாத விளக்கு வெளிச்சத்தில் படித்தது போதும். கண் கெட்டு விடும். படுத்துத் தூங்குங்கள்" என்றாள் வினயமாக. இந்த அன்பு ததும்பும் வார்த்தைகள் அவனை ஒரேயடியாக ஆச்சரியத்தில் ஆழ்த்தின. வேறு வழியின்றி மனைவியின் அன்புக் கட்டளைக்குப் பணிந்தான்!

கலியாணத்தில் விசாலம் நடந்து கொண்ட விதம் நடராஜன் மனத்தில் இன்ப அலை பாய வைத்தது. தானும் புதிதாக மணமானவன் என்ற ஒரு புத்துணர்ச்சியை அவன் மனத்தில் அவள் பேச்சும் செய்கையும் உண்டாக்கின.

மாப்பிள்ளை ராகவன் அவர்களிடம் மிகவும் பிரியுடன் நடந்து கொண்டான். கலங்குக்கு அவசரப்படுத்தவே அவன் விடை பெற்றுக் கொண்டான். அப்போது அவன் விசாலத்தை ஒரு மாதிரியாகப் பார்த்துவிட்டுப் போனதை அவள் கவனிக்காமலில்லை. "எப்படி நீ இத்தனைக் கொட்டமும் அடங்கி இப்படி மாறினாய்!" என்று கேட்பது போலிருந்தது விசாலத்துக்கு அந்தப் பார்வை. பதிலுக்கு அவளும் அப்போதே அவனைக் கேலியுடன் பார்த்தாள். அந்த அலட்சியப் பார்வை, புற அழகின் மயக்கத்தில் மன அமைதியை இழந்து தவிப்பதைவிட உள் அழகை ரசித்து நிம்மதி பெறுவதில்தான் வாழ்க்கையின் லட்சியம் இருக்கிறது என்று வலியுறுத்துவது போலிருந்தது ராகவனுக்கு!

# வயிற்றுக்கோளாறு தினம் உங்கள் சந்தோஷத்தைக் கெடுக்க விடாதீர்கள்!



உங்களுக்கு அஜீர்ணமோ, நெஞ்செரிச்சலோ அல்லது பித்தமயக்கமோ ஏதாவது ஏற்பட்டால், ஒரு கிளாஸ் ஈனோஸ் 'ப்ரூட் ஸால்ட்' சாப்பிடுங்கள்—கட்டாயம் நிவர்த்தி பெறுவீர்கள். ஈனோஸ் புளிப்பை அகற்றும் குணமுள்ளதாகையால் அது வயிற்றிலுள்ள 'கன உணர்ச்சியை' சீக்கிரம் நீக்கி, நீங்கள் சந்துஷ்டியும் சுருசுருப்பும் பெற உதவுகிறது. ஈனோஸ் பித்தப்பை மந்தத்தைத் தடுத்து, மலக்கழிவை ஒழுங்குபடுத்துகிறது. ஈனோஸ் மூலம் சந்தோஷமாக வாழுங்கள்

## ஈனோஸ்
## 'ப்ரூட் ஸால்ட்'

உங்களை தென்பாகவும் சுருசுருப்பாகவும் வைத்திருக்கிறது

புதுமை கெடாமலிருக்க புட்டிகளில் விற்கப்படுகிறது.

'ஈனோ' மற்றும் 'ப்ரூட் ஸால்ட்' என்ற பதங்கள் ரிஜிஸ்டர் செய்யப்பட்ட டிரேட் மார்க்குகள்




ENO. 3163



# நல்ல சிநேகம்!

**விஜயலக்ஷ்மி**

அன்று லட்சுமிக்கு ஒரே குதூகலம். கணவர் ஆபீஸிலிருந்து எப்பொழுது வருவார் என்று ஒவ்வொரு விநாடியும் எதிர் பார்த்து அலேந்தது அவள் மனம். எப்பொழுது வெளியில் உலாவச் செல்ல வேண்டும் என்றாலும் மறுக்காத ஒரு கணவன் இருந்தால் எந்தப் பெண்ணுக்குத் தான் பெருமையாக இருக்காது? வீட்டிலும் அதிக வேலையில்லே, எல்லாம் மாமியார் பார்த்துக் கொள்வார். அன்று அவள் மாமியார், "லட்சுமி, குழந்தை சேகரையும் வெளியில் அழைத்துக் கொண்டு போய் வா" என்று மனமாரச் சொல்லி விட்டாளல்லவா? எல்லாப் பெண்களுக்கும் மருமகளைச் செல்வமாக வைத்துக் கொள்ளும் மாமியாரும், அன்பு உருவமான கணவனும் சேர்ந்தாற் போலக் கிடைத்து விடுவார்களா?

லட்சுமி அனேகமாக எங்கே போனாலும் கணவன் ராகவனுடன் சேர்ந்துதான் போவாள். இன்று அவள் போவதாகத் தீர்மானித்த இடம் அவளுடைய அருமைத் தோழி சாந்தாவின் வீட்டுக் கல்லவா? ஆகவே, அன்று முழுவதும் அவளிடம் என்றும் இல்லாத ஒருவித பரபரப்புக் காணப்பட்டது.

சாந்தாவும் லட்சுமியும் பால்யத்தோழிகள். குழந்தைப் பிராயம் முதல் ஒன்றாக விளையாடி ஒன்றாக வாழ்ந்தவர்கள். பள்ளிக் கூடத்திலும் ஒன்றாய்ப் படித்தவர்கள். கோயில், சினிமா, நாடகம் என்று எங்கே போனாலும் இருவரும் சேர்ந்து தான் போவார்கள். இருவருடைய பெற்றோர்களும் நெருங்கிய நண்பர்களானதால், குழந்தைகள் சேர்ந்தே யிருப்பதற்கும் வளர்வதற்கும் சௌகரியமா யிருந்தது.

சாந்தாவும் லட்சுமியும் ஒரு வகுப்பிலும் தவறிப் போகாமல் ஒழுங்காகத் தேறி வந்தனர். அது குழந்தைகளின் ஒற்றுமையை இன்னும் நன்றாக வளர்த்தது.

சாந்தாவுக்கும் லட்சுமிக்கும் விவாகமாகி விட்டது. அவர்களுடைய ஒற்றுமையின் அதிர்ஷ்டம், இருவருடைய புக்ககமும் ஒரே ஊரில் அமைந்தது. ஆனால் சாந்தாவும் லட்சுமியும் விவாகமானதிலிருந்து ஒருவரை யொருவர் இன்னும் சந்தித்துக் கொள்ள வில்லே. அதற்குச் சரிப்படாமற் போனதற்குக் காரணம் சாந்தா பட்டணத்திலிருந்து வெகு தூரத்திலிருந்ததுதான்.

லட்சுமி, கணவன் வீட்டுக்கு வந்த ஒரு வருஷத்துக் கெல்லாம் சேகர் பிறந்தான். சாந்தாவுக்கும் ஏறத்தாழ அதே சமயத்தில் ஒரு பிள்ளை பிறந்தது. ஒருவரைப் பற்றி யொருவர் பிறர் மூலம் விசாரித்துத் தெரிந்து கொண்டனர். ஆனால் இதுவரையில் சந்திக்க வாய்ப்பு ஏற்படவில்லே.

லட்சுமிக்கு எப்போது சாந்தாவையும் அவள் குழந்தையையும் பார்ப்போம் என்றிருந்தது. 'எனக்குத்தான் அவளேப் போய்ப் பார்க்க அவகாசமில்லே. அவளாவது என்னே வந்து பார்க்கக் கூடாதா? ஆமாம். எனக்காவது மாமியார் இருக்கிறார். அவளுக்குப் பாவம், உதவிக்கு யாரும் இல்லே. அவள் எப்படி வருவாள்?' என்று லட்சுமி தனக்குத் தானே கேட்டுக் கொண்டாள்.

அவளுக்குச் சாந்தாவைப் போய்ப் பார்க்க வேண்டும் என்னும் ஆவல் வரவர அதிகமாயிற்று. அன்று எப்படியும் அவளேப் போய்ப் பார்த்து விடுவது என்று தீர்மானித்துக் கொண்டாள்.

சாதாரணமாக லட்சுமியின் மாமியார் லட்சுமியையும் ராகவனேயும் சேர்ந்து வெளியில் போகச் சொல்லுவாளே தவிரக் குழந்தையைத் தன்னிடம் வைத்துக் கொண்டு விடுவாள். லட்சுமிக்கு மாமியாரிடம் தன்னேயும் கணவனேயும் வெளியே போக அனுமதிப்பது பற்றி நன்றி உணர்ச்சி பொங்கும். ஆயினும் ஒவ்வொரு நாள் எதையாவது புதிதாகப் பார்க்கும் போது சேகரையும் அழைத்து வராமற் போனேமே என்று தோன்றும். மாமியார் பேரில் சற்றுக் கோபம் கூட வரும், அவளுக்கு. "எனக்குக் குழந்தையைப் பார்த்துக் கொள்ளக் கூடத் தெரியாது" என்று மாமியார் நினேக்கிறார் போலிருக்கிறது. என்றைக்கும் என்னே மட்டம் தட்டத்தான் இவருக்குத் தெரியும்! என்று பல தடவை நினேத்திருக்கிறாள். இதே காரணத்தால் தான் லட்சுமி சாந்தாவைப் பார்க்கப் போகாமல் இருந்தாள்.

குழந்தையை வீட்டில் விட்டு விட்டுப் போனால் சாந்தா என்ன நினேத்துக் கொள்ளுவாள்? "ஏன் லட்சுமி, குழந்தையை அழைத்துக் கொண்டு வராமல் நீ மட்டும் ஏன் வந்தாய்?" என்று கூடக் கேட்டுவிடுவாள். குழந்தையை அழைத்துக் கொண்டுதான்

அவள் வீட்டுக்கு' போக வேண்டும். மாமியின் மனசு குளிர்ந்து என்றைக்கு அவராகப் பார்த்து, ''குழந்தை சேகரையும் அழைத்துக் கொண்டு போயேன்!'' என்று சொல்லுகிறாரோ, அன்றைக்குத்தான் குழந்தையை அழைத்துக் கொண்டு சாந்தாவின் வீட்டுக்குப் போவது என்று லட்சுமி தன் மனசுக்குள் தீர்மானித்திருந்தாள்.

இந்தத் தீர்மானத்திலிருந்த லட்சுமியிடம் ''குழந்தையையும் தான் அழைத்துக்கொண்டு போய் விட்டு வாயேன்; நானும் கோவிலுக்குப் போய் விட்டு வருகிறேன். உனக்கு அவளைப் பார்த்துக் கொள்ளத் தெரியாதா என்ன?'' என்று மாமியார் சொல்லி விட்டது அவளுக்கு அமுதம் போல் இனித்தது. அப்போதே, சாந்தாவைப் பார்க்கப் போக வேண்டும் என்று திட்டமிட்டு விட்டாள் அவள். சாந்தா இத்தனை நாட்களில் எப்படி மாறியிருப்பாள், அவள் குழந்தை எப்படியிருக்கும், இவ்வாறான யோசனைகள் செய்து கொண்டே தன்னை நன்றாகச் சிங்காரித்துக் கொண்டாள். பெருமையோடு சேகருக்கும் ஆகாரம் தந்து விட்டு நிமிர்ந்து பார்த்தபோது ராகவன் வந்து விட்டான். அவனிடம் விஷயத்தைச் சொல்லும் போது மாமியார் அங்கு வந்தாள். ''குழந்தை ஜாக்கிரதை, ராகவா. நானும் இன்று கோவிலுக்குப் போய் விட்டு வருகிறேன்'' என்றாள்.



தம்பதிகள் இருவரும் குழந்தையுடன் பஸ் ஏறிச் சாந்தா வீட்டுக்கு வந்தனர். சாந்தா எதிர்பார்க்காமல் தன் தோழி லட்சுமியைக் கண்டதும் அவளைத் தழுவிக்கொண்டாள். இருவரும் சற்று நேரம் பொழுதே போனது தெரியாமல் பேசிக் கொண்டேயிருந்தார்கள். சிநேகிதியின் குழந்தையை ஆர்வத்தோடு கொஞ்சினாள் சாந்தா. சேகர் என்னென்னமோ பேசிப் பொரிந்து கொட்டினதைப் பார்த்துச் சாந்தாவின் கண்மணி ராஜுவும் அவனுடன் விளையாட ஆரம்பித்தான். சாந்தாவின் கணவன் ஸ்ரீநிவாசன் ராகவனிடம் அன்போடு பழகினான், குழந்தைகளும் பத்தினிகளும் அளவளாவும் பொழுது தாங்களும் பேசிப் பழகத்தானே வேண்டும்? ஆயினும் புதுச் சிநேகம்தானே? இருவருக்கும் சற்று நேரம் போனதும் அலுத்துவிட்டாற் போல் தோன்றவே ஸ்ரீநிவாசன், ''எல்லோருமாக இன்று கடற்கரைக்குப் போய் வருவோமா?'' என்றான். சேர்ந்து காப்பி, சிற்றுண்டி சாப்பிட்டு விட்டுக் கடற்கரைக்குப் போனார்கள்.

வெண் மணற் பரப்பும், வெண் நுரைகளைக் கொண்ட அலைகளையும் அங்கே கூடியிருந்த ஜனங்களையும் கண்டார்கள். இரு குழந்தைகளும், அலைகளில் கை, கால் அலம்பி விளையாடினார்கள். உயர்ந்து பரந்து வரும் கடலலைகளும் கடலைத் தொட்டுக் கொண்டே வருவது போன்ற நீல விதானம் போன்ற ஆகாயத்தையும், அந்த ஆகாயத்திலேயும் கடலைப் போலவே மேக அலைகள் உருவம் மாறி மாறி, ஒன்றோடொன்று பிணைந்து வந்ததையும் பார்த்தனர். சாந்தாவுக்கும் லட்சுமிக்கும் கேட்க வேண்டுமா? சின்னஞ் சிறு வயது முதல் இது வரை நடந்தவைகளை யெல்லாம் பேசிக் கொண்டே இருந்த அவர்களுக்கு அந்த மணற் பரப்பிலே காலத்தைத் தள்ளலாம் போலிருந்தது. வெகு நேரமாகியும் தங்கள் ஸக தர்மிணிகள் பேச்சு முடியாமற் போனாலும் — வீட்டுக்குப் போக வேண்டாமா என்பதை நினைவூட்டியது, அந்தி வானம். மெள்ள மெள்ளச் சூரியன் கடலில் விழுந்து இருட்டி வந்தது. அன்று அமாவாசையானதால் இருட்டு அதிகமாகியே வந்தது. குழந்தைகள் இருவரும் மடியில் படுத்து உறங்கி விட்டதைக் கவனித்த ராகவன், ''லட்சுமி, நாழிகையாகி விட்டதே! வீட்டுக்குப் போகலாமா? இனி அடிக்கடி சாந்தாவைப் பார்க்க வரலாம்'' என்றான்.

தூங்கின குழந்தையை இருவரும் தோள்மேலேயே சாத்திக் கொண்டார்கள். கடற்கரையில் கூட்டம் நன்றாகக் கலைந்து விட்டது.

''மின்சார விளக்கு எல்லாம் அணைந்திருக்கே, தெருவில்? அதோ, உனக்கு பஸ் கூட வந்து விட்டது. சாந்தா, உன்னை இனி எப்போ பார்க்கலாம்?...'' என்று கேட்டாள் லட்சுமி.

சாந்தா பதிலளிக்கு முன் ராகவன்—லட்சுமி ஏறின பஸ் புறப்பட்டு விட்டது. தோழிகள் பிரிந்தனர்.

''அம்மா இன்னும் வீட்டுக்கு வந்து சேரவில்லை போலிருக்கிறது. கதவு சாத்தியிருக்கே'' என்று சொல்லிக் கொண்டே லட்சுமி தன் அறையில் ''விளக்கை ஏற்றுமலேயே தோளில் சாத்தியிருந்த குழந்தையை ஏணையில் விட்டாள். விளக்கை ஏற்றிவிட்டு, தூங்கும் குழந்தையையும் எழுப்பி விடாதீர்கள்'' என்று கணவனிடமும் சொல்லி விட்டு உள்ளே காரியத்தைக் கவனிக்கச் சென்றாள் லட்சுமி.

ராகவனின் தாயார் வீட்டுக்குத் திரும்பி வந்தபோது மணி ஒன்பது ஆகிவிட்டது.

✶ ○ ✶ ○ ✶ ○ ✶ ○ ✶ ○ ✶ ○ ✶

## சில யோசனைகள்

சென்னை மாகாணத்தில் வேலையில்லாக் கஷ்டம் மிகவும் அதிகமாக இருக்கிறதென்று தோன்றுகிறது. ஏனெனில் அங்கிருந்து படித்த ஏராளமான இளைஞர்கள் வேலை தேடிக் கொண்டு வட இந்தியாவுக்கு வந்த வண்ணமாக இருக்கிறார்கள். எனவே, சிறிதும் தாமதமின்றி, சென்னை சர்க்கார் இந்த முக்கியமான பிரச்னையைச் சமாளிக்க வேண்டியது அத்தியாவசியமாகும். சென்னை மாகாண வாசிகளை இனிமேல் மற்ற மாகாணங்கள் வேலைக்கு எடுத்துக் கொள்வது சாத்தியமல்ல. ஏனென்றால் அவைகள் அந்தந்த மாகாணங்களைச் சேர்ந்தவர்களுக்கு வேலை தேடிக் கொடுக்க வேண்டியிருக்கிறது அல்லவா!

தென்னிந்தியாவில் நீண்ட தூரத்துக்குக் கடற்கரை இருக்கிறது. அங்கு கப்பல் போக்குவரத்தையும் மீன் பிடிக்கும் தொழிலையும் அபிவிருத்தி செய்யும் பட்சத்தில் ஆயிரக் கணக்கானவர்களுக்கு வேலை கிடைக்கும். இன்னும் சர்க்கரை, சிமிட்டி, மருந்து சாதனங்கள், காகிதம், விசிறி, மின்சார பல்பு, மின்சாரக் கம்பி முதலியவற்றை உற்பத்தி செய்யும் தொழிற் சாலைகளை அமைக்க வேண்டும். இந்தியாவில் பால் பற்றாக் குறையாக இருந்து வருகிறது. எனவே வருஷா வருஷம் லட்சக்கணக்கான ரூபாய் பெறுமான மூன்ன பால் பவுடரை வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்கிறோம். பால் பண்ணை மிகவும் லாபகரமான தொழில். அத்துடன் அத்தொழிலால் ஆயிரக்கணக்கானவர்களுக்கு வேலை கிடைக்கும். டில்லி, பம்பாய், கல்கத்தா முதலிய இடங்களில் பால் பண்ணைத் தொழில் வெற்றிகரமாக நடந்து வருகிறது. இத் துறையில் மேற்படி இடங்களைச் சென்னையும் பின்பற்ற முடியாதா! நாம் பால் பவுடர் இறக்குமதி செய்வதை உடனே நிறுத்திவிட வேண்டும். பால் பண்ணை நிறுவும் விஷயமாகச் சென்னை மாகாணத்தில் ஓர் ஐந்து வருஷத் திட்டம் வகுத்து, காலதாமதமின்றி அமுலுக்குக் கொண்டுவர வேண்டும். இவ்வாறு புதிய தொழில் துறைகளைக் கைக் கொள்வதன் பயனாக வேலை யில்லாக் கஷ்டம் நீங்குவதற்கு வழி ஏற்படும்.

கல்கத்தா
30—12—53

கே. வி. ரமணி

★ ○ ★ ○ ★ ○ ★ ○ ★ ○ ★ ○ ★

"அம்மா, உன் பேரன் வெளியில் எத்தனை சமர்த்தாக விளையாடினான், தெரியுமா? எங்களைப் படுத்தவே இல்லை, அம்மா. கடை வீதி, கடற்கரை எல்லாம் அவனுக்கு ரொம்பப் பிடித்துப்போய் விட்டது. அவன் கூட வந்தது எவ்வளவு சந்தோஷமாகஇருந்தது தெரியுமா? இனிமேல் அவனை என்றைக்கும் வெளியில் அழைத்துக் கொண்டு போகப் போகிறேன், என்ன, அம்மா?"

"சரி, அப்படித்தான் செய்யேன். அது சரி, இருட்டிலே குழந்தை தூங்குகிறான், பார்த்துக்கொண்டே இருக்கிறாயே, இத்தனை நாழி? வாடா, ராஜாப் பயலே, எனக்கொரு முத்தம் தந்துவிட்டு அப்புறம் தூங்கடா, ராஜா" என்று மாமியார் குழந்தையைக் கொஞ்சிக் கொண்டே ஏணை யிருக்குமிடத்துக்குப் போனாள். அங்கே போனதும் அவள் முகம் சிரிப்பினால் மலர்ந்தது!

ஆனால் அவள் குழந்தையை ஏணையிலிருந்து எடுக்கவில்லை!

"அம்மா, குழந்தையைக் கொண்டு வா" என்று சொல்லிக் கொண்டே ஏணையினருகே வந்த ராகவன் அம்மா ஏன் சிரித்தாள் என்பதைப் புரிந்து கொண்டான். அவன் முகத்திலும் புன்னகை விரிந்தது!

தூரத்தில் இருந்து இந்த வேடிக்கையைப் பார்த்துக் கொண்டிருந்த லட்சுமிக்கு ஒன்றும் புரியவில்லை. 'இப்படி இரண்டு பேரும், சேர்ந்து சிரிக்கக் குழந்தையிடம் என்னதானிருக்கோ?' என்று லட்சுமி மெதுவாகச் சொல்லிக் கொண்டே வந்து ஏணையைப் பார்த்தாள். அவ்வளவுதான். மீண்டும் தன் கணவன், மாமியார் இருவர் முகத்தையும் பார்க்கவே முடியாமல் வெட்கம் வந்து அவளைக் கவ்விக் கொண்டது!

"ஆமாம், நல்ல சினேகம் லட்சுமி! பேச்சுச் சுவாரஸ்யத்தில் குழந்தை மாறினது கூடவா ஞாபகம் இல்லை? தூங்கும்போது குழந்தை முகத்தைப் பார்க்காமலா எடுத்துக் கொண்டாய்? இல்லாவிட்டால் தெரிந்து தான் சாந்தா நினைவுக்கு இருக்கட்டும் என்று அவள் குழந்தையை நம் வீட்டுக்கு எடுத்துக் கொண்டு வந்து விட்டாயா?" என்று மாமியார் கேட்டாள்.

கேள்விகளுக்குப் பதில் சொல்ல லட்சுமிக்குத் தெரியவில்லை. அமாவாசை இருட்டில், வழியிலும் மின்சார விளக்கில்லாமல் அவசர அவசரமாகத் தாங்கள் வந்தது நினைவுக்கு வந்தது. கடற்கரையில் கடைசியாக ராஜு விளையாடினான். பின், லட்சுமியிடமே தூங்கி விட்டான். அவனைத் தான் சேகரென்று நினைத்து, அவசரத்தில் பார்க்காமலும் எடுத்து வந்து விட்டாள் லட்சுமி! மாமியார் தன்னையே பார்ப்பதை உணர்ந்த லட்சுமிக்கு, அவமானம் பிடுங்கித் தின்றது! பாவம் லட்சுமி என்ன செய்வாள்! அவளுக்குத் தெரியாமலே இது நடந்து விட்டது. அவளுக்கே இது அதிசயமாய்த்தான் இருந்தது!

"என்ன லட்சுமி," சாந்தாவும் நீயும் ரொம்ப நாள் சினேகிதமோ?" என்று மாமியார் குத்தலாகக் கேட்டாள். லட்சுமி அதற்குப் பதிலே பேசவில்லை.

"உண்மையான சினேகமானால் சினேகிதியின் குழந்தையைப் பார்த்துக் கொள்வது பெரிதாகத் தோன்றாதல்லவா? அழாதே, லட்சுமி! சேகர் பத்திரமாக இருப்பான். ஏண்டா, ராகவா! நாளைக் காலை முதல் பஸ்ஸில் அவர்கள் வீட்டுக்குப் போய் இவனை அவன் அம்மாவிடம் ஒப்புவித்து விட்டு, சேகரை அழைத்து வாடா!"

ராகவன் பதில் பேசாமல் விழுந்து விழுந்து சிரித்தான். லட்சுமிக்கும் சிரிப்பு பொங்கிக் கொண்டு வந்தது. ஆனால் அவள் தலையைக் குனிந்து கொண்டு சிரித்தாள்.



# சிறு துளி பெரு வெள்ளம்

நீர்வளமும் நிலவளமும் சேர்ந்தவிடத்தில் நல்ல விதைகளை தெளித்தால் செழிப்பான விளைச்சல் கிடைக்கிறது.

உங்கள் சொந்த நலனையும், சந்ததியின் நலனையும் உத்தேசித்து
இந்த உத்தரவாதமுள்ள செக்யூரிடிகளில்

## சேமித்து முதலீடு செய்யுங்கள்.

| | |
|---|---|
| நேஷனல் ஸேவிங்ஸ் சர்டிபிகேட்டுகள் | ரூ. 100 முதலீடு செய்தால் 12 வருடங்களில் ரூ. 150 ஆகக் கிடைக்கும். |
| பத்துவருட டிரெஷரி ஸேவிங்ஸ் டிபாசிட்டுகள் | 3½ சதவிகித வட்டி வருடம் இருமுறை வழங்கப்படும். அசல் தொகை 10 வருடங்கள் முதலீட்டிலிருக்கும். |
| போஸ்டாபீஸ் ஸேவிங்ஸ் பாங்க் டிபாசிட்டுகள் | ரூ. 10,000 வரை டிபாசிட்டுகளின் பேரில் 2 சத விகிதம் வட்டி சேரும். (கூட்டுக் கணக்குகளானால் ரூ. 20,000 வரை வட்டியுண்டு.) |

சிறு சேமிப்புகளினின்றும் பெரிய பயன்கள் :

## இந்தக் குழாய்க் கிணறுகள் அதிக நிலங்களுக்கு நீர்ப்பாசனம் ஏற்படுத்தி உணவுப் பெருக்கத்திற்கு உதவுகின்றன.

[illegible]

A.C. 513TM



# நியாயவான்

கிருஷ்ணா

மாஜி நீதிபதி சாந்தலிங்கம் பிள்ளை அவர்கள் தமது 'நிர்மல பவனம்' என்னும் அழகிய மாளிகையின் வெளி வராந்தாவில் ஒரு சாய்மான நாற்காலியில் சாய்ந்தவாறே தமது கடந்தகால வாழ்க்கையின் ஏடுகளைத் திருப்பிப் பார்த்துக் கொண்டிருந்தார்.

நீதிபதி உத்தியோகம்தான் எவ்வளவு பொறுப்பு வாய்ந்தது! ஒரு கப்பல் தலைவனைவிட, விமான ஓட்டியைவிட, ரயிலின் பாதுகாப்பாளனைவிட, ஏன், எல்லாவற்றையும் விடப் பொறுப்பு வாய்ந்ததுதான்! 'விபத்து' என்கிற பெயரால் அவற்றில் உயிர் இழக்கும் பிரயாணிகளின் மரணத்துக்குக் காரணம் அந்த விபத்து என்று ஆகிவிடுகிறது. ஆனால் நீதிபதியின் வாயிலிருந்து தெறிக்கும் ஒரு வார்த்தை......! அதற்கு உயிரை ஆக்கவும் அழிக்கவும் சக்தி உண்டு. அது நியாயத்தின் நாக்கு.

அந்த ஒரு வார்த்தையை எதிர்பார்த்து எத்தனை கைதிகள் அவரை நோக்கிப் பரிதாபகரமாக விழித்திருக்கின்றனர்! அவர்களில் எத்தனை பேர்களுக்கு அவர் மனச் சாட்சிக்கு விரோதமில்லாமல் நியாயம் வழங்கி யிருக்கிறார்! எத்தனை பேருக்குச் சட்டம் நியாயம் வழங்கி யிருக்கிறது!

யோசனை என்கிற தராசு முனையில் நின்றது அவர் மனம். அவரது மனத்திரையில் பல உருவங்கள் வந்து நிழலாடி மறைந்தன. அவற்றில் ஒன்று......அவன் பெயர் மாயாண்டித் தேவன்.

எதற்கும் அஞ்சாத தைரியப் பார்வை! மன ஆழத்தை அளவிடும் கண்கள். அச்சமின்மையையும், துணிவையும் அறிவுறுத்தும் கரிய நிறத்தோடு கூடிய முகம். அந்த முகத்துக்குக் கம்பீரத்தைக் கொடுக்கும் இளம் முறுக்கு மீசை. வஜ்ர சரீரம்! இவற்றை மனத்தில் நிறுத்திப் பார்த்தால் அதில் உருவாகும் மனிதன்தான் மாயாண்டி.

மாயாண்டியின் வழக்கு வெகு சிக்கலானது. அவனுக்குத் தண்டனை யளிக்கும் விஷயத்தில் அனுபவசாலியான சாந்தலிங்கமே திணறிப்போய் விட்டார். சாட்சியங்களும், எதிர் வாதங்களும் அவரையும் மற்ற பஞ்சாயத்தார்களையும் குழம்ப வைத்தன.

சர்க்கார் தரப்பு வக்கீல் மிகக் கெட்டிக்காரர். மாயாண்டிதான் கொன்றான் என்பதை நேரில் பார்த்தவர் போல, வாயடி யடித்து, அவன் கழுத்துக்குச் சரியாகக் கயிற்றை முடிந்துவிட்டார். சுருக்கை இழுக்க வேண்டியதுதான் பாக்கி.

பஞ்சாயத்தார்களின் முடிவுக்கும் நீதிபதியின் தீர்ப்புக்குமாக வழக்கு காத்திருந்தது.

பத்திரிகைகள் வழக்கின் விவரத்தைப் பத்தி பத்தியாகப் பிரசுரித்தன. மக்கள் தீர்ப்பை வெகு ஆவலுடன் எதிர்பார்த்தார்கள். அவர்களுக்குள் காரசாரமாக விவாதமும் நடைபெற்று வந்தது.

இப்படியாக ஊரையே குழப்பிய அந்தக் கொலை வழக்கின் முடிவு நெருங்குகையில், அதாவது தீர்ப்புக்கு இரண்டு தினங்களிருக்கையில், நடந்தது ஒரு முக்கிய சம்பவம்! அன்று நடந்த அந்த ரகசியம்! அது மட்டும் நடந்திரா விட்டால்......! சாந்தலிங்கம் பிள்ளை தமது உடலை ஒரு முறை குலுக்கி விட்டுக் கொண்டார்.

மீண்டும் நீதி மன்றக் காட்சி அவர் மனக் கண் முன் கூடியது.

ஒரே கூட்டம். ஆயினும் அமைதி நிலவி யிருந்தது. சாந்தலிங்கம் தீர்ப்பை வாசித்தார்.

பெரும்பாலான ஜனங்கள் எதிர்பார்த்திருந்ததற்கு விரோதமாக இருந்தது அவரது தீர்ப்பு.

சட்டத்தின் பல பிரிவுகளையும் அலசி ஆராய்ந்த அவர் மாயாண்டிக்குப் பதினைந்து வருஷம் கடுங்காவல் தண்டனை விதித்தார். ஏறக்குறைய ஆயுள் தண்டனை மாதிரிதான்.

சிறைக்குப் போகுமுன் மாயாண்டி அவரைப் பார்த்த பார்வை, "பேய்! நீ ஒரேயடியாக என்னைக் கொன்றிருக்கலாம்! தவறி விட்டாய்! இனி நான் அடிபட்ட நாகம்! பதினைந்து வருஷங்கள்! பிறகு நீயும் நானும் உயிருடனிருந்தால் உன்னை ஒரு கை பார்க்காமல் விடமாட்டேன்!" என்று கறுவியது போலிருந்தது.

உண்மையாகவே மாயாண்டியின் உள்ளம் அப்பொழுது கொதிக்கத்தான் செய்தது.

அந்த வழக்கில் அவன் சம்பந்தப் பட்டதே தவறு. சுயவஞ்சகர்கள்! வேண்டுமென்றே யல்லவா காட்டிக் கொடுத்து விட்டார்கள்! அவன் அந்தக் கொலையைச் செய்யவே யில்லை. அது அவனுக்குத் தெரியும். கடவுளுக்குத் தெரியும்!

இருந்தாலும் குற்றம் ருசுவான பின் அவன் மரணத்தைத்தான் விரும்பினான். அது அவனுக்குக் கிடைக்கவில்லை. உலகில் இன்னும் உயிர் வாழ்வது நிச்சயம் என்று தீர்மானமானவுடன் அவன் உள்ளம் பழிவாங்கும் உணர்ச்சியை அடைந்தது. அதுவும் யாரை! செய்யாத குற்றத்துக்குப் பதினைந்து வருடச் சிறை வாசம் அளித்த நீதிபதியை!

'டக் டக்' என்று இரும்பாணிகள் தரையில் தாளம் போட, கை விலங்குகள் 'கிலுங், கிலுங்' என்று ஜாலரா கொட்ட, புத்தாடையாகிய கட்டம் போட்ட சிறை உடுப்புடன் அவன் சிறை புகுந்தான்.

அப்புறம் வருடங்கள் இறந்தன! மாதங்கள் இறந்தன! வாரங்கள் இறந்தன! கடைசியில் நாட்களும் இறந்து விட்டன!

★

சாந்தலிங்கம், அமைதியற்ற, ஆனாலும் அமைதியோடுள்ள பாவனையில் தமது வழுக்கை மண்டையை ஒருமுறை அன்புடன் தடவி விட்டுக் கொண்டார்.

மாயாண்டி விடுதலையாகி இன்று நான்கு நாட்களுக்கு மேலேயே இருக்குமே! இன்னும் அவன் வந்து அவரைப் பார்க்கவில்லையே, ஏன்!

அவர் அப்படிச் சிந்தித்துக் கொண்டிருக்கும் பொழுது வாசலில் கார் வந்து நின்றது. அதிலிருந்து இறங்கி ஆனந்தமே வடிவாகக் கூச்சலிட்டுக் கொண்டு வந்தான் அவரது அருமை மைந்தன் சிவசங்கரன். அவன் வைத்தியக் கல்லூரிப் படிப்பைப் பூர்த்தி செய்து அதில் தேறிவிட்ட சந்தோஷத்தை அறிவிக்கவே அவ்வாறு வந்தான்.

சாந்தலிங்கத்துக்கு ஆனந்தம் தாங்க முடியவில்லை. மகனை அப்படியே அணைத்து மகிழ்ந்தார்.

சாந்தலிங்கத்துக்கு மக்கள் மூன்று பேர். மூத்தவன் சிவசங்கரன். இளையவன் ராஜசேகரன், கடைக்குட்டி கமலவேணி. அவளுக்குக் கல்யாணமாகி இரண்டு பிள்ளைக் குழந்தைகளும் பிறந்து விட்டன. இளமையிலேயே தாரமிழந்து விட்ட சாந்தலிங்கம், குழந்தைகளின் பொருட்டுத் தமது இன்ப வாழ்வைத் தியாகம் செய்து விட்டார். மறுமணத்தை விரும்பாமலேயே அவர் கடந்த இத்தனை வருஷங்களையும் ஓட்டி விட்டார். இனி என்ன குறை! இன்று அவர் ஒரு அனுபவம் மிக்க முதியவர்; மாஜி நீதிபதி; வயதுவந்த தனயர்களுக்கு அருமை அப்பா; கமலவேணியின் அன்புக் குழந்தைகளுக்கு வழுக்கைத்தலை தாத்தா!

சிவசங்கரன் சிற்றுண்டி அருந்தப் போய் விட்டான். சாந்தலிங்கம் மீண்டும் தமது சாய்மான ஆசனத்தில் அமர்ந்தவாறே சிந்தனைச் சக்கரத்தின் மறை ஒன்றை மீண்டும் முடுக்கி விட்டார். அது சுழல ஆரம்பித்தது. அதன் சுழற்சியில் லயித்திருந்த அவருக்கு வாசலில் வந்து நின்ற இன்னொரு காரின் சப்தத்தை உணர முடியவில்லை.

"நமஸ்காரம், நீதிபதி அவர்களே!" என்ற புதிய குரல் சாந்தலிங்கத்தின் சிந்தனை சக்கரத்தின் சுழற்சிக்குக் குந்தகமாகத் தடை போட்டது.



ஆஜானுபாகுவான தோற்றம்! சிறிதே நரையோடி யிருந்தாலும் கம்பீரம் குன்றாத மீசை. முகத்தில், வயதின் அனுபவக் குறிப்புப் போன்ற சில சுருக்கங்கள்! உதடுகளில் ஒரு மயக்கும் புன்னகை! கையில் கரிய பிரம்பு!

தமது மூக்குக் கண்ணாடியைச் சிறிது மேல்புறம் தூக்கி விட்டபடியே, வந்தவரைக் கவனித்தார் சாந்தலிங்கம். பிறகு "வாருங்கள்! இப்படி உட்காருங்கள்! நீங்கள் யார்!" என்று கேட்டார்.

"என்னைத் தெரிந்திருக்க நியாயமில்லை. எனக்கு ரங்கூன் பக்கம்! கண்ணாடித் தொழிற்சாலை கனக சுந்தரம் என்று ஒருவேளை நீங்கள் கேள்விப் பட்டிருக்கலாம்" என்றார் வந்தவர்.

"அப்படியா! தாங்கள் இங்கு வந்த காரியம் என்னவோ!" என்று வினயத்துடன் கேட்டார் சாந்தலிங்கம் பிள்ளை.

"வியாபாரம் அலுத்து விட்டது. எல்லாவற்றையும் வேறொருவரிடம் ஒப்புவித்து விட்டு, கையில் ரொக்கத்துடன் விச்ராந்தியாகத் தாய் நாட்டுக்குத் திரும்பி விட்டேன்."


அன்றலர்ந்த மலர்போல்
புதுமையாகவும் மோகன
காந்தியுடனும் விளங்குங்கள்...
ஹமாம்
டாய்லட் ஸோப்பு
உபயோகியுங்கள்
HAMAM
TOILET SOAP
ஹமாம் புதிய
வாசனை பொருந்தியது...
அதிக நாள் வரவும்
செய்கிறது!
தி டாடா ஆயில் மில்ஸ்
கம்பெனி லிமிடெட்
டாடா தயாரிப்பு
மெம்பர், இந்தியன் சோப் அண்டு டாய்லட்ரீஸ் மேக்கர்ஸ் அஸோஸியேஷன்

இப்படியாக ஆரம்பித்த அவர்கள் அறிமுகம் நாளடைவில் நெருக்கமுற்ற நட்பாக வளர்ந்தது.

★

அன்று பௌர்ணமி. தமது அறுபத்தி யோராவது பிறந்த நாளை மிக எளிய முறையில் கொண்டாடினார் மாஜி நீதிபதி சாந்தலிங்கம்.

கனகசுந்தரத்துக்கு அன்று அவர் வீட்டில் விருந்து. விருந்து முடிந்ததும் இருவரும் மொட்டை மாடிக்குச் சென்று தாம்பூலம் தரித்தபடியே உல்லாசமாகப் பேசலாயினர்.

"உலகிலேயே சன்னை பிடித்த தொழில் வியாபாரம்தான்!" என்றார் கனகசுந்தரம்.

"உலகில் எந்த வேலையில்தான் கஷ்டங்கள் இல்லை. என் உத்தியோகத்தையே எடுத்துக் கொள்ளுங்களேன்! நீங்கள்கூடப் பத்திரிகைகளில் பார்த்திருக்கலாம்! இடி விழுந்தான் பட்டி ஜமீன், ராவணலிங்கம் கொலை வழக்கை! ஏறக் குறையப் பதினைந்து வருஷங்களுக்கு முன் நடந்த அந்தக் கொலை வழக்கில் குற்றம் சாட்டப்பட்ட மாயாண்டித் தேவன் என்முன் கூண்டில் நின்றான்" என்று சாந்தலிங்கம் பிள்ளை ஆரம்பித்தார்.

"ஓ...! மாயாண்டியின் வழக்கா? அடேயப்பா! சரியாக ஆறு மாதம் அல்லவா ஆயிற்று! எனக்குத் தெரியுமே, வழக்கு விவரங்கள் முழுவதும். வழக்கைப் பற்றிப் பத்திரிகையில் ஒரு எழுத்துக் கூட விடாமல் படித்து ரசித்தவனாயிற்றே நான்!" என்றார் கனகசுந்தரம்.

"அப்படியா? எனக்குச் சொல்லச் சுலபமாகி விட்டது. வழக்குப் போகும் போக்கில், மேற்படி மாயாண்டிக்கு மரண தண்டனைதான் கிடைக்கும் என்று மக்கள் அனைவரும் எதிர்பார்த்திருக்தார்கள். பஞ்சாயத்தார்களும் அப்படித்தான் அபிப்பிராயப்பட்டார்கள்."

"ஆமாம்! நான் கூட மாயாண்டிக்கு மரண தண்டனைதான் கொடுப்பீர்களென்று நிச்சயம் செய்து வைத்திருந்தேன்" என்றார் கனகசுந்தரம்.

"நானும் அப்படித்தான் செய்திருப்பேன்! ஆனால் ஒரு முக்கிய சம்பவம் அதற்குள் நடந்து என் உள்ளத்தை மாற்றி விட்டது."

"அப்படியா! அது என்ன சம்பவமோ!" என்று கேட்டார் கனகசுந்தரம்.

"ஒருநாள் நான் காலை ஆகாரம் அருந்திவிட்டு நீதி மன்றத்துக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தேன். அச்சமயம் சுமார் பத்து அல்லது பன்னிரண்டு வயதுப் பையன் ஒருவன் மூச்சிரைக்க ஓடி வந்து என்னிடம் ஒரு நீளக் கடித மடிப்பைக் கொடுத்தான். அதை அவசரமாகப் பிரித்தேன். கோணல் மாணலான கையெழுத்தில் ஒரு பெண் பிள்ளை எழுதியிருந்தாள். சற்று இருங்கள். அந்தப் பழைய கடிதத்தையே எடுத்து வருகிறேன். அக்கடிதம் மட்டும் அன்று கிடைத்திருக்கா விட்டால், அநியாயமாக மாயாண்டிக்கு மரணத் தீர்ப்புக் கூறிய மகாபாதகனாகி யிருப்பேன்!" என்று கூறியவாறே நீதிபதி எழுந்து சென்று ஒரு கடிதத்தைக் கொண்டு வந்து கொடுத்தார்.

அளவிட முடியாத ஆவலுடன் படிக்கலானார் கனகசுந்தரம். படிக்கப் படிக்க அவரது முகத்தில் பல பாவங்கள் தோன்றி மறைந்தன.

"அன்பு மிகுந்த நீதிபதி ஐயாவுக்கு, இந்த ஏழை திக்கு நோக்கிக் கோடி நமஸ்காரம் செய்து எழுதுவது என்னவென்றால், இடிவிழுந்தான்பட்டி கொலை வழக்கில் குற்றவாளி என்று எல்லோரும் கூறுகிற மாயாண்டித் தேவன்தான் என் புருசன். எனக்கு இரண்டு பிள்ளையும், ஒரு பெண்ணும் இருக்கிறார்கள். இந்தக் கடிதம் கொண்டு வருவது என் பிள்ளை, பெரியவன். நான் சாகும் நிலையில் இருக்கிறேன். இன்னும் இரண்டு நாளோ, மூன்று நாளோ! அல்லது இந்த நிமிஷமேயோ!

இந்தக் கொலை வழக்கில் என் புருசன் சம்பந்தப் படவில்லை. விஷயத்தை விவரமாகச் சொல்கிறேன். பொதுவாக எனக்கு என் புருஷனின் போக்கும் பிடிக்கவில்லை. இதனாலே எங்கள் இரண்டு பேருக்கும் அடிக்கடி பிரமாதச் சண்டை ஏற்படும். எனக்கு அடியும் உதையும் விழும். இதுதான் எங்கள் குடும்ப வாழ்க்கை.

நாலைந்து நாளாக என் புருசனின் போக்கு ஒரு மாதிரியாக இருந்ததனால் என் மனசிலே சந்தேகம் தட்டியது. அதற்கேற்றாற்போல சிலபேர் அடிக்கடி வீட்டின் கொல்லைப் பக்கத்திலே வந்து என் புருசனோடு ரகசியமாக ஏதோ பேசிக் கொண்டிருந்தார்கள். சந்தேகம் காரணமாக நான் ஒன்றுகூட விடாமல் கவனித்துக் கொண்டிருந்தேன். அவர்கள் ஒரு குறிப்பிட்ட தினத்தன்று இரவு இடிவிழுந்தான்பட்டி ஜமீன்தாரைக் கொன்று அவருடைய அரண்மனையைக் கொள்ளையடிக்க முடிவு செய்தார்கள்.

எனக்கு ஒரே பதற்றம். எப்படியாவது ஒரு உயிரைக் காப்பாற்றினால் போதும் என்று நினைத்து என் புருசனுக்குச் சாயங்காலம் மூன்று மணிக்குக் கொடுத்த காப்பித் தண்ணீரில் மயக்க மருந்தை ஊற்றிக் கொடுத்து விட்டேன்.

இரவு ஒரு மணி வரையிலும் விழித்துக் கொள்ளாமல் இருந்தார் அவர். பிறகு எழுந்திருந்தார். விவரம் தெரிந்ததும் ரொம்பக் கோபித்துக் கொண்டு அங்கே போகப் புறப்பட்டார். நான் குறுக்கே விழுந்து மறித்தேன். வந்த கோபத்தில் கையிலிருந்த கத்தியால், என் தோள் மேலே குத்திக் காயப்படுத்திவிட்டு ஓடினார். நானும் பின்னாலேயே ஓடினேன், வந்தது வரட்டுமென்று அந்த நட்ட நடுநிசியிலே!

பாதி வழியிலேயே, ஒரு நாற்சந்தி மூலையிலே, திடீரென்று இரண்டுபேர் வந்து என் புருசனை அப்படியே பிடித்துக் கொண்டார்கள். அவர்களைத் தொடர்ந்து வந்த போலீஸ் ஊதுகுழல் சத்தமும் என் காதிலே விழுந்தது. அவ்வளவுதான்! அப்புறம் எனக்கு நினைவு இல்லை. ஒரு மூலையிலே மயங்கி விழுந்து விட்டேன். நான் கண்ணைத் திறந்து பார்த்தபொழுது, நன்றாக விடிந்திருந்தது. உடம்பெல்லாம் வலி. எப்படியோ முக்கி முனகிக் கொண்டு வீடு வந்து சேர்ந்தேன்.

பிரபலக் கொள்ளைக்காரனான மாயாண்டியைக் கத்தியும் கையுமாகப் பிடித்தாயிற்று என்று ஊர் எல்லாம் ஒரே பேச்சா யிருக்கும்பொழுது நான் இந்தக் கதையைச் சொன்னால் 'கட்டுக் கதை! புருசனுக்குப் பரிந்து போய் சொல்கிறாள்!' என்று தான் சொல்லுவார்கள். யாரும் நம்பமாட்டார்கள்.

அதனால் வருவது வரட்டும் என்று பொறுத்திருந்தேன். இப்பொழுது எனக்கு வியாதியும் முற்றி விட்டது. இனிமேல் நான் உயிரோடு இருக்க மாட்டேன். சாகிற சமயத்தில் விதவை என்கிற பெயரோடு சாவதைவிட என் புருசன் உயிரோடு இருக்கிறான் என்ற பெயரோடு தயவு செய்து என்னைச் சாக விடுங்கள். நான் சொன்



*சென்னை வன்னிய தேனும்பேட்டை சர்வோதய சங்கத்தார் ஜனவரி 30உ. காந்திமகான் அமரரான சர்வோதய தினத்தை ஏராளமான ஏழை மக்களுக்கு அன்னம் அளித்துக் கொண்டாடினர். மேற்படி சர்வோதய சங்கத்து நிர்வாகிகள் ஏழைகளுக்குக் கஞ்சி வார்ப்பதைப் படத்தில் காணலாம்.*

ளதை நம்புங்கள். அவ்வளவும் என் மனச் சாட்சிக்கும் தெய்வச் சாட்சிக்கும் ஒப்ப உண்மை.

இன்னொன்று. என் குழந்தைகள் அநாதைகளாகும்படி விதி எழுதி விட்டது. நீங்கள் எதாவது ஆதரவு கொடுக்க முடியுமானால் கொடுத்து எங்கேயாவது அநாதை ஆசிரமத்தில் சேர்த்து விடுங்கள். அவர்கள் ஒரு கொலை, கொள்ளைக்காரனின் சந்ததிகள் என்ற பெயரில் விளங்கலாகாது. நல்ல உத்தமக் குழந்தைகளாக வளரவேண்டும். இதுதான் என் கடைசி ஆசை. செய்வீர்களா?

இப்படிக்கு,

**தாயம்மாள்.**

மேற்படி கடிதத்தைப் படித்து முடித்ததும் கனககந்தரம் ஆழ்ந்த பெருமூச்சு விட்டார். அவர் கண்கள் கூடக் கலங்கி விட்டன. நிமிர்ந்து சாந்தலிங்கத்தைப் பார்த்த அவர், "அப்புறம் என்ன செய்தீர்கள்!" என்று கேட்டார். அவர் குரல் அசாதாரணமாக நடுங்கியது.

"செய்வது என்ன! அந்தப் பையனோடு அவன் வீட்டுக்குப் போனேன். நான் அங்கே போவதற்குள் தாயம்மாள் காரியம் முடிந்து விட்டது. தாயம்மாளின் கடைசி யாத்திரைக்கு வழி செய்துவிட்டுக் குழந்தைகளுடன் என் வீட்டுக்கு வந்து விட்டேன்.

"இன்று என் பிள்ளைகளாக இந்த ஊரில் விளங்கி வரும் சிவசங்கரன், ராஜசேகரன், கமலவேணி மூவரும் மாயாண்டியின் குழந்தைகளே. சிவசங்கரன் டாக்டருக்குப் படித்து முடித்து விட்டான். தம்பி ராஜசேகரன் இஞ்சினீயரிங் படித்துக் கொண்டிருக்கிறான். கமலாவுக்கும் கல்யாணமாகி இரண்டு குழந்தைகளும் பிறந்து விட்டன. என்ன கனககந்தரம்! சட்டம் மாயாண்டிக்கு மரண தண்டனை விதித்தது. விதி சட்டத்தின் கண்களை மறைத்தது. நடுவில் நியாயத்துக்கும், மனச்சாட்சிக்கும் உட்பட்ட நான் வழக்கில் மாயாண்டிக்குத் தீர்ப்பளித்ததைப் பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன!" என்று கேட்டார் சாந்தலிங்கம் பின்னை.

கனககந்தரம் சில நிமிஷங்களுக்கு ஒன்றுமே பேச வில்லை. பிறகு, "உலகக் கடலில் நடமாடும் வெற்றுச் சிப்பிகளிடையே கண்டெடுத்த நல் முத்து தாங்கள்!" என்று கூறினர்.

கடிகாரத்தில் மணிபதினொன்று அடித்துவிடவே நண்பர்களிருவரும் படுக்கைக்குச் சென்றனர்.

*

பொழுது விடிந்து கண் விழித்ததும் சாந்தலிங்கம் எழுந்து கனககந்தரத்தைப் பார்த்தார். அவரைக் காண வில்லை. அவர் படுக்கையில் ஒரு கடிதம் மடித்து வைக்கப் பட்டிருந்ததுடன் ஒரு பிச்சுவாவும் இருந்தது. கடிதத்தை எடுத்து ஆவலுடன் பிரித்துப் படிக்கலானார் சாந்தலிங்கம்.

அன்பு மிக்க நீதிபதி அவர்களுக்கு,

மாயாண்டி தாழ்மையுடன் எழுதிக் கொள்வது. விடுதலையானதும் உங்களைப் பழி வாங்கும் எண்ணத்துடன்தான் கள்ளுண்டிக் கனக சுந்தரமாக மாறி வந்தேன். நீங்கள் என்னை அடையாளம் கண்டு கொள்ள வில்லை. நேற்று இரவு என் கையில் குத்து வாள்கூட வைத்திருந்தேன். அதையும் இதோ வைத்திருக்கிறேன்.

தாயம்மாளின் கடிதமும் தங்கள் பண்பும் என் முன் தடித்து மறைந்திருந்த திரையை விலக்கி விட்டன. தங்கள் அன்புக் கோயிலை அங்கே கண்டு வணங்கி விட்டேன். என் குழந்தைகள்... இல்லை, உங்கள் குழந்தைகள். என்றும் உங்கள் குழந்தைகளாகவே யிருக்கட்டும். மாக படிந்த இந்தத் தகப்பனின் பெயரைக்கூட அவர்கள் நினைத்துப் பார்க்க இடம் கொடாதீர்கள். நான் போகிறேன். எங்கேயோ, எனக்கே தெரியாது.

தங்கள் நன்றியுள்ள,

**மாயாண்டி.**

கடிதத்தைப் படித்து முடித்த சாந்தலிங்கம் தமக்குள் சிரித்துக் கொண்டார். "மாயாண்டி! உன்னை நான் அடையாளம் கண்டு கொள்ள வில்லை யென்று நினைத்துக் கொண்டிருக்கிறாய்! இல்லை, இல்லை! உன்னை முதலிலேயே அடையாளம் கண்டு கொண்டு, நீ மாயாண்டிதான் என்பதைச் சந்தேகமறப் புரிந்து கொண்ட பின்னல்லவா, நான் உன் மனைவியின் கடிதத்தையும் உன் குழந்தைகள் என் குழந்தைகளாக வளர்ந்த மர்மத்தையும் வெளியிட்டேன்! அன்னியரிடம் என் அந்தரங்கங்களைச் சொல்லிவிடுவேனா!" என்று மனத்துள் நினைத்தவாறே அந்தக் கடிதத்தைச் சுக்கு நூறாகக் கிழித்தெறிந்தார் சாந்தலிங்கம்.



உறுதியான எதிர்ப்பு சக்தி
நீங்களும் பெறுக
வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்
வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் சாப்பிடுவதன் மூலம் தேக வலிமையைப்பெருக்கி, சோர்வு, ஜலதோஷம், இருமல் மற்றும் எந்த நோயும் வராமல் தடுக்கும் சக்தியை பெறுவீர்கள். நிரூபிக்கப்பட்ட குணம் பொருந்திய இந்த டானிக்கில் போஷாக்கு அளிக்கும் அம்சங்கள் ஏராளமாக இருப்பதால், உங்களுக்கு உபரியாக தேவையாயிருக்கும் உறுதியான எதிர்ப்பு சக்தியை உண்டாக்கும்.
குழந்தைகளுக்கு உடல் வலிவும் ஆரோக்கியமும் அதிகரிக்க உதவுவதிலும் பிரசித்திபெற்றுள்ள இந்த வாட்டர்பரீஸ் காம்பவுண்டு சாப்பிட ருசியானதுங்கூட. இன்றே வாங்குங்கள்.
WATERBURY'S
COMPOUND
வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்
உங்களை தெம்புடன் வைத்திருக்கும்
NAS 72 53

ஜ்வாலாப் பிரஸாதுக்கும் ராதாவுக்கும் சுதாகரின் உள்ளத்து உணர்ச்சிகள் தெரிந்திருக்க நியாயம் ஏது? அவன் அதிக யோசனைக்கு இடம் வைக்கவில்லை. ஜ்வாலாப் பிரஸாதின் யோசனையைச் சட்டென்று ஏற்றுக் கொண்டு விட்டான். அவன் அவ்வளவு சுலபமாக ஒப்புக்கொண்டதைக் காண ஜ்வாலாப் பிரஸாதுக்கும் ஆச்சரியமாயிருந்தது. ராதாவுக்கும் ஆச்சரியமாயிருந்தது. இருவருடைய இருதயத்திலும் அவன் இலேசில் ஏற்றுக் கொள்ள மாட்டான் என்ற எண்ணமே வலுப் பெற்றிருந்தது. அவர்களுடைய எண்ணத்தின் முடிவு ஒன்றாயிருந்ததே ஒழிய, அப்படி எண்ணியதற்குக் காரணம் மட்டும் வேறாக இருந்தது.

அந்த நகரத்தின் பெயரைக் கேட்டதுமே சுதாகரின் கண்களில் ஒருவித ஒளி பளிச்சிட்டது. விழித்த கண்கள் விழித்தபடியே இருந்த பொழுதிலும், அவனுடைய மனக்கண் ஆழ்ந்த யோசனையில், தூரத்துக் கற்பனையில், மங்கிய கனவில் லயித்திருந்ததாகத் தோன்றியது ராதாவுக்கு. ஆனால் அதன் காரணத்தை அடித்தலத்தில் புகுந்து சரியாக அவளால் அறிந்து கொள்ள முடியவில்லை.

சுதாகர் வெளியூருக்குப் போவது ராதாவுக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. அவன் தன்னை விட்டு விட்டுப் போக மாட்டான் என்றே அவள் எண்ணினாள். ஆனால் ஜ்வாலாப் பிரஸாத் சொன்னதும் அதிகமாக ஏதும் மறுமொழி சொல்லாமல் சுதாகர் புறப்படத் தயாராகி விட்டதைக் கண்ட ராதாவுக்கு வியப்பாகத்தானிருந்தது.

அன்றே இரவோடு இரவாகச் சுதாகர் அங்கே புறப்பட்டு வருகிறான் என்னும் செய்தியை மாதவப் பிரஸாதுக்குத் தந்தியாகக் கொடுத்தாகி விட்டது. ஒருநாள் விட்டு அடுத்த நாள் புறப்படுவதாகச் சுதாகரும் திட்டமிட்டுக் கொண்டான்.

வெகு நாட்களாக மனோரமாவுக்குக் கடிதம் எழுத வேண்டும் என்று நல்ல தருணத்தை எதிர் பார்த்துக் கொண்டிருந்த சுதாகருக்குக் கடிதம் எழுதுவதற்கு வாய்ப்பதற்கரிய நல்ல தருணம் வாய்த்து விட்டது. ராதா "போக வேண்டாம், இங்கேயே இருந்து விடலாம்" என்று எத்தனையோ சொல்லியும் அவன் அவள் வார்த்தைகளைக் காதில் வாங்கிக் கொள்ளவில்லை. தன் முடிவை மாற்றிக் கொள்வதற்கில்லை என்று சொல்லிப் பிடிவாதமாக எழுந்து வெறி பிடித்தவன் போல் தன் ஜாகைக்குப் புறப்பட்டு விட்டான்.

சுதாகர் மறுமொழி ஏதும் சொல்லாமல் அவ்வளவு சீக்கிரம் புறப்படச் சம்மதித்து விடவே, ஜ்வாலாப்பிரஸாதுக்கும் உள்ளூறச் சந்தோஷம் தலைகால் புரியவில்லை. ராதாவையும் சுதாகரையும் பிரித்துத் தொலைவில் தனித்து வைக்க அவர் செய்த சூழ்ச்சிக்கு வெகு சுலபமாக வெற்றி கிடைத்து விட்டது. சுதாகருக்கும் ராதாவுக்கும் இடையே வெகு நெருக்க முற்றுக் கொண்டிருந்த அந்தத் தொடர்பு ஜ்வாலாப் பிரஸாதுக்கு வெகு நாட்களாகவே பிடிக்கவில்லை; அவர் கண்களை வெகுவாக உறுத்திக் கொண்டிருந்தது.

ராதாவும் சுதாகரும் சேர்ந்து சமுத்திர ஸ்நானம் செய்யப் போயிருக்கிறார்கள் என்பதை டிரைவர்மூலம் கேட்டதும், அவருக்குத் தேள் கொட்டியது போலிருந்தது. அவருக்கு அடக்கமாட்டாத கடுங்கோபம்கூட வந்தது.

தொழில் தெரிந்தவர்கள் கோபித்துக் கொண்டால் கட்டி வருமா? எனவே, கோபத்தை அடக்கிக் கொண்டு அவர்கள் இருவரையும் பிரித்து விடத்தான் அவர் வழி தேடினார். அதற்கான வழியும் அவருக்கு வெகு சீக்கிரம் சிரமமின்றிச் சுலபமாகவே புலப்பட்டு விட்டது.




## 36. திரை மறைந்தது!

மாதவப் பிரஸாத் ஏற்படுத்த விரும்பிய மில் சம்பந்தமாக யோசனை சொல்வதற்கும் உதவிகள் செய்வதற்கும் வெகு நாட்களாகவே அவர்களிருவருக்குமிடையே பேச்சு வார்த்தை நடந்து கொண்டிருந்தது. ஆனால் அந்த வேலைக்குச் சுதாகரை அனுப்பும் எண்ணம் அன்றுதான், அப்பொழுதுதான், அந்தக் கணம் தான் அவருக்கு உதித்தது. மில் விஷயத்தில் சுதாகர் அவருக்குச் செய்திருந்த உதவிக்கு ஏதாவது உபகாரம் செய்ய வேண்டும் என்ற எண்ணம் அவருக்கு முன்பே இருந்தது. அதையும் எந்த விதமான சந்தேக எண்ணமும் உதிக்காமல் இருக்கும் பொருட்டு அன்றே செய்து விடுவதாகத் தீர்மானித்தார். அவர் போட்ட திட்டம் அப்படியே சிறிதும் மாறுபடாமல் குறைவு-நிறைவு ஏற்படாமல் நிறைவேறி விட்டது.

சுதாகர் தன் வீட்டுக்குச் சென்று கடிதம் எழுத உட்கார்ந்தான். ஆனால் கடிதம் எழுத

உட்கார்ந்த பின் அது பெரிய மகாபாரதமாக நீளத் தொடங்கி விட்டது. மனோரமாவை என்ன சொல்லி அழைப்பது என்ற பிரச்னையை யோசித்து முடிவு செய்வதற்குள் நள்ளிரவு கடந்து விட்டது. கடைசியில் எத்தனையோ விதமாக மனத்தைப் போட்டுக் குட்டை குழப்பிக் கொண்ட பின் அவன் கடிதம் எழுதுவதில் வெற்றி கண்டான்.

காதலர்களின் கடிதங்கள் அத்தியந்த ரகசியமானவை. அந்தக் கடிதத்தை ஒவ்வொருவரும் படித்து விட முடியாது. ஏன்? காவலாசிரியர் கூடப் படிக்க முடியாது. படிக்க முடிந்தாலும் படிக்கக் கூடாது!

ஆனால் அந்தக் .கடிதத்தில் என்ன இருக்கக் கூடும்?— இது கற்பனைக்கு அப்பாற்பட்ட விஷயம் அல்ல. அடுக்குச் சொற்கள்! அலங்காரச் சொற்கள்! அருமையான அழைப்புச் சொற்கள்! இருதயத்து அன்பைக் கொட்டியிருக்கும் உணர்ச்சி மிகுந்த சொற்கள்! மன எழுச்சியைக் கிண்டிவிடும் கிளர்ச்சி மிகுந்த சொற்கள்! இவைதான் காணக் கிடைக்கும். உலகத்தில் உள்ள காதலர்கள் அனைவருடைய கடிதங்களையும் ஒன்று கூட்டிப் பார்த்தால் பெரும்பாலும் ஒரே மாதிரியான விஷயங்கள்தான் எழுதப் பட்டிருக்கும். படிக்கப் படிக்க மனம் திகைத்து விடும். திகட்டி விடும். அலுப்பும் சலிப்பும் தோன்றி விடும்.



யாருக்கு? காதல் ரஸனையை அறியாதவர்களுக்கு! காதலில் ஊறித் திளைக்காதவர்களுக்கு! மேற்கூறிய வாறெல்லாம் அவர்கள் தான் அபிப்பிராயம் கொள்வார்கள்; சொல்லவும் சொல்லுவார்கள். ஆனால் யாருக்குக் காதல் கடிதங்கள் எழுதுகிறார்களோ, யார் எழுதுகிறார்களோ, அவர்கள் அபிப்பிராயம் அப்படி இருக்க முடியுமா? அத்தகைய அபிப்பிராயங்களைக் காதலர்களும் கொண்டு விட்டால், அப்புறம் எதற்காக அவர்கள் கடிதம் எழுதப் போகிறார்கள்? இருதயத்தை எழுத்தில் வடித்து விடுவதாக, காதற் கருத்துக்களைக் கடிதங்களில் கொட்டி விடுவதாகத் தான் காதலர்கள் கருதுகிறார்கள். அந்த எண்ணத்தில்தான்-காதல் செய்யத் தெரியாதவர்களின் கருத்துக்கு அது பிரமையாகத் தோன்றலாம்—காதலர்கள் ஹனுமார் வால் போன்ற நீண்ட கடிதங்கள் எழுதுகிறார்கள்.

சுதாகர் கடிதத்தை எழுதி முடித்துத் தபால் பெட்டியில் போடும் பொழுது மணி மூன்று அடித்து விட்டது. அப்புறம் தான் அவனுக்குச் சற்று நிம்மதி ஏற்பட்டது. நிம்மதி எங்கே ஏற்பட்டது? தபால் கட்டு ஆறு மணிக்குத்தானே எடுக்கப்படும்? அப்புறம் அது எப்பொழுது போய்ச் சேருமோ? அதையெல்லாம் கணக்கிட்டுக் கருத்தைச் செலவிடக் காதலர்களுக்குப் பொழுது எங்கே கிடைக்கிறது? எழுதிய கடிதம் அடுத்த கணமே காதலியின் கையில் இருக்க வேண்டும் என்று தானே தோன்றுகிறது? பெட்டியில் சேர்த்தவுடனேயே சுதர்கருக்கும் அந்தக் கடிதம் மனோரமாவின் கைக்குப் பறந்து சென்று விடக்கூடாதா என்றுதான் தோன்றியது. அந்தக் கற்பனையிலே அவன் கண் அயர்ந்தான். ஆனால் கருத்தைக் கவ்வி மனோரமாவிடம் இழுத்துச் சென்ற கனவு அவனுக்கு அப்பொழுதும் நிம்மதியை அளிக்கவில்லை.

மறு நாள் சுதாகர் பம்பாயிலிருந்து புறப்பட்டான். புறப்படுவதற்கு முன்னால் ராதாவைப் போய்ப் பார்த்தான். சுதாகரின் முகத்திலே மட்டற்ற மகிழ்ச்சி தாண்டவமாடிக் கொண்டிருந்ததைக் கண்ட ராதாவுக்கு அதன் காரணம் என்னவாயிருக்கலாம் என்ற ரகசியம் விளங்கவேயில்லை. ரகசியம் ரகசியமாகவே இருந்தது.

ராதா அவனைப் பார்த்து அன்புடனும் ஆர்வத்துடனும், "சீக்கிரமே திரும்பி வந்து விடுங்கள்!" என்று வற்புறுத்திச் சொன்னாள்.

"வேலை முடிந்ததும் வந்து விடுகிறேன்!" என்றான் சுதாகர்.

அதைச் சொல்லும் பொழுது அவன் உடல் மகிழ்ச்சியினால் சிலிர்த்து விட்டது. உள்ளத்தின் கிளுகிளுப்பு உடலையும் ஆட்கொண்டதில் தவறுஎன்ன? பாக்கிய தேவதை கண் திறந்து தன்னை ஆட்கொள்ளுவதை எண்ணிச் சுதாகர் ஆனந்தப் படுகிறான் என்றே முடிவு கட்டினான் ராதா. அதைத் தொடர்ந்தாற் போலவே, அவன் புறப்பட்டு வெளியூருக்குப் போகப் போகிறான், அவனை அப்புறம் அடிக்கடி நாம் பார்க்க முடியாது என்ற எண்ணமும் அவள் உள்ளத்தில் எழுந்தது. அடுத்த கணம் அவள் உள்ளத்தின் ஆழத்திலிருந்து ஒரு நீண்ட பெருமூச்சு வெளி வந்தது.

செல்வம் ரசிகத் தன்மையின் கழுத்தைத் திருகிக் கொன்று விட்டுத்தான் மறு காரியம் பார்க்குமோ என்றுதான் அப்பொழுது அவளுக்கு எண்ணத் தோன்றியது.

பணத்துக்கு அதிஷ்டான தேவதையான லக்ஷ்மி மென்மையே உருவான ஒரு பெண்தான். இருந்தாலும் இருதயத்தில் எழும் இனிய பாவங்களை எப்படிச் செல்வச் செருக்கைக் காட்டிச் செருக்கழியச் செய்து விடுகிறாள்! அடக்கி ஒடுக்கி விடுகிறாள்! மென்மைக்கும் இத்தனை வன்மையா? பண

மும் பவிஷுவும் இப்படியா மனிதனின் இருதயத்தைக் கல்லாக்க வேண்டும்?

புறப்படத் துடித்துக் கொண்டிருக்கும் சுதாகரை ஆவல் தவழும் கண்களுடன் பார்த்து அன்புசொரியும் சொற்களில், "ரொம்பப் பணத்தாசை பிடித்து அலையாதீர்கள். அழகிய முகத்தை அது கெடுத்து விடும். மென்மையே உருவான இருதயத்தை கல்லாக்கி விடும்!" என்றாள் ராதா.

மனோரமாவின் கனவில் மூழ்கி யிருந்த சுதாகர் சிறிது நேரத்துக்கு மனோரமாவை மறந்து ராதாவின் இன்ப முகத்தைப் பார்த்து மகிழ்ந்தான்; இருதயத்துப் பாங்கை எண்ணி வியந்தான். பிறகு இரு கைகளையும் கூப்பிக் கண்களில் நீர் சுரக்க விடை பெற்றுக் கொண்டு வீட்டுக்குப் புறப்பட்டான். அப்பொழுது ராதாவின் கண்களையும் நீர் திரையிட்டு மறைத்தது.

துள்ளித் திரியும் உள்ளத்துடன் சுதாகர் பம்பாயிலிருந்து புறப்பட்டான். அவன் நிலை வெகு விசித்திரமாகி விட்டது. அவனால் தூங்கவும் முடியவில்லை. வெறுமனே உட்கார்ந்திருக்கவும் முடியவில்லை. படிக்கலாம் என்று புஸ்தகத்தைப் பிரித்தால் படிக்கவும் ஓடவில்லை. யாருடனாவது பேச்சுக் கொடுத்துப் பொழுதைப் போக்கலாம் என்றால், அதற்கும் அவன் மனம் இடங்கொடுக்கவில்லை. காற்றில் அசைந்தாடும் அரச இலையைப் போல் அவனுடைய மனம் சஞ்சலப் பட்டுத் தவித்துக் கொண்டிருந்தது.

வண்டிக்கும் அன்று என்ன வல்லடி வந்து விட்டதோ, தெரியவில்லை! தினம் காற்றிலும் கன வேகமாகப் போகும் வண்டி அன்று வேண்டும் என்றே நத்தையாக ஊர்ந்து கொண்டிருந்தது. நத்தையாக என்று சொல்வது கூடத் தவறு. நத்தையைக் காட்டிலும் மெதுவாக என்று சொல்வதுதான் பொருந்தும். இதற்கு என்ன காரணமாயிருக்கலாம் என்று யோசிக்க யோசிக்கச் சுதாகருக்குக் காரணம் விளங்கவே இல்லை. சோம்பேறி டிரைவர், அலட்சியமே உருவான கார்டு இவர்களின் கையில் மாட்டிக் கொண்டு வண்டி ஏதோ சிரமப் பட்டு முன்னேறிக் கொண்டிருப்பதாகவே சுதாகருக்குத் தோன்றியது. அவனுக்கு இருந்த அவசரம் அவனுக்கல்லவா தெரியும்! இந்தப் பாழாய்ப் போன வண்டிக்கு அதெல்லாம் தெரிய ஏது நியாயம்? கடைசியில் அது எப்படியோ ஆடி விழுந்து கொண்டு விளக்கு வைக்கும் நேரத்துக்குச் சுதாகர் இறங்க வேண்டிய ஸ்டேஷனை அடைந்தது. சுதாகர் மதிமயக்கம் கொண்டவனைப் போல் அதிலிருந்து இறங்கினான்.

அவனை அழைத்துப் போவதற்காக மாதவப் பிரஸாதின் வண்டி வந்து ஸ்டேஷனில் காத்திருந்தது. அதில் ஏறி அமர்ந்து கொண்டு அவன் ஜமீன்தார் மாதவப் பிரஸாதின் வீட்டை நோக்கிப் புறப்பட்டான்.

மனோரமா இரண்டு மணி நேரமாக ஜன்னலருகிலேயே தவம் கிடந்தவாறு நின்று கொண்டிருந்தாள். எந்த எந்தக் காலத்தில் எது எது நடக்கவேண்டுமோ, அது அது அந்த அந்தக் காலத்தில் நடை பெறும் என்பதை அறிந்திருந்தும்கூட மனிதன் மனம் பொறுக்காமல் சஞ்சலமுறுகிறான். ஒன்பது மணி ரயில் ஒன்பது மணிக்கு முன்னால் வராது என்று தெரிந்திருந்தும், ஏழு மணியிலிருந்து ஏனோ கால் ஓடிய நின்று வழிமேல் விழிவைத்து எதிர்பார்க்கத் தொடங்கி விடுகிறான்.

சுதாகரிடமிருந்து கடிதம் வந்ததிலிருந்து மனோரமாவின் மனம் ஒரு நிலையில் இல்லை. அவளுடைய மனத்தை இல்லாத கலவரங்களும் சஞ்சலங்களும் ஆட்கொண்டன. ஒவ்வொரு விநாடியும் ஒவ்வொரு யுகமாகப் போவதாகவே அவளுக்குத் தோன்றியது.

சுதாகர் வரப்போகிறான் என்ற செய்தியைக் கேட்டுச் சந்தோஷப் படவேண்டியவள் அவள். ஆனால் அந்த உரிமை அவளிடமிருந்து எப்





## பரதநாட்டியக் கச்சேரி

★

பம்பாய், தாணாவில் தென்னிந்தியக் கல்விக் கழகத்தின் நிதிக்காக, பேபி வஸந்தசேனாவின் பரத நாட்டிய அபிநயக்கச்சேரி சமீபத்தில் பிரமாதமாக நடை பெற்றது. கலைச் செல்வியான குழந்தை வஸந்த சேனா, மாதுங்கா, ஸ்ரீ ராஜேசுவரி பரத நாட்டிய கலாமந்திரத்தில் பரத நாட்டியம் பயிற்சி பெற்றவள். பம்பாய்த் தமிழ்ப் பெரு மக்கள் ஏராளமாகக் கூடி யிருந்து குழந்தையின் பரத நாட்டியக் கச்சேரியை மிகவும் ரஸித்தனர்.

பொழுதோ பறிக்கப்பட்டு விட்டது. ஆயினும் அவன் அடிக்கொரு தடவை ஜன்னல் அருகே போய் நின்றான். உரிமை பறிபோனபின் அவன் அப்படிப் போய் நிற்கக் கூடாதுதான். அதற்காக உள்ளத்தை உந்தித் தள்ளும் உணர்ச்சியை அவன் எவ்வளவோ தடுத்துப் பார்த்தான். ஆனால் நம்பிக்கை அவனை ஜன்னலண்டை கொண்டு போய் நிறுத்தி விட்டுத்தான் மறு காரியம் பார்த்தது. வண்டி வரும் நேரம் ஆக ஆக அவனுக்கு உள்ளே செல்ல, ஜன்னலை விட்டு நகர மனம் வரவில்லை. கிட்டத் தட்ட ஒரு மணி நேரமாக அவனுடைய விழிகள் இமை கொட்டாமல் வழியையே நோக்கிக் கொண்டிருந்தன. விழித்த விழிகள் விழித்தபடியே இருந்தால் கண் வலிகண்டு விடாதா? ஆசையும் ஆவலும்தான் அவனை அந்த வலியை உணர விடாமல் அடித்தன.

மனோரமாவிடம் கொண்டிருந்த அன்பு உணர்ச்சி சுதாகரின் உள்ளத்தில் இரண்டு நாட்களாக நிமிஷத்துக்கு நிமிஷம் ஒரு விதப் புயலைச் சிருஷ்டித்துக் கொண்டிருந்தது; வெறியை வளர்த்துக் கொண்டிருந்தது. எத்தனை முயன்றும் அவனால் தன் மன எழுச்சியை அடக்க முடியவில்லை; அணைபோட்டுத் தடுத்து நிறுத்த முடியவில்லை.

ஸ்டேஷனில் இறங்கியதும் மனோரமாவைப் பார்க்கலாம் என்ற அசம்பாவிதமான ஆசைக் கோட்டையைச் சுதாகர் மனத்தில் கட்டிக் கொண்டிருந்தான். அவனுடைய மனத்திரையிலே அந்த ஆசைக் கோட்டை வானளாவ உயர்ந்திருந்தது. சுதாகர் அதே இன்ப நினைவில் லயித்த வண்ணம் தனக்கென்று வந்திருந்த வண்டியில் ஏறி மாதவப் பிரஸாதின் வீட்டு வாசலில் வந்திறங்கினான். இறங்கியதும் எதேச்சையாக அவன் பார்வை ஜன்னலண்டை சென்றது. ஜன்னல் மறைவில் மனோரமாவின் மதி முகத்தைக் கண்டதும் அவனுக்கு ஒரே வியப்பாகப்போய் விட்டது. மனோரமாவை அந்த இடத்தில் பார்க்கப் போகிறோம் என்று அவன் எண்ணவேயில்லை. 'மனோரமா இங்கே வர ஏதும் நியாயம் இல்லையே!' என்ற எண்ணம் ஒரு கணம் அவன் உள்ளத்தில் எழுந்தது. எனவே, 'மனோரமாவைப் பார்க்க வேண்டும் என்று ஆசைக் கனவு கொண்டிருக்கும் நாம் வேறு யாரோ ஒரு பெண்ணைப் பார்த்துத் தவறுதலாக மனோரமா என்று எண்ணிவிட்டோம். அந்தப் பெண் மனோரமாவாக இருக்க முடியாது. நமது வீண் பிரமையாகத்தான் இருக்க வேண்டும்' என்ற முடிவுக்கு வந்தான். அவன் மனம் கேட்கவில்லை. ஏன் அவள் மனோரமாவாக இருக்கக் கூடாது என்றே வாதாடியது.

கடைசியில் அவள் மனோரமாவாக இருக்க முடியாது என்று எண்ணிய எண்ணம் பொய்த்து விட்டது. ஜன்னல் அருகில் நின்று கொண்டிருந்த பெண் மனோரமா தான் என்ற நம்பிக்கை அவன் உள்ளத்தில் இடம் பெற்று விட்டது. அவளைப் பார்த்து ஒரு வருஷம் ஒன்றே கால் வருஷம் ஆகி விட்ட பொழுதிலும் அவன் அவளை மறக்கவில்லை. அவளுடைய நினைவு முகம் அவனது மனத்திரையிலேயே நிழலாட்டம் ஆடிக் கொண்டிருந்தது. அன்று அவன் பார்த்த மனோரமாவுக்கும் இன்று பார்க்கும் மனோரமாவுக்கும் ஒரே ஒரு மாறுதல்தான் தென்பட்டது. அன்று பார்த்த மனோரமாவைக் காட்டிலும் இன்று பார்க்கும் மனோரமா அழகு பெற்று மெருகுற்றுப் பூரணப் பொலிவுடன் சௌந்தரியமே உருவாக விளங்கினாள்.

அதிருக்கட்டும். மனோரமா இங்கே எங்கே வந்தாள்?—அவனுடைய மனத்தில் அகாரணமாக ஒரு பீதி நிலவியது. ராமலாலுக்கும் மாதவப் பிரஸாதுக்கும் இடையே உள்ள நெருங்கிய நட்பை அவன் அறியாதவன் அல்ல. அப்படியிருக்கும் பொழுது அவன் பீதியுறுவானேன்? அவள் ஒரு வேளை தன் தாயாருடன் இங்கே வந்திருக்கலாம் அல்லவா? ஆமாம், அப்படித்தான் இருக்க வேண்டும். சுதாகரின் கடிதத்தைப் படித்த பின் அவனைச் சந்திக்கும் நோக்கத்துடனும் பார்க்க வேண்டும் என்ற ஆசையுடனும் தான் அவள் வந்திருக்க வேண்டும்.

இப்படி எண்ணிய அவனை, மனோரமாவைப் பார்த்துப் பேசவேண்டும் என்ற ஆசை உந்தித் தள்ளியது. என்ன பேசுவது, எப்படிப் பேசுவது என்பதுதான் அவனுக்கு விளங்கவில்லை. அவன் மெய்மறந்த கற்பனையில் லயித்தவனாய் மனோரமாவை நிமிர்ந்து ஏறிட்டுப் பார்த்தான். மனோரமாவும் சுதாகரைப் பார்த்தாள். இருவருடைய கண்களும் ஏககாலத்தில் ஒன்று கலந்தன. கண்கள் ஒன்று கலந்ததுதான் தாமதம்;

# நறுமணம் விரும்புகிறவர்களுக்கு...

மைசூர் சந்தன சோப்பினால் ஸ்னானம் செய்வதே ஓர் அலாதியான இன்ப அனுபவம். அதன் மிருதுவான நுரை சருமத் துவாரங்களிலும் ஊடேறி சுத்தம் செய்து, சருமத்தை மழமழப்பாகவும் பளபளப்பாகவும் பட்டுப்போல் செய்கிறது. அதன் இன்பமூட்டும் ரம்மியமான மணம் உங்கள் தேக முழுவதும் பல மணி நேரம் நீடித்துப் பரிமளிக்கும்.




## மைசூர்
## சந்தன
## சோப்

**கவர்ன்மெண்ட் சோப் பேக்டரி, பெங்களூர்**

இந்திய சோப், வாசனைப் பொருள்கள் உற்பத்தியாளர் சங்கத்தின் அங்கத்தினர்

---

# 'பிராங்கைடிஸினால் என் சுவாசப்பைகள் நெருப்பைப்போல் தகித்தன'



## ஆனால் **பெப்ஸ்**

## அடைப்பைப்போக்கி, எரிச்சலையும் உடனே தணித்தது.




பெப்ஸ் தொண்டை மற்றும் மார்புவலி நிவாரண மாத்திரைகளில் சமன மூட்டி குணப்படுத்தும் ரசங்கள் அடங்கியுள்ளன. பெப்ஸை கரைக்கும் போதே, இந்த ரசங்கள் ஆவியாக மாறி, உங்கள் சுவாசத்துடன் தொண்டை, சுவாசக் குழாய் மூலமாக சுவாசப்பைக்குச் செல்லும். ஆகவே கோளாறின் ஆரம்பஸ்தானத்திற்கே சென்று வேலை செய்கின்றன. அதனால்தான் பெப்ஸ் கைகண்ட ஒளஷதமாயும், உலக பிரசித்தி பெற்றும் விளங்குகிறது. பெப்ஸ் இருமலை நிறுத்தி தொண்டை ரணத்தை சமனமாக்கி, கபத்தை உடைத்து, அடைப்பை நீக்குவதுடன் இன்புளுயன்ஸா மற்றும் பிராங்கைடிஸ் சிகிச்சையில் இன்றியமையாததாயுமுள்ளது.

பெப்ஸ் தொண்டை, மார்பு வலி நிவாரண மாத்திரைகள்
எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்

**PEPS**

FPY-38-TAM

மதராஸிற்கு ஸோல் ஏஜெண்டுகள்: தாதா & கம்பெனி, பார்க் டவுன்

இருவருடைய இருதயத்திலும் மின்சாரம் பாய்ந்தது; மின்னல் ஒளி பளிச்சிட்டது.

மனோரமா ஜன்னலிலிருந்து நகர்ந்து மறைவில் மறைந்து கொண்டாள். அப்புறம்தான் சுதாகர் சுய உணர்வு பெற்றான். இரண்டொரு நிமிஷங்களில் நிகழ்ந்து விட்ட மகத்துவம் வாய்ந்த அந்த நிகழ்ச்சியின் மகத்துவத்தைப் பிறர் புரிந்து கொள்ளவில்லை. இருவருக்கும் இடையே நடைபெற்ற கடைக் கண் வீச்சின் குறிப்பை யாருமே குறிப்பாகக் கவனிக்கவில்லை.

வேலையாள் சுதாகரை அழைத்துக் கொண்டு உள்ளே வந்தான். அந்த வீட்டில் உள்ள வேலைக்காரர்களில் பலர் சுதாகரை முன்பே அறிந்திருந்தார்கள். அவன்தான் அந்த ஊரில் அநேக ஆண்டுகள் இருந்து பழக்கப்பட்டவனாயிற்றே! பார்த்துப் பழகியிருக்க மாட்டார்களா? சுதாகரைக் கண்டதும் அவர்கள் அன்புடன் அவனைக் குசலப் பிரச்னம் விசாரித்தனர்.




மனோரமாவின் நினைவில் மனத்தைப் பறிகொடுத்து விட்ட சுதாகருக்கு ஜமீன்தாரைச் சந்திக்கவில்லையே என்ற நினைவு வரச் சிறிது நேரம் பிடித்தது. 'அடாடா! அவருடைய க்ஷேம சமாசாரங்களைக் கூட நாம் விசாரிக்கவில்லையே! என்ன அசட்டுத்தனம் செய்து விட்டோம்?' என்று மருண்டான். உடனே தன்னைக் கவனித்துக் கொள்வதற்காக நியமிக்கப் பட்டிருந்த பணியாளைப் பார்த்து, "போய் மாதவப் பிரஸாதினிடம் நான் வந்திருக்கும் செய்தியைத் தெரிவித்து விட்டு வா!" என்றான்.

"தாங்கள் வரப்போவது எசமானுக்குத் தெரியும்!" என்றான் வேலைக்காரன்.

"அப்படியானால் அவரிடம் என்னை அழைத்துப் போ!" என்றான் சுதாகர்.

"எசமான் வீட்டில் இல்லை!"

"வீட்டில் இல்லையா? எங்கே போயிருக்கிறார்?" என்று கேட்டான் சுதாகர்.

"ஏதோ முக்கியமான அலுவலாகக் கிராமத்துக்குப் போயிருக்கிறார்!"

"எப்பொழுது திரும்பி வருவார்?"

"நாளை அல்லது நாளை நீக்கி வந்து விடுவார்!"

"அப்படியானால் அது வரை நான் சும்மாத்தான் இங்கே தங்கியிருக்க வேண்டுமா?"

"தங்கியிருந்தால் என்னங்க? எசமானியம்மாள் வீட்டில்தான் இருக்கிறார்கள். இங்கே தங்குவதனால் உங்களுக்கு எந்த விதமான சிரமமும் ஏற்படாது!" என்றான் வேலைக்காரன்.

வேலைக்காரனின் பதிலைக் கேட்டதும் சுதாகருக்குப் பழைய சம்பவங்கள் நினைவுவந்தன.

"மாதவப் பிரஸாத் மறு மணம் செய்து கொண்டு விட்டாரா, என்ன? எப்பொழுது செய்து கொண்டார்? நான் இங்கே இருக்கும் பொழுது தானே அவருடைய மனைவி இறந்து விட்டார்கள்!" என்று கேட்டான்.

"ஆமாம். அப்புறம் நடந்த விஷயம் உங்களுக்குத் தெரிய நியாயம் இல்லைதான். இந்த ஊரில் ராமலால் என்று ஒருவர் இருக்கிறார், பாருங்கள்......!"

வேலைக்காரன் வார்த்தையை முடிக்கவில்லை. சுதாகருக்குத் தன் மார்பைத் துளைத்துக் கொண்டு துப்பாக்கி ரவை சென்றது போலிருந்தது. நாம் இப்படியே மூர்ச்சையாகி விடுவோமோ என்று கூட அவன் எண்ணமிட்டான்.

"......அவருடைய பெண்ணை நம் ஐயாவுக்குக் கல்யாணம் ஆகியிருக்கிறது!" என்று வேலைக்காரன் வாக்கியத்தை முடித்தான்.

சுதாகரின் கண்களுக் கெதிரே கும்மிருட்டு நிலவியது. அவன் சட்டென்று தலையணைக் கடியே தன் முகத்தைக் கவிழ்த்துக் கொண்டான். அவனுடைய இரு கண்களும் தாமாகவே மூடிக் கொண்டன. (தொடரும்)

# அன்றாடம் 2 நிமிஷங்கள் செலவழித்தால் போதும் . . . . நீங்கள் பூரண எழிலுடன் திகழலாம்



பிரதி இரவிலும் பாண்ட்ஸ் கோல்ட் க்ரீமை உங்கள் சருமத்தில் தடவி நன்கு தேயுங்கள்—ஒரே ஒரு நிமிஷம் தான் ஆகும். அதிலுள்ள எண்ணெய்கள் சருமத்தில் ஊடுருவிச்சென்று, மயிர்க் கால்களில் படிந்திருக்கும் சிறு சிறு தூசியையும் அழுக்கையும் வெளியேற்றி விடுகிறது. சருமத்தை மெதுவாகத் துடைத்து, அது எவ்வளவு பரிசுத்தமாக விளங்குகிறதென்பதைப் பாருங்கள்.

இவ்வற்புத க்ரீமை இன்னும் கொஞ்சம் எடுத்து முகத்திலும் கழுத்திலும் பூசிக்கொள்ளுங்கள். இரவு முழுவதும் அது அப்படியே இருக்கட்டும். காலையில் எழுந்தவுடன் உங்கள் மேனி மிக துல்லியமாயும் பூரண பொலிவுடனும் விளங்குவதைக் கண்டு அதிசயிப்பீர்கள்.



பிரதிதினம் காலையிலும் ஒரு நிமிஷம் உங்கள் முகத்தில் பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமை மெதுவாகத் தடவுங்கள். அது பூரணமாக மறைந்துவிடும். சருமம் பட்டுப்போன்று மழமழப்பாகவும் அற்புதச் சோபையுடனும் விளங்கும்.

கண்ணுக்குப் புலப்படாத வகையில் முகத்தில் மறைந்துள்ள இந்த பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் திரைப்படலம் பகல் முழுவதிலும் உங்கள் எழிலைப் பாதுகாக்கும். உங்கள் மிருதுவான சருமத்திற்கு இந்த பாதுகாப்பு அவசியம் — முக்கியமாக வரட்சைக் காற்றிலும் சூரிய கிரணங்களின் வெப்பத்தாலும் சருமம் துவண்டு போகாமல் காப்பாற்றி வர அத்யாவசியம்.

உங்கள் சருமத்திற்கு இவ்விரட்டைப் பராமரிப்பு ஒவ்வொரு நாளும் தேவை. பாண்ட்ஸ் க்ரீம்கள் இரண்டையும் அன்றாடம் தவறாமல் உபயோகித்து உங்கள் அழகிற்கு அழகு கூட்டுங்கள்!




உலகில் எங்குமே பெண்மணிகள் தங்கள் எழிலை புதுமை குன்றாமல் பாதுகாக்க பாண்ட்ஸ் க்ரீம்கள் இரண்டையுமே உபயோகிக்கின்றனர். அவர்கள் இயற்கை அழகின் இரகசியம் அதுதான்.

முக சிங்காரிப்புக்குந்தான், பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் தடவிக்கொண்டால் அதன்மேல் பௌடர் பூசுவது மிக எளிது அழகாயுமிருக்கும், ஞாபகமிருக்கட்டும்.

**பாண்ட்ஸ்**

# வாழத் தெரியவில்லை!

எம்.ஜி



நீதிபதி தீர்ப்புக் கூறினர்.

"ஐம்பது ரூபாய் அபராதம், தவறினல் ஒரு மாதம் கடுங்காவல் தண்டனை!"

செல்லையன் விழித்தான். அவன் விழிக்கவேண்டியவன்தான். அவன் கையிலோ தம்பிடிக் காசு கூடக் கிடையாது. உற்றார் உறவினர்களையும் அவன் வெகு நாட்களுக்கு முன்பே பகைத்துக் கொண்டு விட்டான். சொந்த மனைவி, அவனை விட்டுப் பிரிந்து ஆம் மூன்று ஆண்டுகளுக்கு மேலாகி விட்டன. அவனுக்கு ஒருவருமில்லை.

செல்லையன் சிறை புக வேண்டியவனே! அவனுக்கு அழுகை வந்து விடும்போலிருந்தது. வாய் விட்டுக் கதறத் தோன்றியது. ஆனல் அழுதாலும், கதறினலும் அவனை யாரும் வெளியில் அனுப்பி விடப் போவதில்லை.

ஆனல் செல்லையன் குற்றவாளி தானு!

அன்றொருநாள் கண்ணிமைக்கும் பொழுதுக்குள் நிகழ்ந்துவிட்ட அந்த வேடிக்கையை எண்ணிப் பார்த்தால், வேதனையை மறந்து அவனுக்குச் சிரிக்கத்தான் தோன்றிற்று.

★

இருள் சூழ்ந்த நேரம்; ஏழுமணி யிருக்கும். சாலைவழியே செல்லையனும், அவன் 'நண்பன்' சோலையனும் நடந்து வந்து கொண்டிருந்தார்கள். சோலையன் கையில் ஒரு பை; அதனுள்ளே என்ன இருந்ததோ செல்லையனுக்குத் தெரியாது.

"அண்ணே! இதைப் பிடி! வேட்டி கட்டிக் கொண்டு வாங்கிக் கொள்கிறேன்" என்ருன். செல்லையன் சோலையனிடமிருந்து பையைப் பெற்றுக் கொண்டான். சோலையன் பின் தங்கித் தாமதித்து வருவதுபோல் தோன்றியது. திரும்பிப் பார்த்தான்; சோலையனைக் காணும்; அவன் எங்கோ இருளில் மறைந்திருக்க வேண்டும். ஆனல் அதே சமயம் அவனுக்கு எதிரே இருவர் வந்தனர். "யார் அது! கையில் என்ன!" என்று அதட்டினர்கள். செல்லையனுக்கு அச்சம்கண்டது.

"சோலையன் எங்கே! ஏன் ஆளைக் காணும்! அவன் கொடுத்த பையில் என்ன இருக்கிறதோ! திருட்டுச் சொத்தாக இருக்குமா!......சேச்சே! சோலையன் அப்படிப்பட்ட ஆள் இல்லையே!"

செல்லையனின் யோசனையைத் தடைப்படுத்த அவ்விருவருமே அவன் எதிரில் வந்து நின்று கொண்டு விட்டனர். அவ்விருவருமே போலீஸ்காரர்கள்; மதுவிலக்கு சரியாக அமுலாகிறதா என்பதைக் கண் காணிக்க அரசாங்கத்தால் நியமிக்கப்பட்டவர்கள்.

"பையில் என்ன இருக்கிறது காட்டு" என்று சோதனையில் இறங்கினர். "இதோ சாராயப் புட்டி! கள்ளச் சாராயம்! எப்பொழுதுமே ஏமாற்ற முடியாது, தம்பி! ஒருநாள் வெளிவந்து விடும்" என்று ஒருவர் மாற்றி ஒருவர் இதையே திரும்பத் திரும்பக் கூறினர்.

செல்லையனுக்கு விஷயம் விளங்கிற்று.

"சோலையன், நல்ல நண்பன்! இப்படிக் கூடச் செய்வானு! அடுத்துக் கெடுக்கும் காரியமா இது! இந்த வேலைகூட அவனுக்கு உண்டு என்பது இப்போதுதான் தெரிகிறது!"

அவன் திகைப்பு அடங்கவில்லை. அதற்குள், "நட, தம்பி நட, ஸ்டேஷனுக்கு!" என்ற அதிகாரக் குரல், கையில் பிடித்த பையுடன் அவர்கள் கூப்பிட்ட இடத்துக்கு அவனைப் போகும்படி செய்து விட்டது.

செல்லையன் மண்ணில் பிறந்து வளர்ந்து, முப்பத்துமூன்று ஆண்டுகளைக் கடத்தி யிருந்தான். அவனிடமும் சில 'குணங்கள்' பதிந்து போயிருந்தன. ஆனல் மது, சூது இவைகளை அவன் எப்படி என்றே அறிய மாட்டான்.

செல்லையன் நடந்தான்; அவர்கள் கூடவே நடந்தான். அதன் பிறகு எல்லாம் சம்பிரதாயத்தை யொட்டி நடந்தன. வழக்குப் பதிவு; ஜாமீன் கொடுக்க ஆளில்லை; 'லாக்-அப்'; மறுநாள் நீதிமன்றம்; குற்றவாளிக் கூண்டு.

எல்லாம் போய், 'ஐம்பது ரூபாய் அபராதம்; அல்லது ஒரு மாதம் கடுங்காவல் தண்டனை' என்று நீதிபதியின் தீர்ப்பும் ஆகிவிட்டது.

"ஐயா, என்னிடம் பணமில்லை. என்னை ஜெயிலில் போட்டு விடுங்கள்" என்று அழாக்குறையாகச் சொன்னான் செல்லையன்.

"அபராதப் பணத்தை நான் கொடுத்து விடுகிறேன். தயவு செய்து அவரை விட்டுவிடுங்கள், ஐயா!" வேதனை நிறைந்தவளாய், மெல்லிய குரலில் ஒரு பெண் சொல்லிக்கொண்டே அங்கு தோன்றினாள். எல்லோரும் அதிசயத்துடன் அவளைப் பார்த்தனர். நீதிபதி திரும்பிப் பார்த்தார். செல்லையனும் திரும்பிப் பார்த்தான்.

அவள்! அவளேதான்! வெட்கத்தால் தொங்கிய அவன் முகத்தில் ஒரே ஆச்சரியக் குறி கழியிட்டு நின்றது.

"நீ யாரம்மா! குற்றவாளிக்காக ஏன் பணம் கட்டுகிறேன் என்கிறாய்!" என்றார் நீதிபதி.

"அவர் என் மாமன், ஐயா! பணம் இதோ இருக்கிறது. அவரை விட்டுவிடுங்கள். உங்களுக்குப் புண்ணியம் உண்டு" என்றாள் அந்தப் பெண்.

★ ○ ✱ ○ ✱ ○ ★ ○ ✱ ○ ✱ ○ ★

## "இளம் எழுத்தாளர்கள்"

"கல்கி" இதழில், வந்த 'இளம் எழுத்தாளர்கள்' என்ற கட்டுரையைப் படித்தேன்.

ஒரு 'எக்கச் சக்கமான' விஷயத்தைக் குறித்து இவ்வளவு விளக்கமாக, விவரமாக, பட்டவர்த்தனமாக எழுதியிருப்பதைக் கண்டு நான் பெரிதும் வியந்தேன். இதற்காகத் தமிழ் மக்கள் அனைவரும் பாராட்டக் கடமைப் பட்டிருக்கிறார்கள்.

இந்தக் காலத்தில், 'கதை எழுத வேண்டும்' என்ற உணர்ச்சி ஒவ்வொருவனுக்கும் ஏற்பட்டிருக்கிறது. இந்தப் பொது உணர்ச்சியை ஒரு நல்ல அறிகுறியாக எடுத்துக் கொள்வதற்கில்லை. கதை எழுதுவதற்கு வெறும் உணர்ச்சி மட்டும் இருந்தால் போதாது. உள்ளத் துடிப்பு, தவிப்பு, நம்பிக்கை, சொல் ஆட்சி - எல்லாவற்றிற்கும் மேலாக 'எழுத்தாள மனம்' இருக்க வேண்டும்.

இப்படிப்பட்ட உண்மையான இளம் எழுத்தாளர்களுக்கு அபயம் கொடுக்கும் முறையில், ஆதரவு கொடுக்கும் விதத்தில் அருமையான தலையங்கம் எழுதியதற்காக, 'கடன்' வாங்காமல் சொந்த எண்ணங்களைக் கொண்டே கதை எழுதும் உண்மையான இளம் எழுத்தாளர்கள் சார்பில் நான், எனது உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்!

கடந்த, ஐந்தாறு ஆண்டுகளுக்குள்ளாக கதை எழுத ஆரம்பித்தவர்களின் சிருஷ்டிகள் இலக்கிய உரைகல்லில் மாற்றுக் குறைவாகக் காணப்படுவதாகக் கூறப்பட்ட போதிலும், ஆதரவு குறையக் குறையக் கதை எழுதும் திறமையும் குறைந்து கொண்டே போகும் அல்லவா!

அமரகவி பாரதியார், இலக்கியத்தையும் தமிழ் மொழியையும், பற்றிக் கூறியவைகளை நாம் இங்கு ஞாபகப் படுத்திக் கொள்ள வேண்டும். நல்ல ஆதரவு இருந்தால்தான், இலக்கிய கர்த்தாக்கள் உயர்ந்த சிருஷ்டிகளைச் செய்ய முடியும்.

விழுப்புரம்
1—2—54

டி. எஸ். கோதண்டராமன்

★ ○ ✱ ○ ✱ ○ ✱ ○ ✱ ○ ✱ ○ ✱

"அபராதப் பணம் கட்டியவுடன், செல்லையன் விடுதலையாகிப் போகலாம்" என்றார்.

நீதிபதி அடுத்த காரியத்துக்குச் சென்றார்.

அவள் இடுப்பில் செருகியிருந்த சுருக்குப் பையை வெளியே எடுத்தாள். பணம் வாங்கும் குமாஸ்தாவிடம் போனாள். எண்ணி வைத்தாள். எத்தனை நினைவுகளில் ஐம்பது ரூபாய் அங்கே காட்சி யளித்தன! எத்தனை நாட்கள் பாடுபட்டுச்சேர்த்து வைத்த பணமோ!

அபராதப் பணம் சேர்ந்துவிட்டது. குமாஸ்தா தலையை யசைத்தார். செல்லையன் வெளியே வந்தான். அவளும் தயங்கித் தயங்கி வந்தாள்.

செல்லையன் 'விடுவிடு'வென்று அவளைத் திரும்பிப் பாராமலே போய் விட்டான்.

அவளுக்குப் பொறுக்கவில்லை.

அவன்; அவளுடையவன்; அவள் கணவன். அவளைப் பாராது போகிறான்; பணம் கொடுத்து உதவியவளைப் பாராது போகிறான். அவள் மனசு எரிமலையாய்க் கொந்தளித்தது; நீர்ப் படலம் கண்களை மறைத்தது; வாய் விட்டு அழ வேண்டும்போல் அவளுக்குத் தோன்றியது.

வாயைக் கட்டி, வயிற்றைக் கட்டி, உழைத்து, சேர்த்து வைத்திருந்த பணத்தை அவன் விடுதலைக்காகச் செலவிட அவள் தயங்கவில்லை. மீண்டும் அவன் அன்பைப் பெற்று, அவனோடு இணைந்து வாழவே அவள் விழைந்தாள். ஆனால் இப்பொழுது! அவன் போய் விட்டான்.

கண்ணீரோடு கலந்து, மனம் நொந்து சிறிது நேரம் அவள் அங்கே நின்றாள்.

மறுகணம், அவள் வீட்டை நோக்கி, எட்டி நடை போட்டாள். ஆனால் வழி நெடுக, அவள் மனம் கனத்தது. இரு கண்களுமே இரு தடாகங்களாகி, கண்ணீரைத் தேக்கி வைக்கச் சக்தி யிழந்து, கன்னங்களின் வழியே வழிய விட்டன.

குடிசையில், ஒரு மூலையில் பாயை விரித்து அவள் போய் விழுந்தாள்; தேம்பினாள்; விம்மினாள்; குமுறிக் குமுறி யழுதாள்.

அதற்குள் அவள் தாய் வந்தாள்; மகள் அழுததைக் கண்டு, அவளைத் தண்டித்து விட்டார்களோ என அஞ்சினாள். அவளுக்குப் பரபரப்பு அதிகமாகியது. பயம் அவளுக்கும் கண்ணீரை வரவழைத்து விட்டது.

"தங்கம்! என்ன சமாசாரம்? அவனுக்கு என்ன ஆச்சு! சீக்கிரம் சொல்லம்மா" என்றாள்.

தாய் மகளை அணைத்துக் கொண்டாள்; தலையை வருடிக் கொடுத்தாள்.

தங்கம் சொன்னாள்; நீதிமன்றத்தில் நடந்ததைச் சொன்னாள்; ஒன்றுவிடாமல் சொன்னாள்.

"அம்மா! இதற்குத்தானா என்னை விரட்டியனுப்பினாய்! பணத்தோடு ஓடச் சொன்னாயே! கணவனை மீட்க ஓடினேன். அவர் எனக்கு இன்னமும் கிடைக்கவில்லையே!" தங்கம் மறுபடியும் கண்ணீர்ப் பெருக்கினாள்.

"தங்கம், தங்கம்" என்று செல்லையன் அவளை வளைய வளையச் சுற்றி வந்தது ஒரு காலம். அவன் இனிக்க இனிக்கப் பேசிய அந்தக் காலம் மலையேறிப் போய் விட்டது.

இப்படி வறண்ட வாழ்வில் விரட்டத்தானா செல்லையன் தங்கத்தைச் சந்தித்தான்; காதல் கொண்டான்; கல்யாணம் செய்து கொண்டான்.

அந்த இன்ப நாளை, அவள் நினைத்தாள்.

★

தாயும் மகளுமாக, தங்கமும் அவள் அன்னையும் தனித்து நின்றார்கள். வறுமைதான் சொத்


Long Life

தாய் நின்றது. வாழ வேண்டும்; அவள் தாய்ப் பொன்னிக்கு அதற்கான வழி தெரிந்தது.

கூடையிலே ஒட்டல் நடத்த அவள் துணிந்து விட்டாள். அதுவும் பிரம்மாண்டமான ஒரு ஓட்டலுக்கு எதிரிலேயே அவள் வியாபாரம் செய்தாள். இட்டிலி, தோசை, வடை, மரவள்ளிக் கிழங்கு, கண்டல்! அவளுக்கு வியாபாரம் நடந்தது; நன்றாக நடந்தது.

தங்கம் தாய்க்கு ஒத்தாசையாக இருந்தாள்.

இந்த நிலைமையில், ஒரு நாள் செல்லையன் குதிரை வண்டியைச் சாலையோரம் நிறுத்திவிட்டுக் கிழவியிடம் வந்தான்; வியாபாரம் செய்தான்; அங்கேயே உட்கார்ந்தான்; வயிற்றுப் பசியைத் தீர்த்துக் கொண்டான். அப்பொழுது அங்கு தங்கமும் இருந்தாள். அவனை அவள் ஒரு முறை பார்த்து, முகத்தைத் திருப்பிக் கொண்டாள். அவனும் அவளைப் பார்த்தான்; சிரித்தான்; பின்னர் போய் விட்டான்.

அன்று முதல் செல்லையன் தினமும் மரத்தடிக்கு வண்டி சகிதம் வந்தான்; அவன் வரும்வேளையில் தங்கமும் அங்கு இருப்பாள். இந்நேரத்தை அவன் தெரிந்து வைத்துக் கொண்டிருந்தான். அவன் கட்டழகன்; இளமைப் பருவம்; வாலிப மிடுக்கு. அவளைக் கவர்ந்திருந்தான். பழக்கம் நட்பாகி, காதலில் முற்றி, கல்யாணத்தில் நின்றது.

நகரை யடுத்த கிராமத்தைச் சேர்ந்தவன் செல்லையன். அரைக் காணி நிலக்காரன்; மனை, தோட்டமும் இருந்தன. பெற்றோர்கள் இல்லை. குதிரை வண்டி வைத்து, ஓட்டிக் கொண்டே சம்பாதிக்க ஆசை வைத்து விட்டான். தோட்டத்தை விற்றான்; குதிரையும் வண்டியுமாக வாங்கி இங்கு வந்து விட்டான்.

செல்லையன் தங்கத்தை மணந்தபின் வருமானம் இரட்டிப்பு ஆயிற்று; கிழவி சம்பாதித்தாள்; அவனும் சம்பாதித்தான். தங்கம் பணத்தை எண்ணிப் பார்ப்பதில் பூரிப்படைந்தாள். எல்லாம் இன்ப வாழ்வாகவே இருந்தது அவளுக்கு. கிராமத்தில் விற்ற தோட்டத்தை மீண்டும் வாங்கினார்கள்.

இந்த இன்பம் நான்கே ஆண்டுகள் நீடித்தன. தங்கத்தின் வாழ்வில் இன்னொருத்தி குறுக்கிட்டாள். அவள் அழகில் அவன் சொக்கிப் போய் விட்டான். அங்கேயே நேசம் வைத்து விட்டான். சம்பாதிப்பதை வீட்டில் கொடுப்பதில்லை.

விஷய மறிந்த தங்கம் துடித்தாள். அவள் வாழ்வு பறி போகிறது! முன்மேல் இருப்பது போல் உணர்ந்தாள். கணவனுக்கு நயமாகச் சொல்லிப் பார்த்தாள்; கண்டித்துப் பார்த்தாள். பலன்! அவனுக்குத்தான் கோபம் பெரிதாய் வந்தது. "நீ யார் என்னைக் கேட்க!" என்றான். அடுத்த நிமிஷம் குதிரை, வண்டி சகிதம் அவளிடம் போய்ச் சேர்ந்தான்.

அங்கேயும் அவன் தரிக்கவில்லை. வண்டியையும் குதிரையையும் விற்றுவிட்டுக் கிராமத்துக்கே போய்விட்டான். 'அவளும்' அவனோடு கூடப் போனாள். கிழவி இங்குமங்குமாக நடந்தாள்; கெஞ்சிப் பார்த்தாள். அவன் மசியவில்லை.

பழையபடி மீண்டும் தனித்த வாழ்வு, தாயும் மகளுக்கு. தாலிக் கயிறு தங்கத்துக்குச் செல்லையனை நினைவுறுத்தும்; ஏங்குவாள் அவள்.

நாளாக, மாதங்கள் தேய, வருஷங்கள் ஒன்றிரண்டு ஓட, செல்லையனைப் பற்றித் தகவல்கள் தாய் காதிலும், மகள் காதிலும் விழுந்தன.

அந்த 'அவள்' ஒருநாள் இறந்து போனாளாம். அவன் நான்கு பேர்களோடு கூடி, சுற்றித் திரிந்து, அது இது என்று வியாபாரம் செய்து, எல்லாவற்றையும் இழந்து, குடியிருக்க வீடுமில்லாது, அவதிப்பட்ட செய்தியும் அவர்களுக்கு எட்டிற்று. கிழவி அப்பொழுதுகூட அவனை நாடிப்போனாள்; வந்துவிடச் சொன்னாள். அவன் வீறாப்புப் பேசினான். "இனி ஒரு நாளும் அங்கு வரமாட்டேன். உங்கள் முகத்தில் விழிக்க மாட்டேன்" என்று முகத்தில் அடித்துப் பேசினான்.

தங்கம் தன் மறு வாழ்வைப் பற்றிய நம்பிக்கையை இழந்து நின்றாள்.

அப்பொழுதுதான் மரத்தடிக்குப் போன கிழவி, ஓட்டமாய் ஓடி மகளுக்குச் செய்தி சொன்னாள். யாரோ சொன்னார்களாம், "உன் மருமகன் மது விலக்கு வழக்கில் அகப்பட்டுக் கொண்டான். சரியாகத் தண்டித்து விடுவார்கள். அபராதம் ஐம்பது, நூறு அல்லது சிறை" என்று. பொன்னிக்கு இருப்புக் கொடுக்கவில்லை. வீட்டுக்கு ஓடியவள், கையில் இருந்த பணத்தோடு, அங்கு மிங்குமாக வாங்கிச் சேர்த்தாள். ஐம்பதுதான் தேறியது. "இதற்குள் ஆனால் ஆகுக! இல்லாவிட்டால் கடவுள் விட்டபடி யாகிறது" என்ற நம்பிக்கையோடு அவள் மகளைப் பிடித்து நீதிமன்றத்துக்குத் துரத்தினாள்.

தங்கம் ஒரு மூலையில் மறைந்திருந்து, நீதிமன்றத்து நடவடிக்கைகளைக் கவனித்தாள். செல்லையன் அவளைப் பார்க்கவில்லை.

எல்லாம் செய்து என்ன பலன் காண முடிந்தது! துவண்டு போய், வந்து விழுந்து கிடக்கிறாள் தங்கம். கிழவி முனகினாள்.

★

அன்று இரவு அவர்களுக்குச் சாப்பாடு பிடிக்கவில்லை. தங்கத்துக்கு உறக்கமே வரவில்லை. விடி சாமத்துக்குமேல் தான் தூங்கினாள்.

கோழி கூவிற்று; பொழுது புலர்ந்தது. கிழக்கே வானம் வெளுத்தது. கதிரவன் பொன்னிறக் கைகளை நீட்டி, கண் சிமிட்டி, நல்லது கெட்டது எதையும் ஒன்றெனக் கருதிச் சிரித்தான்.

தங்கம் விழித்துக் கொண்டாள். அவளுக்கு அங்கே ஒரு அதிசயம் காத்திருந்தது. செல்லையன் திண்ணையில் உட்கார்ந்திருந்தான். தன் கண்களையே நம்ப முடியவில்லை அவளுக்கு.

"அத்தான்!" என்றாள். அதற்குமேல் அவளுக்குப் பேச முடியவில்லை.

"தங்கம்!" என்றான். அவன் நா குழறியது.

"வாருங்கள் அத்தான், உள்ளே எழுந்து" என்று செல்லையனின் கையைப் பிடித்து அழைத்துச் சென்றாள் தங்கம். சிறு குழந்தை போல், அவன் போனான். அதே சமயம் அவள் உள்ளத்தில் இன்ப உணர்ச்சி ஊறிற்று. பச்சாதாபம் அவனை ஆட்கொண்டது. அவன் தெளிவு பெற்றான்.

"அத்தான், உங்கள் மனசு கல்லா!" என்றாள்.

"தங்கம், என்னை மன்னித்து விடு. இதுவரைக்கும் எனக்கு வாழத் தெரியவில்லை. கேட்பார் பேச்சைக் கேட்டு, கெட்டலைந்து போனேன். இனிமேல்தான் வாழக் கற்றுக் கொள்ளப் போகிறேன்; வாழப் போகிறேன். என் ராஜாத்தி எனக்கு வழிகாட்டுவாள்" என்றான். உணர்ச்சி வெள்ளம் அங்கே கரை புரண்டு ஓடியது. கிழவி இதை எல்லாம் பார்த்துப் பூரித்தாள்.

# டாக்டர் அறிவிக்கிறார்...



குழந்தை... எடை அதிகரித்திருக்கிறது ... படிப்படியான வளர்ச்சி ... திடகாத்திரம் ... வலிமையான கைகால்கள் ... உறுதியான பற்கள் ... சிறந்த ஆரோக்கியம் ... கிளாக்ஸோ கொடுக்கப்படுகிறது.

அயமும், விடமின் 'டி' யும் சேர்ந்து கைபடாது தயாரிக்கப்பட்ட கிளாக்ஸோ உங்கள் குழந்தையை ரிக்கெட்ஸ், இரத்த சோகை (அனீமியா) போன்ற வியாதிகளிலிருந்து பாதுகாக்கிறது. கிளாக்ஸோ கொடுப்பதால் உங்கள் குழந்தை படிப்படியான வளர்ச்சியைப் பெறுவது திண்ணம்.

**Glaxo**

**கிளாக்ஸோ குழந்தைகளுக்கான சிறந்த உணவு**

தாய்மார்களுக்கு ஓர் முக்கிய செய்தி! குழந்தைகளுக்கு முதலாவதாக கொடுக்க வேண்டிய கெட்டியான உணவு **பாரெக்ஸ்** இந்தியாவில் மறுபடியும் விற்கப்படுகிறது.



கிளாக்ஸோ லெபரட்டரீஸ் (இந்தியா) லிமிடெட் பம்பாய், கல்கத்தா, மதராஸ்

# இப்பொழுதே மலேரியாவை அகற்றுங்கள்

*நிச்சயமாக! ஆபத்தில்லாமல்! குறைந்த செலவில்!*

# 'பாலுட்ரின்'

## மலேரியாவை வீழ்த்துகிறது

**மலேரியாவின் சின்னங்களைத் தெரிந்துகொள்ளுங்கள்**

முதலில் குளிரால் நடுக்கம் உண்டாகும். ஜுரம் ஆரம்பமாகும். இதனால் உடம்பு முழுவதும் வியர்த்து வலி உண்டாகும். இந்த அறிகுறிகள் ஏற்பட்டால் உடனேயே டாக்டரைப் பாருங்கள்.

**மலேரியா கொல்லக்கூடியது**

ICP 179

எப்பொழுதும் 'பாலுட்ரின்' சாப்பாட்டிற்குப் பிறகு ஒரு டம்ளர் தண்ணீருடன் உட்கொள்ளுங்கள்.

வயதுவந்தவர்களுக்கும் 12 வயதுக்கு மேற்பட்டவர்களுக்கும்: ஒரு மாத்திரை

6 லிருந்து 12 வயதுவரையுள்ள குழந்தைகளுக்கு: அரை மாத்திரை

6 வயதுக்கு கீழ்ப்பட்ட குழந்தைகளுக்கு: கால் மாத்திரை

தினந்தோறும் ஜுரம் குணம் அடையும் வரை கொடுக்கவும்.

ICI




## 2

**ப**டுக்கை அறையில் இரவு விளக்கு 'மினுக்' 'மினுக்'கென்று எரிந்து கொண்டிருந்தது. சுத்தமாக வெள்ளையடிக்கப்பட்ட சுவரில் அந்த வெளிச்சம் பட்டுப் 'பளீர்' என்று பிரகாசித்தது. அந்த வெளிச்சத்தில் மயங்கிச் சின்னஞ் சிறு பூச்சிகள் விளக்கைச் சுற்றிப் பறப்பதும் சுவரில் வந்து உட்காருவதுமாக இருந்தன. அந்தப் பூச்சிகளை நோக்கித் தாவி அவைகளைப் பிடித்து விழுங்கித் தன் வயிற்றை நிரப்பிக் கொண்டிருந்தது ஒரு பல்லி. அப்பொழுது திடீரென்று ஏற்பட்ட அலறல் சத்தத்தைக் கேட்டுப் பல்லி துள்ளி ஓடியது.

இனியனும் படுக்கையிலிருந்து திடுக்கிட்டு எழுந்தான். அடுத்த கணம் அறையில் நிசப்தம் நிலவியது. மூச்சுப் பேச்சில்லை. இனியனின் உடல் இலேசாக நடுங்கிக் கொண்டிருந்தது. அதே சமயம் வியர்த்து விட்டுக் கொண்டுமிருந்தது. அவன் அகன்ற நெற்றி பயம் மிகுதியால் வெளுத்துப் போயிற்று. அவன் உதடுகள் துடித்தன. தன் கைகளால் கழுத்தைத் தடவிக் கொண்டே தலையைக் குனிந்து கொண்டிருந்தான். அவன் நெஞ்சு காலியாகிப் போயிருந்ததை உணர்ந்தான். அதே சமயத்தில் அறையின் கதவைத் திறந்து கொண்டு யாரோ அவசரமாக உள்ளே வருவது போல் சத்தம் கேட்டது. இனியன் தலையைத் தூக்கிப் பார்த்தான். அவன் அருமைத் தந்தையார் நின்று கொண்டிருந்தார்.




"இனியா! ஏன் இப்படி அலறினாய்!"

"ஏதோ பயங்கரமான சொப்பனம் கண்டேன். அலறி நடுங்கி விட்டேன்."

"இருட்டிய பிறகு தாமரைக் குளம் பக்கம் போகாதே, அங்கே போய்த் தனிமையில் உட்காராதே என்றால் நீ கேட்பதில்லை."

"அதெல்லாம் ஒன்றுமில்லை, அப்பா!"

"சரி, நீ இங்கே தனியாகப் படுத்திருக்க வேண்டாம்; என்னுடைய அறைக்கு வந்து படுத்துக் கொள், வா" என்றார். இலேசாக நடுங்கிக் கொண்டிருந்த இனியன் கைகளைப் பற்றி அழைத்தார்.

உணர்ச்சி நிறைந்த தன் தந்தையின் முகத்தைப் பார்த்ததும், உருக்கமான அவர் பேச்சைக் கேட்டதும் அவன் மனத்திலே ஒரு அமைதி ஏற்பட்டது. படபடப்புடன் வந்திருக்கும் தந்தையைச் சமாதானப்படுத்த முயன்றான்.

"அப்பா! நான் என்ன சிறு பையனா! ஏதோ கனவு கண்டு அலறி விட்டேன். அதைப் பற்றித் தான் இப்பொழுது நினைத்துக் கொண்டிருந்தேன். நீங்கள் அந்தச் சத்தத்தைக் கேட்டு இப்படிப் பயந்து விட்டீர்கள் என்பதை நினைக்கும்போது எனக்கே என்னமோபோல் இருக்கிறது. நான் இப்பொழுது நிம்மதியாகவே இருக்கிறேன். இங்கேயே படுத்துத் தூங்கினால்தான் எனக்குத் திருப்தியாக இருக்கும்" என்றான் இனியன்.

இனியனின் தந்தை வாயைத் திறக்கவில்லை. அவனுடைய வார்த்தைகளை அப்படியே அள்ளி விழுங்கினார். தம் மகன் இவ்வளவு அபாரமாகப் பேசுவதையும், தைரியத்துடன் இருப்பதையும், தமக்கு அருகிலே வந்து கம்பீரமாக நிற்கும் காட்சியையும் அவர் பெருமையோடு பார்த்துக் கொண்டிருந்தார். இனியன் தொடர்ந்து மேலும் சொன்னான்:

"நான் இங்கேயே படுத்துக்கொள்கிறேன். நீங்கள் போய்ப் படுத்துக் கொள்ளுங்கள் அப்பா!" என்றான். அன்போடு அவர் முகத்தைக் கூர்ந்து பார்த்தான்.

"சரி மனத்தைத் தைரியப் படுத்திக் கொண்டு படுத்துக் கொள். வெறும் அறிவு மட்டும் ஒரு நாளும் தைரியத்தைக் கொடுக்காது. இதயத்தில் உறுதி வேண்டும். அதுதான் வாழும் முறை. சாதாரண கனவுக்கெல்லாம் இப்படிப் பயந்து அலறலாமா!" என்று சொல்லிவிட்டு இனியனின் தந்தை அங்கிருந்து சென்று விட்டார்.

அவர் தெளிவாகவும், புரியும்படியும், நிதானமாகவும் சொன்னார். இனியனின் காதுகளில் அவர் வார்த்தைகள் ஒவ்வொன்றும் ஒவ்வோர் அடிபோல் விழுந்தன. அவன் உள்ளத்தில் அது ஒரு புதிய பலத்தை உண்டாக்கி விட்டது.

அவன் தான் கண்ட கனவைப்பற்றி நினைத்துப் பார்த்தான். அவனுக்கே வெட்கமாக இருந்தது. "சேச்சே! கனவில்கூடத் தற்கொலை செய்து கொள்ள நினைப்பது கோழைகளின் செயல் அல்லவா! இப்படிப்பட்ட எண்ணமே உண்டாகியிருக்கக் கூடாது. வாழ்வு எவ்வளவு இனிமையானது. நம் வாழ்க்கையை எவ்வளவு பெரிய உயர்ந்த நோக்கத்துக்காகச் செலவிடலாம். நாட்டில் செய்வதற்கு எவ்வளவு நல்ல காரியங்கள் இருக்கின்றன. ஏன் காதல் புரியும் இளைஞர்கள் கல்யாணம் செய்துகொண்டு வாழ்க்கையில் தன் நம்பிக்கையோடு வாழுவதற்கு வழி செய்யலாமே. சாதியின் பெயரால் நடக்கும் கொடுமைகளைத் தடுக்கலாமே. உழைப்பின் பெருமையை மக்களுக்கு உணர்த்தலாமே. கிராமங்களின் உயர்வுக்குப் பாடுபடலாமே. அப்பா என்ன அப்படிக் கொடிய மனம் படைத்தவரா! ஒருகாலும் இல்லை. நான் விரும்பினால் நாளைக்கே தேன்மொழியை எனக்குத் திருமணம் செய்துவைத்து விட மாட்டாரா!" என்றெல்லாம் எண்ணினான்.



அறையின் நிசப்தத்தின் நடுவே அவன் மூச்சு விடும் சத்தம் தெளிவாகக் கேட்டுக் கொண்டிருந்தது. அவனுக்கு மீண்டும் அந்தப் பயங்கரக் கனவு நினைவுக்கு வந்தது. அந்தக் கனவை எண்ணி ஒருதரம் இலேசாகச் சிரித்தான்.

அவன் கைகளால் கண்களைத் துடைத்துக் கொண்டான். அப்படி அவன் துடைத்தது, அந்தக் கனவின் பயங்கரத்தையே துடைத்து ஒதுக்கி விட்டது போல் இருந்தது. முந்திய நாள் மாலை வேளைகளில் தேன்மொழியிடம் தனித்திருந்து பேசிய இன்ப நிகழ்ச்சிகளை நினைத்தான். அப்பொழுது எழுந்த இனிய நினைவுகளில் ஈடுபட்ட வண்ணமே படுக்கையில் காலை நீட்டிப் படுத்தான். அப்படியே கண்ணயர்ந்தான்.

** ** **

மறுநாள். இனியன் சென்னைக்குப் புறப்படுவதற்குத் தயாரானான். வாசலில் இரட்டை மாட்டுவண்டி ஒன்று பூட்டித் தயாராக இருந்தது. அதில் அவன் படுக்கை, பெட்டி முதலியவைகளை எடுத்து வைத்தாகி விட்டது. அவன் எல்லாரிடமும் விடைபெற்றுக் கொண்டான். அவன் கண்கள் யாரையோ தேடின. ஆம்; அவன் தேன்மொழிதான். அவளும் அங்கே ஒரு தூணுக்குப் பின்னால் நின்று கொண்டிருந்தாள். அவளிடம் எல்லாருக்கும் முன்னால் "போய் வருகிறேன் தேன்மொழி" என்று சொல்லிக் கொண்டு போகும் அளவு தைரியம் வரவில்லை. அவளைப் பார்த்துக் கொண்டே "நான் வருகிறேன்" என்று பொதுவாகச் சொன்னான். வண்டியில் ஏறிக் கொண்டான். 'ஜல் ஜல்' என்ற சலங்கை சத்தத்துடன் வண்டி கிளம்பி விட்டது.

இனியன் "போய் வருகிறேன்" என்று சொன்னதைக் கேட்டவுடன் தேன்மொழிக்கு அங்கு நிற்கவே முடியவில்லை. அவள் விழிகள், நடுக்காட்டில் வழிதவறித் தவிக்கும் மானின் விழிகளைப் போல் மருண்டு நோக்கின. தென்றலில் நடுங்கும் மல்லிகை மலர்போல் அவள் உடல் நடுங்கிற்று. இனியனின் சொற்கள் அவளை என்னவோ செய்து விட்டன. அவள் ஒருமாதிரியாக மாறி விட்டாள். அவனுடைய வண்டியில் அவள் இதயமும் போய் விட்டது போல் உணர்ந்து வேதனைப் பட்டாள். அந்த வேதனையின் பரபரப்பை அவளால் தாங்க முடியவில்லை.

தேன்மொழி அங்கிருந்து மெதுவாக நடந்தாள். கால்கள் தாமாகவே அவள் வீட்டை நோக்கி நடந்தன. இந்தச் சமயத்தில் இனியன் ஏறிச் செல்லும் வண்டி மாட்டின் சதங்கைச் சத்தம் கேட்டது. இரண்டு கைகளாலும் காதைப் பொத்திக் கொண்டு ஒரே ஓட்டமாக வீட்டுக்கு ஓடினாள். முகத்தை மூடிக்கொண்டு குழந்தையைப் போல விம்மி விம்மி அழுதாள்.

அழுகையை நிறுத்திக் கண்களைத் துடைத்துக் கொண்டு மனசைத் தேற்றிக் கொண்டாள். இரண்டு கைகளையும் தரையில் ஊன்றிய வண்ணம் வீட்டுக் கூரையை அண்ணாந்து பார்த்தாள். அங்கு மாட்டியிருந்த அரிக்கன் விளக்கைப் பார்த்ததும் அவளுக்கு மாலை வேளை நினைவுக்கு வந்து விட்டது. தான் அவசரம் அவசரமாக விளக்கைத் துடைத்துக் கொளுத்தி மாட்டி விட்டு இனியனைப் பார்க்கத் தோட்டத்தை நோக்கிச் செல்வதை நினைத்துக் கொண்டாள். அதற்கு மேல் அவளால் அந்தச் சம்பவங்களை நினைத்துப் பார்க்க முடியவில்லை. முகத்தை மூடிக் கொண்டு விம்மி விம்மி அழ ஆரம்பித்து விட்டாள்.

இனியனின் வில் வண்டி ஊருக்கு வெளியே போகும் சாலையில் திரும்பியது. சாலையின் இரு ஓரங்களிலும் வரிசை வரிசையாக வளர்ந்து நிற்கும் தென்னை மரங்கள் இனியனை வழி அனுப்புவதற்காக அணிவகுத்து நிற்கும் ராணுவம்போல் நின்று கொண்டிருந்தன. இனியன் பின்புறம் திரும்பித் தான் விட்டுப் பிரிந்து செல்லும் அருமையான கிராமத்தைப் பார்த்தான். அந்தக் கிராமத்தில் தான் அவன் பிறந்தான். குழந்தைப் பிராயத்தைக் கழித்தான். பின்னைப் பிராயத்தில் ஓடி ஆடி விளையாடி மகிழ்ந்தான். விடுமுறை நாட்களில் கிராமத்துக்கு வந்தபோதெல்லாம் தேன்மொழியிடம் பேசிச் சிரித்துப் பாடிக் களித்தான். அவனுக்குப் புது வாழ்வும், புத்துணர்ச்சியும் ஏற்பட்டது அந்தக் கிராமத்தில்தான். ஒருநாளைப் போல் மற்றொரு நாள் இல்லாமல், முந்திய நாளைப் பிந்திய நாள் மறக்கும்படி செய்ததும், புதிய இன்பங்களும், புதிய சோகங்களும், புதிய உணர்ச்சிகளும், புதிய சிந்தனைகளும் தோன்றும்படி செய்தது அந்த அழகிய கிராமந்தான். அந்தக் கிராமத்தையும், தேன்மொழியையும் விட்டுப் பிரிவதை எண்ணித் துயரப் பட்டான்.

"ஹை, ஹை!" என்ற வண்டிக்காரன் மாட்டை அதட்டி, அதன் தலைக் கயிற்றை ஆட்டிக் கொண்டிருந்தான். தலைக் கயிற்றைச் சற்று தளர விட்டுக் கொண்டு மாட்டை அடித்து விரட்டிக் கொண்டிருந்தான். வண்டி ஓடிக் கொண்டிருந்தது. இனியன் நாற் புறமும் திரும்பிப் பார்த்தான். வழியில் தெரிந்த கிராமம் எல்லாம் அவன் உள்ளம் போலவே வறண்டு கிடப்பதாகத் தோன்றியது.

•• •• ••

நாட்கள் பல ஓடி மறைந்தன. இனியன் சென்னையில் தன்னந் தனியே கல்லூரி உணவு விடுதியில் இருந்தான். அன்று அவனுக்கு என்னவோ போலிருந்தது. கடற்கரைக்காவது போகலாம் என்று கிளம்பினான். உலகத்தின் மிக அழகிய கடற்கரையில் இரண்டாவது ஸ்தானம் வகிக்கும் சென்னைக் கடற்கரையில் இனியன் சிந்தனையில் ஆழ்ந்தவனாய் உட்கார்ந்திருந்தான்.

ஏதோ ஒரு வகைப் புரியாத விஷயம், அவன் மனத்தைக் குழப்பி அடிவயிற்றைப் பிசைந்து கொண்டிருந்தது, அவனுக்கு நன்றாய்ப் புலனாயிற்று. அந்தக் குழப்பம் பகலில் சென்னை நகரின் வீதிகளிலே நடந்து வந்தபோது கண்ட பரிதாபமான காட்சிகளால்தான் என்பதை உணரும் போது அவன் இதயம் துடித்தது.

சென்னை வீதிகளின் நடைபாதைகளில் பிச்சையெடுத்துப் பிழைக்கிறவர்கள் எண்ணற்றவர்கள் இருந்தார்கள். அவர்களில் தொத்து நோய் உள்ளவர்கள் அனேகர் இருந்தனர். அவர்கள் மக்களின் மத்தியிலே தாராளமாகப் பழகினார்கள். அங்கவீனர்களும், இயற்கையிலே விகாரமாகப் பிறந்து விட்ட ஏழை மக்களும் மிருகங்களைவிடக் கேவலமாகப் படுத்துக்கொண்டும், உட்கார்ந்து கொண்டும் இருந்தனர். அந்த அநாதைகளுக்கு ஆண்டவன் கூட இரக்கம் காட்டவில்லை. பிச்சை எடுப்பவர்கள் பலர் கால்நடையாகப் பாடிக்கொண்டே சென்றார்கள். இன்னும் சிலர் இரண்டு மூன்று பேராகவும், கூட்டம் கூட்டமாகவும், தங்கள் கையிலே குழந்தைகளைத் தூக்கிக்கொண்டு அல்லது அவர்களைக் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு சென்றார்கள்.

சோகை பிடித்து அழுக்குப் படிந்த மேனியுடைய அந்தக் குழந்தைகளைப் பார்த்தால் அவர்கள் உடலில் இரத்தம் ஓடுவதாகத் தோன்றவில்லை. உள்ளே அழுக்கு நீர் ஓடுவது போலிருந்தது. எலும்புகள் உடலைக் கிழித்துக் கொண்டு வெளியே வந்துவிடும்போல் நீட்டிக் கொண்டிருந்தன. ஒரு தடவை அவர்களைப் பார்த்தாலே போதும். சகிக்க முடியாத வேதனையால் இதயம் துடி துடிக்கத் தொடங்கி விடும். மனித இதயமுள்ள மனிதர்கள் கூசி நடுங்குவர். பசியோடு அரை நிர்வாணமாகயிருக்கும் குழந்தைகள் களைப்பு மிகுதியால் அழக் கூடச் சக்தியற்று இருந்தன. அவர்களுடைய கண்கள் சுற்றுமுற்றும் எதையோ துழாவிக் கொண்டிருந்தன. யாராவது வாழைப் பழத் தோலை உரித்துப் போட்டால் அவைகளைத் தாவி ஓடி எடுத்து அக்குழந்தைகள் ஆவலோடு தின்றன.

இந்தக் காட்சிகள் எல்லாம் இனியனின் மனக்கண் முன் வந்து வேதனைப் படுத்திக் கொண்டிருந்தன. இப்படி மனிதர்களில் ஒரு கூட்டம் வாடி வதங்குவதைப் பார்த்துக்கொண்டு அதைப்பற்றிச் சிந்தியாமல் செல்லும் வசதி படைத்த மனிதர்களை எண்ணி வருந்தினான். அவர்களுடைய நல்வாழ்வுக்கு வழி வகுக்காத சமூகத்தை நினைத்து வேதனைப் பட்டான். லட்சோபலட்சம் ஜனக் கூட்டம் உள்ள நகரத்தில் தொற்று நோய் உள்ளவர்களையாவது மக்கள் மத்தியில் நடமாட விடாமல் தடுக்க வழி செய்யக் கூடாதா என்று எண்ணினான். அவன் இதயம் லேசாக நடுங்கித் துடித்தது. இதற்குப் பொதுஜன சர்க்கார் என்ன செய்திருக்கிறது என்று எண்ணிப் பார்த்தான். அவன் தலை சுழன்றது. அவன் உள்ளம் குமுறியது. குமுறும் உள்ளத்துடன் பரந்து விரிந்து கிடக்கும் நீலக் கடலைப் பார்த்தான்.

கடலும் குமுறிக்கொண்டிருந்தது. அலைகள் புரண்டு அடித்தவாறே மணல் மீது வந்து அடங்கின. மணலில் நீர் பட்டுத் தன்னுள் இழுத்துக் கொள்ளும் சத்தம் கேட்டது. ஒன்றன் பின் ஒன்றாகப் பெரிய பெரிய அலைகள் உயர எழும்பி உருண்டோடி வந்து கரையைத் தாக்கின. ஏதோ ஒரு இசைக் கேற்ப தாளம் போடும் வகையில் கடல் அலைத்துக் கொண்டிருப்பது போலிருந்தது.

'கல கல' வென்று சிரிப்பொலி கேட்டுத் திரும்பிப் பார்த்தான். இரண்டு பேர்—ஆணும், பெண்ணும், இளம் காதலர்கள் போலிருக்கிறது. சிரித்துக்கொண்டே சென்றனர். அவர்களுக்கு இந்த உலகைப்பற்றிய சிந்தனை இருப்பதாகவே தெரியவில்லை. அவர்களைப் பார்த்தான். தான் பகலில் பார்த்த ஏழைப் பிச்சைக்காரர்களை நினைத்துப் பார்த்தான். அவர்களும் இவர்களைப் போல் உல்லாசமாக இருக்கும் காலம் வராதா! அதற்கு வேண்டிய முயற்சிகளை உடனே சர்க்காரும் சமூகமும் எடுத்துக் கொள்ளாதா என்று நினைத்தான். கணக்கற்ற செல்வம் படைத்த திருக்கோயில்கள் தமிழ் நாட்டில் ஏராளமாக இருக்கின்றன. அவைகளைப் பராமரிக்கும் மடாலயங்கள் இருக்கின்றன. அவைகள் இந்த ஏழை எளிய மக்களை, உழைக்கும் திறமையற்ற அங்கவீனர்களை எடுத்து ஆதரிக்கக் கூடாதா! என்று எண்ணி வேதனைப் பட்டான். ஒன்றும் புரியாமல் பெருமூச்சு விட்டான்.



அப்போது அவனுக்கு முன்னால் திடீரென்று பூமியிலிருந்து முளைத்து எழுந்தது போல ஒரு வாலிபன் வந்து நின்றான். இனியன் அவனைக் கூர்ந்து பார்த்தான். அந்த வாலிபன் லட்சணமாக இருந்தான். கொழு கொழு வென்றிருந்த கன்னங்களும் பெரிய கண்களும் பெற்றிருந்தான். சுத்தமாக சலவை செய்யப்பட்ட மடிப்புக் கலையாத சட்டை அணிந்திருந்தான். வெள்ளை வெளேரென்று அவன் உடுத்தியிருந்த வேஷ்டிக்கு அடியிலிருந்து 'பள பள'' வென்று மின்னும் பூட்ஸுகள் எட்டிப் பார்த்தன.

''மாணிக்கமா! வரவேணும், வரவேணும்'' என்று வரவேற்றான் இனியன்.

''என்ன இப்படித் தன்னந் தனியே வானையும் கடலையும் பார்த்துக் கொண்டு உட்கார்ந்து இருக்கிறாய்! ஏதாவது காதல் நோயோ!''

''அதெல்லாம் ஒன்றுமில்லை, மாணிக்கம். நீ எங்கே இப்படித் தனியாக வந்தாய்!''

''அதோ போகிறார்கள் பார் ஒரு காதல் ஜோடி. அவர்களைப் பார்த்தேன். எனக்குப் பழைய நினைவுகள் வந்து விட்டன. அவர்களைப் பார்த்துக் கொண்டே வந்தேன். வரும்போதுதான் உன்னைப் பார்த்தேன். என் சிந்தனை தடைப்பட்டு விட்டது'' என்றான் மாணிக்கம்.

''அவர்களைப் பார்த்துக் கொண்டு வருவானேன். அவர்கள் உனக்குத் தெரிந்தவர்களா!''

''அவர்களில் ஒருவரைத் தெரியும். அவர் என் வாழ்க்கையில் புகுந்து எனக்கு...'' என்று மேலே ஒன்றும் சொல்லாமல் நிறுத்தினான் மாணிக்கம்.

''உன் காதலுக்கு அவரால் இடையூறு ஏற்பட்டதா!'' என்று கேட்டுச் சிரித்தான் இனியன்.

''ஆமாம். அது ஒரு பெரிய கதை'' என்றான். அலைக்கும் கடலைப் பார்த்து அவனும் சிரித்தான்.

''எங்கே, சொல்லேன் கேட்கலாம்''

''காதலைப் பற்றி நீ எங்கே அறியப் போகிறாய்!'' என்று ஏளனமாகக் கேட்டு விட்டு மாணிக்கம் சொல்ல ஆரம்பித்தான்:

''இரண்டு வருஷங்களுக்கு மேலாக நான் ஒரு பெண்ணைக் காதலித்தேன். அவளும் என்னை நேசித்துக் கொண்டுதான் இருந்தாள். ஆனால் எல்லா காதலர்களுக்கும் ஏற்படும் இடையூறு எனக்கும் ஏற்பட்டு விட்டது. அவள் பெற்றோர்கள் தடை செய்து விட்டார்கள்.''

''சாதி வித்தியாசம்தானே அதற்குக் காரணம்!'' என்றான் இனியன்.

''சாதி வித்தியாச மட்டுமில்லை. அந்தஸ்திலும் ஏற்றத் தாழ்வு இருந்தது!''

''அது என்ன அந்தஸ்து!''

''அவள் பெற்றோர்கள் சாதி வித்தியாசத்தைக் கூட அவ்வளவாக லட்சியம் செய்ய வில்லை. நான் பணம் இல்லாத ஒரு ஏழை என்றவுடன் என்னை நிராகரித்து விட்டார்கள்.''

''உன் காதலி!''

''அதை ஏன் கேட்கிறாய். அவளும் எனக்கு நிறையச் சொத்து இருக்கும் என்று நினைத்திருக்கிறாள். கல்லூரியில் உள்ள மாணவர்களுக்குள் நான் கொஞ்சம் அலங்காரமாக உடைகள் அணிந்து கொள்வதுதான் உனக்குத் தெரியுமே. அதைப் பார்த்துத்தான் அவள் அப்படி நினைத்திருக்கிறாள். நான் என் குடும்ப நிலையை அவளுக்கு விளக்கிச் சொன்னேன். அவ்வளவுதான். அதற்குப் பிறகு அவள் முன்போல் பழகவில்லை. கடைசியில் ஒரு நாள் வேறு ஒரு பணக்காரக் குடும்பத்து மாணவனைக் கல்யாணம் செய்து கொண்டு கல்லூரிப் படிப்பையும் நிறுத்தி விட்டாள். இதைக் கேட்டதும் எனக்குத் 'திக்' கென்றது. என் இதயம் நின்றுவிடும் போலிருந்தது'' என்றான்.

இது வரையில் பொறுமையாகக் கேட்டுக் கொண்டிருந்த இனியன் உரக்கச் சிரித்தான். ''ஹஹ்ஹா!......என்ன காதல்! என்ன காதல்! பணத்துக்காக உன்னை அவள் காதலித்தாள். இல்லையா! ஹஹ்ஹா...'' என்று கூறிச் சிரித்தான்.

மாணிக்கம் தன் மீது ஏதோ இடி விழுந்ததைப் போலத் துடித்து விட்டான். காதலில் ஏமாந்ததைவிட மோசமானதாகத் தோன்றியது, இனியன் சிரித்தது. அவனுக்குக் கோபம்கூட வந்தது. இருந்தாலும் அடக்கிக் கொண்டே ''அந்தத் தம்பதிகள் தான் அவர்கள்'' என்று சொல்லி நிறுத்தினான் மாணிக்கம்.

இதைக் கேட்டதும் இனியனுக்கு இன்னும் சிரிப்பு வந்து விட்டது. ''இது தான் காதலா!'' என்று கேட்டான். மாணிக்கத்தைப் பார்த்துப் பார்த்துச் சிரிக்க ஆரம்பித்து விட்டான்.

''சிரிப்பதற்கு என்ன இருக்கிறது!'' என்று கோபமாகக் கேட்டான் மாணிக்கம்.



அவன் கோப முகத்தைப் பார்த்தவுடன் இனியனுக்குச் சிரிப்பை அடக்க முடியவில்லை. வாயை மூடிக் கொண்டு வயிறு குலுங்கச் சிரித்தான். அவன் கண்கள் அகல விரிந்தன. மீண்டும் வெடி போல் கிளம்பியது சிரிப்பு.

**மா**ணிக்கம் அங்கிருந்து எழுந்து சற்று விலகிச் சென்று எவ்விதமான சிந்தனையுமின்றிக் கடலைப் பார்த்துக் கொண்டிருந்தான். கடலும் அவன் செயலை நினைத்து எள்ளி நகையாடுவது போலிருந்தது. கடல் அலைகள் அவனைப் பார்த்துச் சிரித்தன. அவன் தனக்குப் பின்னால் யாரோ வருவதை உணர்ந்து திரும்பிப் பார்த்தான்.

"கோபித்துக் கொள்ளாதே மாணிக்கம். உன் காதல் கதையைக் கேட்டால் என்னால் சிரிக்காமல் இருக்க முடியவில்லை. இப்படிப்பட்ட காதல் கதையை நான் கேட்டதே இல்லை. அது கிடக்கட்டும். அதனால் மனம் உடைந்து படிப்பை நிறுத்தாமல் இருந்தாயே! அந்த வரையில் க்ஷேமம்."

"நான் மேலே படிக்க வேண்டும் என்பதற்காகத்தானே அவளைக் கலியாணம் செய்து கொள்ள முயன்றேன். அவள் பணத்துக்காகத் தானே அவள் ஒரு தாழ்ந்த சாதிப் பெண் என்பதை அறிந்தும் அவளைக் கல்யாணம் செய்து கொள்ள முன் வந்தேன்!" என்றான்.

இதைக் கேட்டதும் இனியனுக்கு மீண்டும் சிரிப்புப் பீறிக் கொண்டு வந்து விட்டது. தன் வயிற்றைப் பிடித்துக் கொண்டு சிரித்தான். "பேஷ்! பேஷ்! நல்ல காதல்! நல்ல காதல்! இப்படிப்பட்ட காதலைப் பற்றி எனக்கு ஒன்றும் தெரியாதுதான்" என்றான். அப்பொழுது அவன் உள்ளத்திலே எத்தனை எத்தனையோ எண்ணங்கள் தோன்றிக் கொண்டிருந்தன. எல்லாவற்றையும் சொல்லத் துடித்தான்.







சென்னை கோகலே மண்டபத்தில் ஜனவரி 17உ மாணவர் மன்றத்து 22-ம் ஆண்டு நிறைவு விழா நடைபெற்றது. நீதிபதி கிருஷ்ணசாமி நாயுடு, ஸ்ரீ பி. டி. ராஜன், ராஜா சர் முத்தையா செட்டியார், ஸ்ரீமதி ஜோதி வெங்கடாசலம் முதலியவர்கள் விழாவில் முக்கிய பங்கு ஏற்றுக் கொண்டனர். மன்றத் தலைவி திருமதி தர்மாம்பாள் தலைவர்களை வரவேற்றார்.

---

ஒரு விஷமக்காரக் குழந்தை சாதுவாகப் பேசுவது போல் சிரிப்பை அடக்கிக் கொண்டு அவன் உற்சாகத்துடன் பேசத் தொடங்கினான்:

"மாணிக்கம்! பணத்துக்காக எல்லாம் விலை போனதைக் கேட்டிருக்கிறேன். காதலும் விலை போனதை நான் கேள்விப்பட்டதே இல்லை. நீ படித்தவன். உலகம் தெரிந்தவன். ஒரு உயர்ந்த லட்சியத்துக்காக வாழ வேண்டியவன். பணத்துக்காக ஒரு பெண்ணைக் காதலிப்பதற்குக் காதல் என்று பெயரா? எல்லாம் வாழ்க்கைக்கு உபயோகமில்லாத இந்தக் கல்லூரிப் படிப்பில் உள்ள குறைதான். உன்னைப்போல் ஒரு சாதாரண தொழிலாளி, உழவன் இப்படிச் செய்வானா? மாட்டான். அவனுக்குத் தெரியும், அன்பு என்றால் என்ன என்று! அவன் வெளி வேஷத்தால் மயங்க மாட்டான். உழைத்துப் பாடுபடுபவன் ஆயிற்றே. உன்னைப் போன்றவர்கள் பின்னால் பொறுப்பு வாய்ந்த உத்தியோகத்துக்குப் போய்விடுகிறார்கள். பணத்துக்காக எதையும் செய்யத் துணிந்து விடுகிறார்கள். அவர்களுக்குக் கடமை உணர்ச்சி என்ன என்பது தெரிவதில்லை. பணத்துக்காக எதையும் செய்யலாம் என்பதைத்தான் அவர்கள் தெரிந்து கொண்டிருக்கிறார்கள்" என்றான் இனியன். அவன் உள்ளத்திலே உணர்ச்சியோடு கூடிய ஒரு சிக்கலை ஒளிவிட்டுக் கொண்டிருந்தது. உன்னதமான ஓர் ஆனந்தம் அவன் இதயத்திலே பிரகாசித்துக் கொண்டிருந்தது. அவன் உணர்ச்சியை வெளியே சொல்ல மேலே வார்த்தைகள் கிடைக்காமல் மௌனமானான். தன் அகன்ற கண்களால் மாணிக்கத்தை ஊடுருவிப்பார்த்தான்.

"இனியா! நீ சொன்னதெல்லாம் சரிதான். என்னுடைய காதல் கதையைக் கேட்டு எள்ளி நகையாடி எனக்கு நீ ஒருவன்தான் அறிவூட்டினாய். இப்பொழுது எனக்கு எல்லாம் தெளிவாகி விட்டது" என்றான். "நான் இதுவரையில் எத்தனையோ புத்தகங்களில் படித்துப் புரிந்து கொள்ள முடியாத விஷயங்களை நீ ஒரு சில நிமிஷங்களில் எனக்குக் கற்றுக் கொடுத்து விட்டாய். வாழ்வது எதற்கு என்பதைத் தெரிந்து கொண்டேன்" என்று சொன்னான்.

இந்தச் சமயத்தில் மயிர் அடர்ந்த மூன்று பெரிய நாய்கள் திடீரென்று அவர்கள்மீது பாய்ந்தன. பேசிக் கொண்டிருந்த மாணிக்கம் கூச்சலிட்டுக் கொண்டே தரையில் சாய்ந்தான். இனியன் தன் தோளில் கிடந்த துண்டை எடுத்துக் கையில் சுற்றிக்கொண்டு அந்த நாய்களைத் தடுக்க முயன்றான். இரண்டு விரல்களை வாயில் வைத்துக் கொண்டு பலமாகச் சீட்டி யடித்தான். அவைகள் பின் நோக்கி ஓடின. அப்பொழுது அவர்களை நோக்கி யாரோ ஓடி வருவது தெரிந்தது. "மன்னிக்க வேண்டும். அவை என்னுடைய நாய்கள்தான். அவை ஒன்றும் செய்யாது" என்ற குயிலினும் இனிய ஒரு பெண்ணின் குரல் கேட்டு இனியன் தலையை உயர்த்திப் பார்த்தான்.

அவனுக்கு உடனே தன் அருமைத் தேன் மொழியின் நினைவு வந்து விட்டது.

தன்னை யறியாமலே அவன் நிமிர்ந்து அவளை நேருக்கு நேர் பார்த்தான். அவளது நீண்ட கண்கள், கவலை யில்லாமல் துடி துடிக்கும்

உதடுகள், புன் சிரிப்பினால் அவைகள் இலேசாக அசைந்த கோலம் எல்லாவற்றையும் பார்த்தான். அவள் அணிந்திருந்த மஞ்சள் நிறப் புடவை அவள் உடம்புக்கு மிகப் பொருத்தமாக இருந்தது.

இனியன் சிறிது நேரம் வாய் பேசாமல் அவளைப் பார்த்துக் கொண்டிருந்தான். அதற்குள் அவளுடன் வந்த வேலைக்காரன் நாய்களைப் பிடித்து இழுத்துக் கொண்டு கார்கள் நிற்கும் இடத்தை நோக்கி விரைந்து சென்றான்.

அவள் மட்டும் இனியனைக் கடைக் கண்ணால் பார்த்துக் கொண்டிருந்தாள். அப்போது அவள் கண்கள் விநோதமாகப் பிரகாசித்தன.

இனியன் மிகவும் சிரமப்பட்டு, "அதனால் பாதகமில்லை" என்று மறுமொழி சொன்னான்.

அதற்குள் கீழே மணலில் விழுந்து கிடந்த மாணிக்கமும் எழுந்து கொண்டான்.

"அடடா, சுந்தரியா! உன்னுடைய நாய்களா! எப்படிப் பயமுறுத்தி விட்டன!" என்றான். இனியனைப் பார்த்து, "சுந்தரியும் நம் கல்லூரியில்தான் படிக்கிறாள். இந்த ஆண்டு கல்லூரி தமிழ்க் கழகத்தின் காரியதரிசியாகச் சுந்தரியைத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள்" என்றான்.

"வணக்கம்" என்றான் இனியன்.

சுந்தரியும் பதிலுக்கு "வணக்கம்" என்றாள். இனியன் சுந்தரியைப் பார்த்தான். அவளது மின்னும் கண்கள் அவனைப் பார்த்துச் சிரித்தன. அது கொல்லும் சிரிப்பு: பொல்லாத மோகனச் சிரிப்பு! அவளும் ஒரு முறை தோளைக் குலுக்கிக் கொண்டு 'களீர்' என்று சிரித்தாள்.

"உங்கள் இனிய பேச்சுக்கு மத்தியில் நாயை விட்டுக் கெடுத்து விட்டேன்" என்றாள்.

"அதெல்லாம் ஒன்றுமில்லை. எங்கள் பேச்சும் முடிந்து விட்டது. நாங்கள் விடுதிக்குத் திரும்பும் நேரமாகி விட்டது என்பதை உணர்த்துவது போல்தான் இருந்தது உங்கள் நாயின் விளையாட்டுத்தனம்" என்றான் இனியன்.

இனியன் சொல்லுவதை ஆமோதிப்பது போல மாணிக்கம் தலையை ஆட்டினான். தன் உடலில் இருந்த மணலைத் தட்டிக்கொண்டே சுந்தரியையும், இனியனையும் பார்த்துச் சிரித்தான்.

சுந்தரி இனியனைப் பார்த்தவுடனேயே அவனுடைய உயர்ந்த குணங்களைத் தெரிந்து கொண்டாள். "நீங்கள் எனக்கு ஒரு உதவி செய்ய வேண்டும்" என்று கேட்டாள்.

"என்னால் செய்யக் கூடிய உதவியாயிருந்தால் செய்கிறேன். ஒரு கல்லூரி மாணவன் என்ன உதவி உங்களுக்குச் செய்துவிட முடியும்?"

"ஒரு கல்லூரி மாணவர் இதர கல்லூரி மாணவர்களுக்காகச் செய்யக் கூடிய ஒரு முக்கியமான உதவியைத் தான் கோருகிறேன்."

"மாணவர்களுக்காக வேண்டுமானால் அதைக் கட்டாயம் செய்கிறேன்."

"தாங்கள் அடுத்த தமிழ்க் கழகக் கூட்டத்தில் வந்து பேச வேண்டும்" என்றாள்.

"எதைப் பற்றிப் பேசுவது?"

"எதைப் பற்றி என்பதைப் பிறகு சொல்லுகிறேன்" என்றாள் சுந்தரி. மாணிக்கத்தை ஒரு தடவை திரும்பிப் பார்த்தாள்.

மாணிக்கம் அதை ஆமோதிப்பதைப் போல் தலையை ஆட்டினான். அவர்கள் இருவரையும் பார்த்து இலேசாகச் சிரித்தான். அந்தச் சிரிப்பில் அவன் உதடுகள் அசைவதைப் பார்த்தால், அவன் தனக்கு மட்டுமே கேட்கும் ஒரு ரகசியத்தை முணு முணுப்பது போலிருந்தது.

"வாருங்கள். என் காரிலேயே போகலாம். உங்கள் இருவரையும் கல்லூரி விடுதியில் கொண்டு போய் விட்டு விட்டு வருகிறேன்" என்றாள்.

இனியன் ஏதோ ஆழமான சிந்தனையில் தன்னையே மறந்து விட்டான். மாணிக்கத்தையும், சுந்தரியையும் மாறி மாறிப் பார்த்தான். அவனுடைய உணர்ச்சிகளை அவர்கள் தெரிந்து கொள்ளாமல் இருக்க வேண்டும் என்பதற்காக மிகச் சிரமப்பட்டான்.

"ஆகா! காரிலேயே போகலாம்" என்றான். சுந்தரியைப் பார்த்து மெதுவாகச் சிரித்தான்.

மூன்று பேரும் பேசாமல் நடந்தனர். அவர்களுடைய பாதங்கள் கடற்கரை மணலில் புதைந்து புதைந்து எழுந்தன. எனவே அவர்கள் மெதுவாகத்தான் நடந்து சென்றனர்.

இனியனின் மனத் திரையில் தேன் மொழியின் அழகிய உருவம் கம்பீரமாகத் தோன்றியது. அவள் சுருண்ட கருத்த கேசம் தோளிலும் மார்பிலும் புரளக் காட்சியளித்தாள். அது "சுந்தரியுடன் போகாதே!" "சுந்தரியுடன் போகாதே!" என்று அவனைத் தடுத்து நிறுத்துவது போலிருந்தது.

இப்படியாக அவன் ஒரு கணம் தேன்மொழியைப் பற்றியும், அடுத்த கணம் தனக்கு முன்னே செல்லும் சுந்தரியைப் பற்றியும் நினைத்தான். அவன் மனம் என்னவோ தேன்மொழியைப் பற்றித்தான் நினைத்துக் கொண்டிருந்தது. அந்த மணல் வெளியில் அவனுக்கு வெகு சமீபமாக இருந்தாள் சுந்தரி. அவன் மனம் ஒரு நிலையில் இல்லாமல் பேதலித்தது. எனவே அவன் தன்னுள் இருக்கும் குழப்பத்தை மூடி மறைக்க முயன்றான். அதற்காக எதையாவது பேசி மனத்தை வேறு வழிக்குத் திருப்ப நினைத்தான். என்ன பேசுவது என்றே தெரியாமல் விழித்தான்.

அவர்களுக்கு முன்னால் கடற்கரை மணல் பரந்து கிடந்தது. அந்த மணல் வெளியில் பல தரப்பட்ட மனிதர்கள் உட்கார்ந்து உல்லாசமாகப் பொழுது போக்கிக் கொண்டிருந்தனர். அவர்கள் உள்ளத்தில் எல்லாம் என்ன என்ன, எண்ண அலைகள் மோதிக் கொண்டிருக்கின்றனவோ என்று எண்ண மிட்டான் இனியன்.

அப்போது முன்னால் சென்று கொண்டிருந்த சுந்தரியின் மஞ்சள் புடவை காற்றிலே படபடத்த சத்தம் கேட்டு அவளைப் பார்த்தான். அவள் பொற்பாவை போல மணலில் அசைந்து நடந்து சென்று கொண்டிருந்தாள்.

கடல் அலைகளின் மெல்லிய நாதம், கடலின் மணம் நிறைந்த 'ஜில்'லென்ற காற்றில் கலந்து வந்து அவர்களைத் தழுவிக் கொண்டு சென்றது.

சுந்தரி இனியனைத் திரும்பிப் பார்த்து ஒரு குறுநகை புரிந்தாள். பவழம் போன்ற உதடுகளுக்கு மத்தியில் முத்துக்கள் போன்று ஒளி வீசிய அவள் பற்கள் அவனைச் 'சட்'டென்று எட்டிப் பார்த்து விட்டு மறைந்தன.

அந்தக் கடற் கரையிலே அமர்ந்திருந்தவர்களில் யாரோ ஒருவர் தன்னுடைய இனிய குரலிலே கம்பீரமாகப் பாடிக் கொண்டிருந்தார்.

மாடுமனை போனலென்ன?
மக்கள்சுற்றம் போனலென்ன?
கோடிச்செம்பொன் போனலென்ன? - இனியே
குறுநகை போதுமடி!

அந்தப் பாட்டுக் குரல் கடல் வெள்ளத்தில் மோதி இனிமையாக ஒலித்தது. (தொடரும்)

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press,
No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras 10.


"வெண்மையான, சுத்தமான
லக்ஸ் டாய்லட் சோப்பின்
நுரை மிகவும் மிருதுவானது, நறுமணம்
கமழ்வது . . ."
என்கிறார் நிருபா ராய்
LUX
இந்தியாவில் தயாரித்தது.
நிருபா ராய் மேலும் கூறுவதாவது: "சுத்தமான, வெண்மையான லக்ஸ் டாய்லட் சோப் ஒன்றுதான் என் சருமத்தை நன்றாக சுத்தம் செய்கிறது. அதன் மிருதுவான நுரை சருமத்தின் துவாரங்களில் புகுந்து மேனியின் இயற்கை அழகை வெளிக்கொண்டு வந்து, ஒரு தனிப்பொலிவை அளிக்கிறது. இந்த சுத்தமான, வெண்மையான சோப் சருமத்திற்கு அளிக்கும் நறுமணத்தையும் நான் மிகவும் விரும்புகிறேன்."
". . . அதனால்தான் என் சருமத்தை
எழிலோங்கச் செய்ய லக்ஸ் டாய்லட்
சோப்பைத் தேர்ந்தெடுத்திருக்கிறேன்."
சினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப் ★
LTS. 410-50 TM

REGD. NO. M. 4392
*Registered as a newspaper in Ceylon*

